# அட்டவணை வாகடம்




தஞ்சாவூர், மகாராஜா சரபோஜியின்

**சரசுவதி மகால் நூலகம்**

தஞ்சாவூர்.

தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீட்டு எண். 323

# அகத்தியர் அட்டவணை வாகடம்


*சிறப்புக் கேண்மைப் பதிப்பாசிரியர் :*

டாக்டர். **ச. அரங்கராசன்,** பி. ஐ. எம்.,

மாவட்ட மருத்துவ அலுவலர் (ஓய்வு)

தஞ்சாவூர்






**தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்**

**சரசுவதி மகால் நூலகம்,**

**தஞ்சாவூர்.**

2007

விலை : ரூ. **130-00**

# நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு


| | |
|---|---|
| நூற்பெயர் | : அகத்தியர் அட்டவணை வாகடம் |
| பதிப்பாசிரியர் | : டாக்டர். ச. அரங்கராசன், பி. ஐ. எம்., |
| வெளியிடுபவர் | : இயக்குநர்,<br>சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர். |
| வெளியீட்டு எண். | : 323 |
| மொழி | : தமிழ் |
| பதிப்பு | : இரண்டாம் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : மார்ச்சு, 2007 |
| தாள் | : டி. என். பி. எல். 18.6 கி. கி. |
| நூல் அளவு | : 24 x 14 செ. மீ. |
| பக்கங்கள் | : 412 |
| படிகள் | : 500 |
| எழுத்து | : 12 புள்ளி |
| அச்சிட்டோர் | : சரசுவதி மகால் நூலகம். |
| புத்தகக்கட்டு | : மெலிந்த அட்டை |
| பொருள் | : மருத்துவம் |
| விலை | : ரூ. 130-00 |

# வெளியீட்டாளர் முகவுரை

அகத்தியர் அட்டவணை வாகடம் என்ற அரிய சுவடி ஒன்று சரசுவதி மகால் நூலகத்தில் உள்ளது. (சுவடி எண். 699). இது சித்த மருத்துவத் துறையில் எளிதில் செய்து பயன்படுத்தக் கூடிய மருந்துகளைப் பற்றி மிகவும் சிறந்தமுறையில் கூறுகிறது. இந்நூலில் கூறப்பட்டுள்ள மருந்துகள் பிணியுற்ற மக்களுக்குப் பலவகையிலும் பயன்படக் கூடியவை. தஞ்சையின் சரபோசி மன்னர் தம் நூலகத்தில் சித்த ஆயுர்வேத மருத்துவ முறைகளுடன் மேனாட்டு மருத்துவ முறைகளைப் பற்றிய நூல்களையும் வாங்கி வைத்துள்ளார். மருத்துவ ஆராய்ச்சிக்கு இவை பெரிதும் உதவுகின்றன. தஞ்சையில் சோழர் காலத்தே மருத்துவச் சாலைகளை நிறுவி மக்களுக்குத் தொண்டாற்றிய செய்திகளைக் கல்வெட்டுக்கள் எடுத்துக் கூறுகின்றன.

இத்தகைய சிறப்புகள் பொருந்திய தஞ்சையில் சரசுவதி மகால் நூலகம் அட்டவணை வாகடம் என்னும் இந்நூலினை வெளியிடுவது சிறப்பானதாகும். டாக்டர் ச. அரங்கராசன் அவர்களால் பதிப்பிக்கப்பெற்ற இந்நூல் தற்சமயம் இரண்டாம் பதிப்பாக வெளிவருவது மிகவும் மகிழ்ச்சிக்குரியதாகும்.

பல்வேறுபட்ட மருந்துகளை எல்லாம் பிரித்து அகர வரிசையில் பத்துப் பெரும் பிரிவுகளாக மாற்றி ஆசிரியர் அவர்கள் எழுதியுள்ளார். அனுபோக வைத்திய பிரம்ம ரகசியம், அனுபோக வைத்திய தேவரகசியம், அனுபோக வைத்திய நவநீதம் போன்ற நூல்களின் அமைப்பையே

பின்பற்றி ஆசிரியர் எழுதியுள்ளது குறிப்பிடத்தக்கது. புற மருந்துகளின் பிரிவு தனியாக இடம் பெறுகின்றது. தற்கால அளவு முறைகளுடன் பிறைக்கோட்டுக்குள் பழைய அளவுமுறைகளும் தரப்பட்டுள்ளன. மேலும் பொதுவியல் என்ற பகுதியில் பொருட்களின் பண்பும், மருந்துகள் தொடர்பான செய்திகளும் உள்ளன. சங்க இலக்கியத்தில் மருத்துவம் பற்றிய செய்திகளில் சில நூல் வரலாறு, நூலாசிரியரின் வரலாறு, வழக்குச் சொற்பட்டியல் என்பனவும் இடம் பெறுகின்றன.

இந்நூலினை கணினியில் அச்சிட்ட கணினி பிரிவினர் அனைவருக்கும், இந்நூல் நன்முறையில் வெளிவர ஆவனசெய்துள்ள நூலக நிருவாக அலுவலர் மற்றும் வெளியீட்டு மேலாளர் (பொறுப்பு) வகிக்கும் திரு. சாமி. சிவஞானம் அவர்களுக்கும் என்னுடைய பாராட்டுக்கள்.

சித்த மருத்துவத்தின் வளர்ச்சிக்குக் காரணமான இந்நூல் சித்த மருத்துவர்களுக்கும், ஆர்வலர் மற்றும் ஆராய்ச்சியாளர்களுக்கும் பெரிதும் பயன்படும் என்பது உறுதி.

**சா. விஜயராஜ் குமார்,** இ. ஆ. ப.,
மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும்
இயக்குநர்,
சரசுவதி மகால் நூலகம்.

*தஞ்சாவூர்*
*6-3-2007*

## தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின் சரசுவதி மகால் நூலகம்
## அரண்மனை வளாகம், தஞ்சாவூர் - 613 009

ஏட்டுச்சுவடிகளைக்கொண்ட பழம்பெரும் நூலகமான சரசுவதி மகால் நூலகம் வெளியிட்டுள்ள குறிப்பிட்ட சில தமிழ் நூல்களின் விலைப்பட்டியல்.

| | |
|---|---|
| 1. மலையருவி | ரூ. 150-00 |
| 2. கணக்கதிகாரம் | ரூ. 150-00 |
| 3. திருக்குறள் | ரூ. 75-00 |
| 4. இலக்கணக்கொத்து | ரூ. 65-00 |
| 5. ஆஸ்தான கோலாகலம் | ரூ. 100-00 |
| 6. நாலடியார் உரைவளம் பாகம், | ரூ. 165-00 |
| 7. ஜாதக அலங்காரம் | ரூ. 125-00 |
| 8. நட்சத்திர சிந்தாமணி | ரூ. 300-00 |
| 9. காலப்பிரகாசிகை | ரூ. 100-00 |
| 10. காலச்சக்கரம் | ரூ. 50-00 |
| 11. மேகவாகடத்திரட்டு | ரூ. 50-00 |
| 12. பாண்டுகாமாலை சிகிச்சை | ரூ. 40-00 |
| 13. சித்தமருத்துவ ஆய்வுக்கோவை | ரூ. 125-00 |
| 14. வைத்திய ரத்னாவளி | ரூ. 160-00 |
| 15. அகத்தியர் 110 | ரூ. 30-00 |
| 16. இராமதேவர் சூத்திரம் | ரூ. 75-00 |
| 17. மாடு, குதிரை வைத்தியம் | ரூ. 40-00 |
| 18. தஞ்சை நாயக்கர் வரலாறு | ரூ. 205-00 |
| 19. சரசுவதி மகால் வழிகாட்டி | ரூ. 20-00 |
| 20. மனோரா | ரூ. 60-00 |
| 21. மயமதம் | ரூ. 250-00 |
| 22. நீதி வெண்பா | ரூ. 30-00 |

மேலும் அனைத்து நூல்களின் விலைப்பட்டியல் வேண்டுவோர் இலவசமாக சரசுவதி மகால் நூலகத்திற்கு கடிதம் மூலம் தொடர்பு கொள்ளலாம். சரசுவதி மகால் விற்பனை செய்யும் ரூ. 10/- முதல் 49 வரை விலையுள்ள நூல்களுக்கு 10% கழிவும் ரூ. 50/- முதல் 199/- வரை 20% கழிவும், ரூபாய் 200/-க்குமேல் 30% கழிவும் உண்டு.

**இயக்குநர்,**
**சரசுவதி மகால் நூலகம்.**

# OUR OTHER PUBLICATIONS

| | | |
|---|---|---|
| Nauka Charitram | Sanskrit & Tamil | 30-00 |
| Sita Kalyanam | Sanskrit & Tamil | 35-00 |
| Gayatri Kosam | Sanskrit & Tamil | 30-00 |
| Ragaratnakaram | Sanskrit & Tamil | 15-00 |
| Dhanyakumaracharitram (Dharmaneri Kathai) | Sanskrit & Tamil | 44-00 |
| Kandukapura Mahatmyam | Sanskrit & Tamil | 25-00 |
| Ramachinthamani Aaruudam (Nandinagari Catalogue) | Sanskrit & Tamil | 25-00 |
| Vruttaratnavali (Chandas Sastram) | Sanskrit & Tamil | 30-00 |
| Kalanandakam | Sanskrit & Tamil | 55-00 |
| Prabodha Chandrika (Grammer) | Sanskrit & Tamil | 70-00 |
| Sirungarakosam | Sanskrit | 12-00 |
| Vedasara Siva Sahasram | Sanskrit | 80-00 |
| Stotra Ramayanam | Sanskrit | 25-00 |
| Mukunda Vilasam | Sanskrit | 35-00 |
| Vinatananda Vyayoga | Sanskrit | 40-00 |
| Kumaresa Satakam | Tamil | 65-00 |
| Lokaswarupam | Tamil | 75-00 |
| Kanakkathikaram | Tamil | 150-00 |
| ThiruvappanurPuranam | Tamil | 50-00 |
| Sowmiya Sagaram | Tamil | 70-00 |
| Jatakachandrika | Tamil | 40-00 |
| Marathi Lavani Songs | Marathi | 35-00 |
| Nakshatra Chinthamani (Part - I) | Tamil | 200-00 |
| Nakshatra Chinthamani (Part - II) | Tamil | 100-00 |

# AN APPEAL

Manuscripts on Palmleaf or Paper of the ancient works of the wise men of the past, are the great treasures, solely inherited by the Nation and it is the moral obligation of persons who possess them to preserve them safely for the future generations of mankind.

Probably you have some of these in your possession or you know friends or neighbours who possess them. You can make a great contribution to the cause of the preservation not only of our National Culture but also to the Culture of Humanity as a whole by arranging to present such manuscripts to the famous T. M. S. S. M. Library, Thanjavur.

The Manuscripts so presented will be accepted and acknowledged with pleasure and gratitude by the authorities of the Library, preserved with meticulous care and made available to successive generations of readers and scholars for study and research. The hitherto unpublished works found among them, will be printed and published in due course, as facilities occur, with the expression of the Library's gratitude for your gift.

The great Scholar King of Tanjore, **Rajah Serfoji,** has attained immortal fame by dedicating enormous time and wealth to the expansion and firm establishment of this world famous **"Sarasvati Mahal Library".** It is open to you to share the honour of Serfoji, in your own measure by contributing your manuscripts to the great institution built by him.

This great Honour is beckoning to you to accept it. Will you hasten to take it up? The Library waits for your answer.

**DISTRICT COLLECTOR AND DIRECTOR**
**Sarasvati Mahal Library,**
**Thanjavur.**

படுகிறது "மாடடுக்கு வரும் அடைப்பான், தெரியன்கொல்லி என்னும் நோய்களுக்கு வேலிப் பருத்திச் சாற்றில் தந்து, வெந்நீர் காட்டவும், அளவு தேற்றான் கொட்டை;" என்று கருத்த குழம்பில் வருகின்றது. 'மாட்டுக்கு வரும் அடைப்பானுக்கு ஒரு கொட்டையை உரைத்து நாக்கில் தடவவும் என்று இன்னாச்சி கொட்டை என்ற முறையில் வருகின்றது.

நூலின் முகப்பில் 'அகத்திய முனி' அருளிய என்ற சொல் குறிப்பிடப்பட்டுள்ளது. நூலில் இதற்குத்தக்க சான்றுகள் இல்லை. எனினும் "இலிங்கக்குழம்பு" கூறும் பாடலின் முதலடியில் "சோதிலிங்கத்தின் மொதிகையே சாமி, அட்தானப் பணிந்து" என்று வருவதைக்கொண்டு இது அகத்தியரின் நூல் என்பதாக எழுதப்பட்டிருத்தல் கூடும், ஆயினும் இது சரியல்ல என்பதற்கும் சில சான்றுகள் உள்ளன.

"திருத்தமாகத் தீரும் என்று
தெய்வ முனிவர் செப்பியதே" — லோகச்செந்தூரம்

"இத்தினி பலவும் தீரும் என்று
இயம்பும் வியாசர் மொழியாமே."
— அரிதாரச்செந்தூரம்

எனவே அகத்தியரின் நூல் என்பதற்கான சான்றுகள் இல்லை, ஆயினும் இலிங்கக்குழம்பு என்ற தலைப்பில் உள்ள பாடல் அகத்தியருடையதாகவோ அல்லது அவரின் வழி மருத்துவம் செய்பவரின் பாடலாகவோ இருத்தல் கூடும்.

இந்நூல் தென் மாவட்டத்தைச் சேர்ந்த ஒருவருடையதே என்பதற்கான சான்றுகள் உள்ளன. அவற்றை எல்லாம் திரட்டி வழக்குச் சொற்பட்டியல் என்ற தலைப்பில் தந்துள்ளேன்.

வட்டார வழக்குகளை ஆய்வுசெய்யும் ஆய்வாளர்களுக்கும், அகராதி செய்பவர்களுக்கும் இது பயன்படுதல் கூடும்.

மணி மந்திர மருந்து என்ற முறையின்படி இந்நூலும் உள்ளது. வசியமுறைகளும் சக்கரங்களும் இடம் பெற்றுள்ளன. அவற்றில் சில இந்நூலில் இடம் பெற்றுள்ளன. இடைக்கால இலக்கியங்களில் குறிப்பாகப்பள்ளு இலக்கியத்திலும், நாட்டார் பாடல்களிலும் வசியமுறை இடம் பெறுகின்றது.

செஞ்சொட்டி அடிஒட்டி நின்று[1]
சிணுங்கி, யானை வணங்கி பிணங்கி
மஞ்சட்டி ஆடைஒட்டி பேய்எட்டி,
மடிசீலை போட்டி, தொட்டில்லாடி
நஞ்சொட்டி அமுகண்ணி ஊமத்து
நரிவிரட்டி தொழுகண்ணி வித்தும்
நெஞ்சொட்டிப்போகக் கள்ளிலே
நிரம்பவே மருந்திட்டின் ஆண்டே

**உரை:**

செஞ்சொட்டி, அடிஒட்டி, நின்று சிணுங்கி, யானை வணங்கி (நெருஞ்சில்) மஞ்சட்டி, ஆடை ஒட்டி, பேய் எட்டி, மடிசீலை, நஞ்சொட்டி, ஊமத்தை நரிவிரட்டி, தொழுகண்ணி விதை இவற்றால் ஆன இடு மருந்து செய்து கள்ளில் கலந்து தருகின்றாள்.

இடுமருந்து என்பதற்கான விளக்கமும் தருகின்றார். "ஆண்களைக் கவர்வதற்காகப் பெண்கள், குறிப்பிட்ட பொருட் களைச் சேர்த்து உணவில் கலந்துவிடும் ஒருவகை வசியமுறை"[2]

அகத்தியரின் பெயரால் பள்ளு 200 என்ற நூல் வெளியிடப் பட்டுள்ளது. பள்ளு இலக்கணப்படி இந்நூல் அமையவில்லை. எனவே இதுபோலிப் பள்ளாதல் வேண்டும். இடுமருந்து குறித்துப் பழமொழியும் உள்ளது.

"விட்டதடி ஆசை விளாம்பழத்து ஓட்டோடே" விளாம்பழ ஓடு, இடுமருந்தை முறிக்கும் தன்மை கொண்டது.

"குறிபாப்பா மருந்து விப்பா"[3]

"தாசி மருந்தாலே — பெத்த
தாயை மறந்தானே"[4]

---

1. டாக்டர் ந.வீ. செயராமன் — பள்ளு இலக்கியம். பக். 45, — மணிவாசகர் நூலகம், சனவரி 1980
2. ந.வீ. செயராமன் — பள்ளு இலக்கியம் பக் 121. மணிவாசகர் நூலகம் — சனவரி 1980.
3. ஆறு. இராமநாதன் — பக். 271 — நாட்டுப்புறப் பாடல்கள் காட்டும் தமிழர் வாழ்வியல் மணிவாசகர்நூலகம், 1982.
4. மேலது பக். 262.

களுக்கும் ஆய்வாளர்களுக்கும் ஆர்வலர்களுக்கும் இந்நூல் மிகவும் பயன்படும். எனவே அவர்கள் வழக்கம் போல், இந்நூலை வாங்கி, சித்த மருத்துவத்தின் வளர்ச்சிக்கு உதவி செய்ய வேண்டுகிறேன். இதில் கூறப்பட்ட முறைகளை Impcops, Tamcol, Ceras தஞ்சாவூர் ஊராட்சி ஒன்றிய மருந்து செய் நிலையம், மற்றும் பாளையங்கோட்டை, வண்ணாரப்பேட்டையில் உள்ள சித்த மருந்து செய் நிலையம் என்பவும் ஆய்வு செய்யக் கேட்டுக் கொள்கிறேன். நன்றி.

அன்பன்

**ச. ரங்கராசன்**

*14—2—91*

# அகத்தியர் வரலாறு

அகத்தியரின் பெயரில் பல்வேறு நூல்கள் வழங்கி வருகின்றன. அகத்தியரின் பெயரில் உள்ள நூல்கள் அனைத்துமே, பல்வேறு காலங்களில் பல்வேறு அகத்தியர்களால் செய்யப் பட்டவை ஆகும். இதற்கு ஏராளமான சான்றுகள் உள்ளன. ''அகத்தியர்'' என்பது குடும்பத்தின் பெயர் என்பதாக வரலாற்று ஆசிரியர் திரு. பி.டி. சீனிவாசய்யங்கார் கருதுகின்றார்.[1]

சான்றாக ''அகத்தியர் இரத்தினச் சுருக்கம் 500'' ''அகத்தியர் குருநாடி'' என்ற நூல்களில் உள்ள பிணிகளின் மாறுபட்ட பட்டியலைப் பார்த்தால் விளங்கும். பொதுவாகச் சித்தர்களின் காலம் கி.பி. 5-ம் நூற்றாண்டு முதல் தொடங்குகின்றது. திருமூலர் திருமந்திரம் 3000-ல் பல்வேறு மருத்துவக் கருத்துகள் உள்ளன. திருமூலர் தன் நூலில் அகத்தியரின் பெயரைக் குறிப்பிடவில்லை, கி.பி. 10ம் நூற்றாண்டில் வாழ்ந்த ஒரு அகத்தியரின் பெயர் தட்சணாமூர்த்தி[2] ஆகும்.

அகத்தியர் பல்வேறு சித்த மருத்துவ நூல்களை எழுதி உள்ளார். இரசவாதம் பற்றி இலட்சம் பாடல்களும் மருத்துவம் பற்றி இரண்டு லட்சமும் இயற்றப்பட்டது என்று அகத்தியர் கூறுகின்றார்.

''பாரப்பா வாதத்தில் இலட்சம் காப்பு
பாடினேன் வைத்தியத்தில் இரண்டு இலட்சம்''

(அகத்தியர் 100)

---

1. அகத்தியர் — பக் 37, ந.சி. கந்தையாபிள்ளை — 1948
2. அகத்தியர் வரலாறு — பக் 92 — கழகம் — 1950

''கேளப்பா மூன்று லட்சம் காப்பு சொன்னேன்
　　கிருபையுள்ள வாதமது இலட்சம் காப்பு
ஆளப்பா வைத்தியத்தி லிரண்டுஇட்சம் சொன்னேன்
　　அவற்றைக்குறுக்கீடு காண்டம் சொன்னேன்''

(அகத்தியர் பரிபூரணம் 400)

''ஆனந்த கந்தம்'' என்ற நூலில் உள்ள அகத்தியர், தன்வந்திரி, அசுவினி, நந்தி ஆகியவர்களுக்குப் பின்னவராகச் சுட்டப்படுகின்றார். இவர் வட மொழியிலிருந்து வாத முறையை அறிந்தவர் என்றும் சீடராகப் புலத்தியரும் பேசப் படுகின்றார். ஆனந்த கந்தம் கூறும் அகத்தியர் வேறு என்பதாக அறிய முடியும். அகத்தியர் 12000 என்ற நூலில் அகத்தியரின் நூல்களின் பெயர்கள் கூறப்படுகின்றன. இவர் தென் பொதிகை யில் வாழ்ந்தவர். சங்கத்தில் இடம் பெற்றவர். இவர் தொகுத் தார் என்றும் கூறப்படுகின்றார். காவியங்கள் 10( 0, கருக்கிடை, கோர்வைகள் 80,000 பாடல்கள்

''சார்பான தென்பொதிகை தன்னிலையா
　　சங்கமுடன் திரேதாயுகத்திலையா
தேர்போன்ற மலையினுச்சி தன்னிலப்பா
　　தேவேந்திர ரிசி முனிவர் சாட்சியாக
கார்வீசும் கதிரோன் சாட்சியாக
　　காவலனே வைத்தோர் தொகுப்பு நூல்கள்
நேர்பான காவியங்கள் ஆயிரந்தான்
　　நெடிதான காப்பென்று செப்பலாமே''

(அகத்தியர் 12000)

இதுபோன்றே அகத்தியர் பரிபூரணம் 400-ல் நூல்களின் பெயர்கள் கூறப்படுகின்றன. அகத்தியர் 50, செந்தூரம் 300, அகத்தியர் 80, அகத்தியர் முப்பு, வைத்தியம் 1500, கன்மம் 300 பற்பம் 400, குருநாடி, என்பன. இவரால் செய்யப் பட்டவைகளாகும்.

காவியம் 1000, அகத்தியர் 200 என்பன இரசவாதம் என்ற நூலைச் செய்த அகத்தியர் என்றும் அறியலாம்.

"சீரப்பா காவியத்தில் ஆயிரந்தான்
சிறப்பாகப் பாடியதோர் என்நூலப்பா"

(இரசவாதம் 100)

19-ஆம் நூற்றாண்டில் "அகத்தியக் குடும்பன்" என்று அகத்தியர் பல்வேறு நூல்களைச் செய்துள்ளார் என்பதாக திரு. கா. நமச்சிவாய முதலியார் கூறுகின்றார்.

எனவே அகத்தியரின் பெயரில் உள்ள அனைத்து சித்த மருத்துவ நூல்களையும் ஆய்ந்து அறிவது சித்த மருத்துவர்கள் கடமையாகும்.

# இலக்கியத்தில் மருத்துவம் பற்றிய செய்திகள்

1. "நினக்கு மருந்தாகிய யானினி" (ஐங்குறுநூறு)
2. "நோய் மருந்தல்லா வராது" (நற்றிணை)
3. "பசிப்பிணி மருத்துவன் இல்லம் அணித்தோ சேய்த்தோ" புறம் — கிள்ளிவளவன்
4. "மருந்தில் கூற்றம் தரும் தொழில் சாயா"- (அகம் 271)
5. "இடுதேள் மருந்தோ நின்வேட்கை" (கலி — 110)
6. "திருந்திய யாக்கையுள் மருத்துவன் ஊட்டிய மருந்துபோல் மருந்தாகி மனம் உவப்ப" (கலி — 17)
7. "மூப்பே, பிணியே வருத்தம் மென்நகையொடு யாப்புற வந்த இளிவரல் நான்கே" (தொல் — பொருள்)
8. "பசிஇல் லாகுக, பிணிசேய் நீங்குக" (ஐங்குறு)
9. "விருந்தின் தீநீர் மருந்துமாகும்" (நற். நல்வேட்டனார்)
10. "சிறியிலை நெல்லித் தீங்கனிக்குறியா சாதல் நீங்க எமக்கீந்தனையே" (புறம் — ஔவையார்)

**பொருள்:**

1. உனக்கு மருந்தாக உள்ள நான்.
2. நோய் தீர்க்கும் மருந்து உள்ளதா?
3. பசிப்பிணியைத் தடுக்கும் வள்ளலின் வீடு அருகில் உள்ளதா, தொலைவில் உள்ளதா?

4. நோயே மருந்து ஆகும்.
5. தேள்கடிக்கான மருந்தோ, உன் காதல்
6. குற்றமற்ற நல் உடலில் மருத்துவன் கொடுத்த மருந்து போன்று மனம் மகிழ.
7. மூப்பு, பிணி, வருத்தம், சிரிப்பு என்பன நகைச் சுவையின் நான்கு உறுப்புக்களாகும்.
8. பசியும், பிணியும் இல்லாமல் போக
9. ஆற்றின் நீரில் குளிப்பதால் அது மருந்தாகும்
10. நெல்லிக்கனியை அளித்து, இறப்பு நீங்கும் வண்ணம், செய்தாய்.

# குறிப்பு

இந்த "அட்டவணை வாகடம்" வைகாசி 30 சோமவாரம் சதுர்த்தசி 200. பூச நட்சத்திரம் 29 நாழி தாத்தாச்சாரியார் சீடன் சார்பாடி வெண்ணமாலை அய்யர் வம்சம் முத்துசாமி அய்யருக்கு குமாரன் சின்னய்யர் வாசிக்கின் வாகட புத்தகம் இது சாமணந்தோப்பு கேட்டில் எழுத முடிந்தது.

சாரதாம்பாள் துணை

சின்னய்யர் ஒப்பம்

# அளவைகள்

| | | |
|---|---|---|
| ஆழாக்கு | — | 168 மி.லிட்டர் |
| உழக்கு | — | 336 மி.லிட்டர் |
| உரி | — | 672 மி.லிட்டர் |
| நாழி | — | 1.3 லிட்டர் |
| குறுணி | — | 5.3 லிட்டர் |
| பதக்கு | — | 10.7 லிட்டர் |
| தூணி | — | 21.5 லிட்டர் |
| கலம் | — | 64.5 லிட்டர் |
| டிராம் | — | 4. மி.லி. |
| அவுன்சு | — | 100 மி.லி. |
| தீர்த்தக்கரண்டி | — | 1.33 மி லிட்டர் |
| நெய்க்கரண்டி | — | 4.00 மி.லிட்டர் |
| உச்சிக்கரண்டி | — | 16 மி.லிட்டர் |
| பாலாடை | — | 16 மி.லிட்டர் |
| எண்ணெய்க்கரண்டி | — | 240 மி.லி. |
| உளுந்து | — | 65 மி.கி. |
| யவம் | — | 130 மி.கி. |
| மஞ்சாடி | — | 260 மி.கி. |
| பணவிடை | — | 488 மி,கி. |
| வராகன் | — | 3.5 கி. |
| கழஞ்சு | — | 4.4 கி |
| பலம் | — | 35 கி. |
| ரூபாய் எடை | — | 12 கி. |
| சேர் | — | 280 கி. |
| துலாம் | — | 3.5. கி.கி. |
| படி | — | 1.3 லிட்டர் |

— (IITS) தமிழர் அளவைகள்

## அளவுகள்

| | | |
|---|---|---|
| பணஎடை | — | 488 மி.கி. |
| கழஞ்சு | — | 5.1. கி. |
| பலம் | — | 41 கி. |
| ரூபாய் எடை | — | 12 கி. |
| சேர் | — | 280 கி |
| குன்றி | — | 130 மி.கி |
| ஆழாக்கு | — | 168 மி.லி. |
| உரி | — | 672 மி.லி. |
| நாழி | — | 1.3 லிட்டர் |
| குறுணி | — | 5.3 லிட்டர் |
| பதக்கு | — | 10.7 லிட்டர் |
| தூணி | — | 21.5 லிட். |
| குப்பி | — | 700 மி.லிட்டர் |
| எண்ணெய்க்கரண்டி | — | 240 மி.லி. |
| மேசைக்கரண்டி | — | 16 மி.லி. |
| தீர்த்தக்கரண்டி | — | 1.33 மி.லி |
| நெய்க்கரண்டி | — | 4 மி.லி |

குணபாடம் II & III Dr. R. தியாகராஜன் LIM

# சரக்குகளின் சுத்தி முறை
# பிணிகளின் விபரம்

## சுத்திமுறைகள் (Purification)

### வெங்காரம்

முருக்கன் தழையைத் துவைத்து, பானையிலிடவும் 2படி தண்ணீர்விட்டு, வேடு கட்டவும். மேலே வெங்காரத்தைப் போட்டுச் சட்டியால் மூடவும். எரிக்கவும். ½ நாழிகைக்குப் பின் எடுத்துக் கொள்ளவும்.

### சாதிலிங்கம்

கட்டியாக உள்ள சாதிலிங்கத்தைக் கரண்டியில் நல்லெண்ணெயிலிட்டுச் சற்றுக் கொதிக்க வைக்கவும். பின் இரட்டைமடி சீலையில் தோலாயந்திரமாகக் கட்டி, கோமயத்தில் வேகவைத்து எடுத்துக் கொள்ளவும்.

### அரிதாரம்

கத்தரிப்பழத்தின் விரையை எடுத்து விடவும். அரிதாரத்தை அதில் பொதித்து. முடிச்சுக் கட்டி, 3படி தண்ணீரில் தோலாயந்தரமாகக் கட்டவும். சட்டியால் மூடிச் சூடு பண்ணவும். ஆவியில் கத்தரிக்காய் வெந்தவுடன் எடுத்துக் கொள்ளவும்.

### துருசு

காசுபோல நறுக்கிக் கொண்டு சீலையில் முடிந்து தோலாயந்தரமாகக் கட்டி, பசும்பாலில் வேக வைத்து எ்டுத்துக் கொள்ளவும்.

(வேறு)

இரும்புக் கரண்டியில் தேனில் சுருக்குத்தரவும்.

### துத்தம்

புனைமந்தியில் போட்டு / நாழிகையில் கலக்க சுத்தி.

**இரசத்துக்கு**

ஒரு வெண்கல் சட்டியிலிட்டு மஞ்சள் பொடியைப் போட்டுக் கலக்கி, சீலையில் பிழியவும்.

**மனோசிலை**

சுண்ணாம்புத் தெளிவிலரைத்து, கொள்ளுச் சாற்றில் அரைத்துக் கொள்ளவும்.

**அரிதாரம்**

மேற்படி முறையைப் பின்பற்றவும்.

**கந்தகசுத்தி**

பொன்னாங்கண்ணிச் சாற்றைச் சட்டியிலிடவும், கந்தகத்தை அதில் போட்டு சிறு தீயாக எரித்து எடுத்துக் கழுவிக் கொள்ளவும்.

**நாபி**

கோமயத்தில் ஊறப்போடவும். எருமைச் சாணியில் வேக வைக்கவும். நுனிமஞ்சளைப் பழச்சாற்றில் அரைத்துக் கலந்து சுத்தி பண்ணவும்

**வெங்காரம்**

பசுவின் கோமயத்தில் 1 நாள் ஊறப்போடவும் கற்றாழை இலையில் மிளகு போட்டு 1 நாள் வடிகட்டவும்.

**1. அரிதாரம்**

சீலையில்முடிந்து கஞ்சியில் ஒரு வேளை, பூசணிக்காய்த் தண்ணீரில் ஒரு வேளை வேகவைக்கச் சுத்தியாகும்.

**இரசம்**

மஞ்சள் பொடியில் 1 வேளை, செங்கல்தூளில் 1 வேளை இந்துப்புவில் 1 நாள் அரைக்கவும்.

**குங்கிலியம்**

வேப்பம் பட்டையில் பிட்டு இட்டுச் சீலை மேலேவைத்து எரித்து எடுக்கவும்.

**மயில்துத்தம்**

பசும்பாலில் வேகவைக்கவும்.

**பச்சைநாபி**

கோமயத்தில் வேகவைக்கவும். வேப்பம் பட்டைச்சாறு எருக்கன்பால்

**2. இரசம்**

வெண்ணெயில் வெதுப்ப; சிறு கீரையில் அவிக்க.

**பாடாணம்**

பாகற்காய் சாற்றில் சுத்தி; சுண்ணாம்பு நீரில் சுத்தி

**கந்தகம்**

பாலில் வேடுகட்டி அவிக்க

**சிலதை**

பாலில் வேடுகட்டி அவிக்க; சாரணைப் பாலில் அவிக்க

**கந்தகம்**

தாய்ப்பாலில், கற்றாழைச் சாற்றில் புடமிடவும்

பூண்டு நார்த்தங்காயளவுக்கு அரைத்து நடுவில் கந்தகத்தை வைத்து 3¾ நாழிகை வேக வைத்து வாங்க வேளோமையாம். வேளுமை போதா விட்டால் இரண்டாவதுமுறை வைக்கவும்.

**பாடல்கள்**

பித்தசுரம் பிணி இரண்டுக்கும்
    பேர் வாத காமம்
பித்த சுரம் சிலேத்தும சுரம்
    சன்னி வாத சுரம்
அலிகாய சுரம் விடசுரம்
    விரக பூரம் முடனே

## சுரவரலாறு (History of Hyperpyrexia)

**சுரக்குணம்**

குளிரும் மூனு மாறாமல் நாநாட்மாறில் ஆக சுரம் பிணி இரண்டுக்கும் இது வரலாறு.

| | | |
|---|---|---|
| வாத சுரம் | — | வாயு தோடத்தால் வரும் |
| பித்த சுரம் | — | அக்கினி தோடத்தால் வரும் |
| சன்னிவாத சுரம் | — | சகலமும் காற்று கூடின தோடத்தால் வரும் |
| அலிகாய சுரம் | — | வணக்கமில்லாமல் யாவரும் பகையினாலே வரும் |
| விட சுரம் | — | விடமான மருந்தீட்டால் வரும் |
| விரக சுரம் | — | மயக்கத்தால் வரும் |
| மூட்டு சுரம் | — | ஒன்றுவிட்டு படக்கண்டு, திடுக்கிட்ட பயத்தால்வரும். |
| பழஞ் சுரம் | — | சீதக் கட்டால் வரும் குளத்து மாறவும், புல்லுக் கட்டினால் தீரும். |

**வாத சுரம்**

உள்ளங்கால் குளிரும், வயிறு மந்தமாயிருக்கும், உடலில் குத்து, வாய் பிதற்றல், சிறு நீர்க் கடுப்பு, ஏப்பம் இவை வாத சுர குணமாகும்.

**பித்த சுரம்**

உள்ளங்கால், வயிறு, கை, கால்எரிச்சல் உண்டாகும். கண்கள் எரிச்சலாய் இருக்கும். வாய் கசக்கும், சிறு நீர் எரிச்சலுடன் வரும், சிவந்திருக்கும்.

**சிலேத்தும சுரம்**

உள்ளங்கால்விறுவிறுத்து உப்பு உறைக்கும் சிறுநீர் வழுவழுத்து விழும் வாயில் நீர் வரும்.

**சன்னிசுரம்**

தலை கனத்து, செவியை உடைத்து, நொந்து, வயிறு பொருமல், உள்ளங்கால் குளிர்ந்து இருக்கும்.

## நோய் வரும் வழி (History of Illness)

| | | |
|---|---|---|
| வாதசுரம் | — | வாத குற்றம் காரணமாக வரும் |
| பித்தசுரம் | — | தீக்குற்றம் காரணமாக வரும் |
| சன்னிபாதசுரம் | — | சகலமும் காற்று அதிகம் ஆனதால் வரும் |

அபிகாதசுரம் — பகையால் வரும்
நஞ்சுசுரம் — நஞ்சு, மருந்தீட்டால் வரும்
விரகசுரம் — மயக்கம் காரணமாக வரும்
முட்டு சுரம் — பயத்தால் வரும்
பழஞ்சுரம் — சீதக்கட்டால் வரும்

## குறிகுணங்கள் (Symptoms)

**1. வாதசுரம்**

உள்ளங்கால் குளிரும், வயிறு மந்தம், உடலில்வலி, வாயரற்றல் சிறுநீர்கடுத்தும், ஏப்பம் பிரிதலும்.

**2. பித்த சுரம்**

உள்ளங்கால், வயிறு, கை, உடல் எரிச்சல், கண் எரிச்சல், வாய் கசப்பு, சிறுநீர் எரிச்சல், கண் சிவத்தல்

**3 கபசுரம்**

உள்ளங்கால் விறுவிறுப்பு, வாயில் நீர் வருதல், உப்பு உறைக்கும், சிறுநீர் வழு வழுத்து விழும்

**4. சன்னிசுரம்**

தலைக்கனம், செவியடைத்தல், சளி, வயிறு பொருமல் உள்ளங்கால் குளிர்தல்.

**5. அபிகாதசுரம்**

மனம் அழுன்று வரும், வாய்வேர்த்தல், கண் அசந்து வந்தால் அதட்டி எழுந்து நிற்கும்.

**6. நஞ்சுசுரம்**

உடல் வீக்கம், தலைக்கனம், மதிமயக்கம் என்பன

**7. விரகசுரம்**

நெஞ்சுபதைத்தல், மயக்கம், மருள் கொண்டது போலிருத்தல், வாய் வெருவதாக்கி இருக்கும்.

**8 முட்டுசுரம்**

வாய்வெருவும், உடல் நடுக்கம், நெஞ்சு பதைத்தல்,

**9. பழையசுரம்**

உடல் நடுக்கம், கடுத்தல் குளிர்ந்து கூசி வரும், மயிர் சிடுர்க்கம் இது ஒரு நாள் விட்டு ஒரு நாள் வரும்.

# கற்பப் பிரிவு

## 1. நிலவாரைக் கற்பம்

**செய்முறை**

நிலவாகை சமூலம் கொண்டு வந்து நிழலில் உலர்த்திப் பொடி செய்து, குடுக்கையில் அடைத்துக் கொள்ளவும்.

**தீரும்பிணிகள்: அனுபானம்**

| | | |
|---|---|---|
| செருப்படை சாற்றில் உட்கொள்ள | — | பெருச்சாளிக்கடி விடம் தீரும். |
| சிறுநீரில் உட்கொள்ள | — | விடம் தீரும். |
| முருங்கைச் சாற்றில் ,, | — | எலிக்கடி விடம் தீரும். |
| மூக்கரட்டை சாற்றில் ,, | — | மூஞ்சூறுக்கடி தீரும். |
| வேலிப்பருத்தி சாற்றில் ,, | — | சிறு பாம்புக்கடி தீரும். |
| விழுதிச் சாற்றில் ,, | — | நல்லபாம்புவிடம் தீரும். |
| குறிஞ்சா இலை சாற்றில் உட்கொள்ள | — | விரியன் விடம்தீரும். |
| எலுமிச்சை சாற்றில் ,, | — | எல்லாப்பாம்பின் விடமும்தீரும். |
| பாகல் இலை சாற்றில் ,, | — | செய்யான்கடி, நட்டுவாக் காலி விடம் தீரும். |
| அவுரிச் சாற்றில் ,, | — | அரணைக்கடி, குரங்குக் கடி நாய்க்கடி, பேய்நரிக் கடி தீரும். |
| கையான் சாற்றில் ,, | — | ஈளை, இருமல், கக்குதல் தீரும். |
| நொச்சியிலைச்சாறு | — | குளிர் சுரம் தீரும். |
| ஆமணக் கெண்ணெய் | — | வெதும்பல் தீரும். |
| நல்லெண்ணெய் | — | விக்கல் தீரும். |

## 2. நிலவாகைக் கற்பம்

நிலவாகைச் சமூலத்தை தூள்செய்து கொண்டு நிழலில் உலர்த்திச் சூரணம் பண்ணவும்

**தீரும்பிணிகள்: அனுபானம்**

1. பசும் பாலில் குடிக்க — பேதியாகும்
2. தண்ணீரில் குடிக்க — பேதியாகும்
3 கஞ்சியில் குடிக்க — சுரம், குளிர் தீரும்
4 மோரில் குடிக்க — கிரிப் பூச்சி தீரும்
5. தூளாய்க் குடிக்க — செரியாமை, எரிவு தீரும்
6, வாழைப்பழத்தில் உண்ண — சுக்கில பிரமியம் தீரும்
7 வேப்பிலை சாற்றில் குடிக்க — அகவை தீரும்
8. புளி, புகையிலைச் சாற்றில் — குன்மம் தீரும்
9. நல்ல வெல்லத்தில் உண்ண — பெரும்பாடு தீரும்
10. நெய் வெல்லத்தில் குடிக்க — பெரும்பாடு தீரும்
11. கோமயத்தில் உண்ண — சிரங்கு தீரும்
12 ஆட்டுப்பாலில் குடிக்க — செவ்வாப்பு தீரும்
13. எருமை மோரில் குடிக்க — எரிவு, மருந்தீடு குன்மம் தீரும்
14. வாகைச் சாற்றில் குடிக்க — செய்யான் கடி தீரும்
15. விளக்கெண்ணெயில் குடிக்க— விடம் தீரும்
16. குப்பை மேனி சாற்றில் குடிக்க — தேள் கடி தீரும்
17. உப்பிலி சாற்றில் குடிக்க — ஆனைக்கட்டு தீரும்

கடி பிரமாணம் தேனில் கொள்ள உடல் இளைக்கும்.

தேன் — உடல் இளைக்கும்

நெய் — உடல் பருக்கும் இந்தப் பொடி 7 கடி பிரமாணம் கொள்ள உடம்பு அண்டை பருக்கும் கழுநீர், வடிநீர், விடம் மாறும்.

வெந்நீர் — நீர்ப்பாண்டு மாறும்

| | |
|---|---|
| பசு வெண்ணெய் | — எரி குன்மம் மாறும் |
| பனை வெட்டு மணத் தக்காளிச் சாறு | — குன்மம், வாயு தீரும் |
| குப்பை மேனிச்சாறு | — கைசுக்கு தீரும், நித்திரை வரும் |
| வேப்பிலைச் சாறு | — விடம் மாறும் |
| மிளகில் | — சோர்வு விடும் |
| குளிர்நீர் | — கிரந்தி, கரப்பான் தீரும் |
| பன வெட்டில் | — மருந்தீடு தீரும் |

பசு கோமயம், பிரண்டைச்சாறு, நல்லெண்ணெயுடன் சேர்த்து உட்கொள்ள அகவை, பெருவயிறு, குடல் வாதம், சுசிவு கெண்டை, நிர்க்கோவை மூலவியாதி, மகோதரம், என்பன தீரும்.

## 3. ஆவாரைக் கற்பம்

**செய்முறை**

ஆவாரைத் தோலை உலர்த்திப்பொடி செய்து கொண்டு பயன்படுத்தவும்,

**தீரும் பிணிகள்: அனுபானம்**

| | | |
|---|---|---|
| 1. | வாயில் அடக்கி இருக்க | — கண்படலம் தீரும் |
| 2 | கருப்பட்டியில் உண்ண | — மலடு நீங்கி கர்ப்பம் உண்டாகும் |
| 3. | வெந்நீரில் உண்ண | — கழுத்து நோவு தீரும் |
| 4 | கஞ்சியில் உண்ண | — மயக்கம் தீரும் |
| 5. | நெய்யில் உண்ண | — குட்டம் தீரும் |
| 6. | மோரில் உண்ண | — பித்தம் தீரும் |
| 7. | வெற்றிலையில் உண்ண | — இரைப்பு தீரும் |
| 8. | கழுநீரில் குடிக்க | — பிரமியம் தீரும் |
| 9 | பாலில் குடிக்க | — வாதம் தீரும் |

## 4. தேற்றான் கற்பம்

**செய்முறை:**

தேற்றான் கொட்டையை உலர்த்தி இடித்துப் பொடி செய்து சலித்து எடுத்துக் கொள்ளவும்.

**தீரும்பிணிகள்: அனுபானம்**

1) மஞ்சளில் கலந்து வெளிப்பூச — பல்வகை பிணிகள் தீரும்.

2) எண்ணெயில் உட்கொள்ள — இருமல் தீரும்.

3) நெய்யில் உட்கொள்ள — பாண்டு தீரும்.

4) நெய்யில் கலந்து கண்ணில் விட[1] — பூப் பரியும்.

5) நல்லெண்ணெயில் கலந்து நசியம் செய்ய — முயல் கண் போகும்.

6) பசுவின் பாலில் கலந்து குடிக்க — பித்தம் போகும்.

7) புளியுடன் கலந்துண்ண — வாந்தி போகும்.

8) வெள்ளாட்டு கோமயத்தில் குடிக்க — சோகை போகும்.

9) தேற்றான் காய் உண்ண — நீர்க்கடுப்பு தீரும்.

## 5. அமுக்ரா கற்பம்

**செய்முறை:**

அமுக்ரா சமூலத்தைத் தூள் செய்து கொண்டு சலித்து எடுத்துக் கொள்ளவும்.

---

1. கண் இமையில் தடவ என்று பொருள் கொள்ளவும்

**குறிப்பு** மூலத்தில் அமுக்ரா கற்பம், ஆவாரை கற்பம் என்பதாகத் தலைப்பிடப்பட்டுள்ளது.

**தீரும்பிணிகள்: அனுபானம்**

1) நெய்யில் உட்கொள்ள — உடல்பருக்கும்.

2) தேனில் உட்கொள்ள — உடல் மெலியும்.

3) ஆவின் நீரில் உட்கொள்ள — எலிக்கடி போகும்.

4) தேன், திப்பிலிப்பொடியில் உட்கொள்ள — சுரம் தீரும்

5) எருமை மோரில் உட்கொள்ள — பாண்டு தீரும்

6) வெல்லம், நல்லெண்ணெயில் உட்கொள்ள — பெரும்பாடு தீரும்

7) பிள்ளைகள் இளைத்தால் பாலில் தர பெருக்கும்.

8) பிள்ளை இல்லாதவர்கள் பிரமிச்சாறு[1] மயிகை இலைச் சாறு கலந்து குடிக்கக் கர்ப்பம் உண்டாகும்.

9) கர்ப்பம் ஏற்பட — செம்பருத்திச் சாற்றில் கலந்து குடிக்கவும்.

10) வாதம் தீர — விளக்கெண்ணெயில் எரித்து உள்ளுக்குத்தந்து, மேல் தடவவும்.

11) முலை இல்லாதவர்களுக்கு — ஆமணக் கெண்ணெயில் தரவும்,

12) மாதவிடாய் இல்லாதவர்கள் உப்பிலிச்சாறு, சூரணம் வெங்காயமும் கூட்டி விழுங்கவும்.

13) குட்டம்தீர நாள்தோறும் உண்ணவும்.

14) இளவெந்நீரில் உட்கொள்ள — விரியன்கடி தீரும்

## 6. தூதுவளைக் கற்பம்

**செய்முறை:**

தூதுவளை சமூலத்தைக் கொண்டு வந்து உலர்த்தி, இடித்து பொடிசெய்து, சலித்துக் கொள்ளவும்.

---

1. இன்ன இலை என விளங்க வில்லை.

**தீரும்பிணிகள்: அனுபானம்**

| | | |
|---|---|---|
| 1) | நெய்யில் உண்ண | — உடல் பருக்கும் |
| 2) | தேனில் உண்ண | — உடல் மெலியும், பல் நோய்கள் தீரும் |
| 3) | தூதுவளை நெய் | — தாது அதிகமாகும். |
| 4) | பாலில் உண்ண | — தாது அதிகமாகும். |
| 5) | திப்பிலி, தேனில் உண்ண | — இருமல் தீரும் |
| 6) | இளவெந்நீரில் உண்ண | — தாதுக்கசிவு தீரும் |
| 7) | கத்திரிப்பழம் உண்ண | — எல்லாப் பிரமேகம் தீரும் |
| 8) | வேப்பஞ்சாறு உண்ண | — அகவை தீரும் |
| 9) | புளியிலைச்சாறு உண்ண | — குன்மம் தீரும் |
| 10) | காடியில் உண்ண | — சூலை தீரும் |
| 11) | வெற்றிலையில் உண்ண | — வயிற்றுநோய் தீரும் |
| 12) | பனைவெல்லம் உண்ண | — பெரும்பாடு தீரும் |
| 13) | விழுதிலை சாறு உண்ண | — மகப்பேறு ஏற்படும் |
| 14) | உப்பிலிச் சாறு குடிக்க | — மருந்தீடு தீரும் |
| 15) | சுக்குப்பொடி, பால்குடிக்க | — சுரம் தீரும் |
| 16) | ஆட்டுச் சிறு நீர் குடிக்க | — சில்லிடம் தீரும் |
| 17) | மோர் குடிக்க | — பாண்டு தீரும் |
| 18) | மயிலீரலில் உண்ண | — எலிக்கடிவிடம் தீரும் |
| 19) | நீரில் குடிக்க | — செய்யான் கடி தீரும் |
| 20) | ஆமணக்கெண்ணெய் உண்டு வெளிப்பூசவும், | — செய்யான் கடி தீரும் |
| 21) | குப்பைமேனிச்சாறு,குடிக்க | — முதலைக்கடி தீரும் |
| 22) | உப்பிலிச்சாறு குடிக்க | — ஆனைக்கட்டு தீரும் |
| 23) | காடிநீர்குடிக்க | — எரிவு தீரும் |
| 24) | பேயன்பழம்உண்ண | — நரை மாறும் |

25) வெள்ளாட்டு சிறுநீர்குடிக்க — பால் சுரக்கும்

26) வெற்றிலை உண்ண — வயிற்றுவலி, பாண்டு தீரும்

27) தேன், திப்பிலி உண்ண — ஈளை, இருமல் தீரும்

28) இளவெந்நீர் குடிக்க — பித்தம் தீரும்

29) வெள்ளாட்டு கோமயம் குடிக்க — காசம்

## 7. குமரிக் கற்பம்

**செய்முறை**

சொல்லப் படவில்லை

**தீரும் பிணிகள்: அனுபானம்**

மூலவிப்புருதி இரத்தம் விழுதல் நிற்கும், அடியில் இரக்தம் கண்டு வீங்கினால் தேன் கூட்டி, தடவ நிற்கும்.

1) புளிச்சாராயத்தில் கலந்து பூச — தலை நோவு தீரும் கட்டி. வியாதி, தலை மயிர் உதிர்தல் தீரும்

2) தேன், சாராயம் கலந்து வாய் கொப்பளிக்க — பல்லரணை, தொண்டை நோவு தீரும்

## 8. குமரிக் கற்பம்

**செய்முறை**

உலர்ந்த கற்றாழையைச் சூரணம் பண்ணி எடுத்துக் கொள்ளவும்.

**தீரும்பிணிகள் : அனுபானம்**

அசுத்தத்தலையாக உள்ள புண்ணுக்குப் போட்டால் குண மாகும். மூலத்தில் இரத்தம் விழுதல் நிற்கும். அடியில் இரத்தம் கட்டி வீங்கினால் தேனுடன் கூட்டித் தடவத்தீரும்.

தலை நோவுக்குப் புளித்த சாராயத்தில் கலந்து பூசத்தீரும் பிணிகளாலும், புழுகட்டியினாலும், தலைமயிர் திரைத்தாலும் சாராயத்தில் கலந்து பூசத்தீரும்.

வாயில் பல்லரணைக்கு, தொண்டைநோவுக்குத் தேனில் சாராயத்தில் கலந்து கொப்பளிக்கத் தீரும்.

## 9. குமரிக் கற்பம்

**சரக்குகள்**

| | | |
|---|---|---|
| கழுவின கற்றாழைச் சோறு | — | 42 ½ கி (1½ பலம்) |
| பனங்கற்கண்டு | — | ,, |
| கோரோசனை | — | 488 மி.கி. (பணஎடை) |

**செய்முறை**

இவைகளை அரைத்துக் கொள்ளவும்.

**தீரும்பிணிகள்**

10 நாட்கள் உண்ண, உடல் பருக்கவும், இளைப்பு, உடல் சூடு, கைகால் எரிச்சல், பித்த வெட்டை தீரும். (உடல் காங்கை)

## 10. முத்தெருக்கன் செவி கற்பம்

**செய்முறை**

இதன் சமூலம் கொண்டு வந்து நிழலில் உலர்த்திப் பொடி செய்து, சலித்து வடிகட்டிக் கொள்ளவும்.

**பயன்**

1. விரல் அளவு சூரணம் பாலில் அரைத்து நசியம் செய்ய
2. பிள்ளைகளுக்குத் தலையில் தேய்க்க புள்தோடம் தீரும்
3. பசும்பாலில் குடிக்கக் குன்மவாயு தீரும்.
4. பாக்கு வெற்றிலையுடன் தின்று பெண்கள் மேல் இட இச்சை (மோகம்) உண்டாகும்.
5. காடியில் கலந்து குடிக்க பககவாதம் தீரும்.

6. பசும்பாலில் அரைத்து, பசுவின் நீரில் கலக்கி, பசுவுக்குக் கட்ட, கண்ணின் மேலே தடவக் கொள்ளும்.

7. இந்த வேரோடு கையில் பிடித்து காற்று வரும் வழியில் நிற்க பாம்பு ஆடாது.

8. பசும்பாலில் கலக்கிக் குடிக்க - நீர்க்கட்டு தீரும்.

9. இதன் வேரைத்தின்று பெண் முகத்தில் ஊத ஆசைப்படுவாள்.

10, இதன் வேரையும், மஞ்சளையும் சேர்த்து அரைத்துத் தண்டில் தடவிப் புணர வசியமாவாள்

11. சந்தனத்துடன் கூட்டிப் பூச அழகு ஏற்படும்.

12, இதன் வேரை அரைத்துக் கன்னிகள் முலையில் பூச பெருக்கும்.

13. இதன் வேரை அரைத்து நிழலில் உலர்த்து கண்ணில் இட இழிச்ச கண் மாறும்

14. பாலில் தர பெரும்பாடு தீரும்

15. வேரைத்தாய்ப்பாலில் உரைத்துக் கட்டியில் பூசலாம். பிளவைப் புண் தீரும்.

16. இலையைத்தின்று செவியில் ஊதச் சன்னிமாறி செவி கேட்கும்.

17. இதன் வேரைத் தூவி உரைத்துக் கலக்கிக் குடிக்க நீரிழிவு தீரும்.

18. இந்தவேரை எருமைமோரில் குழப்பிக்குடிக்கக் காமாலை தீரும்.

19. இந்த மூலிகை சமூலமும் கூட்டி அரைத்து கயிறு பிடித்து, நிழலில் உலர்த்தி அரைத்து மருந்துக் கயிற்றை முலைப்பாலில் அரைத்துக் கண்ணிலிடக் கண்ணிலுள்ள பூ மாறும்.

எலுமிச்சைச் சாறு
சீரகப்பொடி, சர்க்கரை
கலந்து காலையில் 5
நாட்கள் உண்ண } தலைவேக்காடு தீர

| | | |
|---|---|---|
| பரங்கிப்பட்டை கியாழத்தில் உரைத்து ஒரு நாளைக்கு 3 தடவை தரவும் | — | வெப்ப சூலை. |
| எலுமிச்சைச் சாற்றில் தடவ | — | தொண்டை, விக்கல் தீரும். |
| எலுமிச்சைச் சாற்றில் குடிக்க | — | நஞ்சுகள் தீரும் |
| பசுவின்பால் குடிக்க | — | உட்காய்ச்சல் தீரும் |

தேங்காய் நெய்யை வெதும்ப வைத்து, காண்டா மிருகக் கொம்பைப்பாக்களவு உரைத்துக் கொடுக்கத் தீரும்.

## 11. எட்டிவேர் கற்பம்

**செய்முறை**

எட்டிவேரை. வடக்கு செல்வது எடுத்துவந்து மேல் புறணி நீக்கி சீவிப் போட்டு பட்டையை எடுத்து, எலுமிச்சைச் சாறு விட்டு ஐந்து நாட்கள் தொடர்ந்து அரைத்து, தேற்றான் கொட்டை அளவு உருண்டை செய்து நிழலில் உலர்த்திக் கொள்ளவும்.

**தீரும் பிணிகள்: அனுபானம்**

| | | | |
|---|---|---|---|
| 1) | கிராணி | — | சுக்குக்குடிநீர் |
| 2) | அசீரணம் | — | ஓமத்தின் பொடி |
| 3) | பசும்பால் | — | முற்றின விரணத்துக்கு |
| 4) | விடங்கள் | — | பெருங்காயநீர் |

**இன்னாச்சிக் கொட்டைக்கு அனுபானம்**

சன்னி, பில்லி, சூனியம், விடக்காய்ச்சல் — உடலில் கொத்து (குளிசம்) கட்டவும்.

இருமல் — முந்திரிகை கியாழத்திலரைத்துத்தர

குளிர்காய்ச்சல் — காலை, மாலை, வெந்நீரிலரைத்துத்தர

பெரும்பாடு — முந்திரி கியாழத்தில்தர

**மாட்டுக்கு வரும் அடைப்பான்நோய்க்கு**

ஒருகொட்டையை உரைத்து நாக்கில் தடவவும் உள்ளுக்குப் புகை காட்டவும்.

| | | |
|---|---|---|
| சயித்திய காய்ச்சல் | — | முந்திரிகியாழத்தில்தர |
| வெப்பக் கழிச்சலுக்கு | — | வெந்நீரிலரைத்துத்தர |
| கல்லடைப்பு | — | தண்ணீரிலரைத்துத்தர |
| மாந்ததோடம் | — | முந்திரி கியாழத்தில்தர |
| முகப் பருவுக்கு | — | வேப்பெண்ணெயில் அரைத்துப் பூசவும். |

முந்திரிகைகியாழம் இல்லாவிடில் சாராயத்தில் தரவும்.

**எட்டி வேர் கற்பம்**

| **அனுபானம்** | | **தீரும் நோய்கள்** |
|---|---|---|
| நெய் | — | பெருவயிறு சூலை |
| கோமயம் | — | ஊதுவாத சோகை, பாண்டு |
| வேப்பெண்ணெய் | — | குட்டம், கடிவிடம் |
| மஞ்சள் பொடி சேர்த்துக்கொள்ள | — | சூலை, குன்மம் தீரும் |

ஏரகக் கியாழத்தில் கொள்ளவும்.

**கியாழம்**

கற்கத்துடன் கழற்சி, வில்வ இலை, ஈரவெங்காயம், கருவேப்பிலை, வெந்தயம், பற்பாடகம் இவைகளை வறுத்துக் கியாழமிடவும். மண்டலம் குடிக்கவும்

**இரத்தக் கடுப்பு தீர**

கற்கத்துடன் வாழைப்புட்டு கட்டி 3 நாள் இடவும்.

| | | |
|---|---|---|
| அதிசாரம் தீர | — | மாதுளம் சாறு |
| வாந்திக்கு | — | நிலவிளாக்கியாழம் |
| அசிரணபேதி | — | மஞ்சள்கியாழம் |

# கற்கப் பிரிவு

## 12. பைத்தியம் தீர கற்கம்

**சரக்குகள்**

*நெல்லிக்காய்ச் சாறு — 700 மிலி (½ படி)*
*வசம்பு சுட்ட சாம்பல் — 70கி (2 வராகன்)*
*சீனி சர்க்கரை — 1400 கி (பலம்)*

**செய்முறை**

கலந்து கொண்டு குடிக்கவும்

**கால அளவு :**

*3 நாட்கள் 6 நாட்கள் தக்கபடி குடிக்கவும்*

**உணவு :**

புளி, புலால் உணவு, புகை கூடாது

## 13. மாரடைப்பு தீரக் கற்கம்

**சரக்குகள்**

*காட்டு சீரக இலை —*
*சுக்கு — சுமார் 18கி (½ வராகன்)*
*திப்பிலி — 4,200 மிகி (3 பலம்)*
*மிளகு — 7000 மிகி (5 பலம்)*

**செய்முறை**

சீரக இலையைப் பிட்டவியல் செய்யவும் ஏனைய கடைச் சரக்குகளை முடிச்சுக் கட்டவும். பின் அவியலின் உள்ளே வைத்து வேகவிடவும். வெந்தபின் எடுத்தரைக்கவும். சீரக இலையின் சாறு எடுத்து, கற்கத்தைக் கலந்துண்ணத்தரவும்.

# கியாழவகைகள்

## 14. அண்ட வாதம் தீரக்கியாழம்

1. கழற்சிப்பருப்பு — (5 கழஞ்சு) 1400 கி
2. கழற்சி வேர் — (பலம்) 85 கி
3. கொடி வேலி வேர் — (½ பலம்) சுமார் 43 கி
4. சாரணை வேர் — (½ பலம்) ,,

**அளவு**

(நாழி) 21.5 நீர்விட்டு ஊறிய பின் காய்ச்சி 30 முதல் 60 மில்லி லிட்டர் மூன்று நாட்கள் குடிக்கவும்.

**பொதுவிதி**

அளவு தரப்படாத நிலையில் கியாழத்தை 30 முதல் 60 மில்லிலிட்டர் வரை குடிக்கவும்.

## 15. கர்ப்ப இருமல் தீரக்கியாழம்

**சரக்குகள்**

கடுக்காய்
வசம்பு
சுக்கு — சம அளவு
சிறுதேக்கு
கடுகரோகணி

**செய்முறை**

இவைகளை தண்ணீரில் போட்டுக் காய்ச்சிக் கருப்பட்டி கலந்து தரவும். அளவு 30 முதல் 60 மி.லி.

## 16 இரத்த பித்தம் தீரக்கியாழம்

கரும்வேலம் பட்டையை இடித்துக் கொள்ளவும். ஈர வெங்காயத்தை நறுக்கி, வெந்தயம் சேர்த்துக் கியாழம் செய்யவும்.

**வயிற்றுப் பொருமல் தீர**

முற்றிய தேங்காய் — 3 எண்
எருமைப்பால் — ½ படி
சுக்கு, மிளகு, பூண்டு — வகைக்கு வராகன்எடை

**செய்முறை**

3 தேங்காயை உடைத்துத் திருகிப் பால் எடுக்கவும். சமஎடை எருமைப்பால் சேர்க்கவும். இதில் சூரணத்தைப் போட்டுக் காய்ச்சி எடுத்து எருமைப்பால் ½ படி கூட்டிக் குடிக்கவும். வயிற்றுப் பொருமல் தீரும்.

**அளவு**

மூன்று நாட்கள் 30 முதல் 60 மில்லி லிட்டர் 6 நேரம் உட்கொள்ள இரத்தகளை நிற்கும். கிராணியும் மாறும்.

## 17. வயிற்றுப்பொருமல் தீர

**சரக்குகள்**

சாதிக்காய், சாதிபத்திரி, கிராம்பு — சம அளவு

**செய்முறை**

முடிச்சுக்கட்டி, 21.5 லிட்டர் நீரில் ஊறப் போடவும். மாதுளம் பிஞ்சு, ஓடு, சுக்கு இவைகளைப் போட்டு, எல்லா வற்றையும் 3.36 மி.லிட்டர் வரை காய்ச்சவும். முடிச்சுக்கட்டிய மருந்துகளை கியாழத்தால் அரைத்து, வடிகட்டிக் குடிக்கவும். 30 முதல் 60 மில்லி லிட்டர் வரை.

## 18. வயிற்றுக் கடுப்புத் தீர

மாசிக்காய் 8 ஐ எடுத்துக் கொண்டு தூள் செய்யவும் 21 5 லிட்டர் நீரில் போட்டுக் காய்ச்சி அரைக்கால் பங்காகச்

செய்து 560 கிராம் தேனில் கலந்து 3 நாட்கள் குடிக்கவும். 30 முதல் 60 மில்லி லிட்டர் வரை.

## 19. குடல் வாதம் தீரக்கியாழம்

குறிஞ்சி இலையை உப்புப்போட்டுத் தண்ணீர் விட்டு அவித்து, வடிக்கவும். சுக்கு, மிளகு, வெங்காயம், கருஞ்சீரகம், வெந்தயம் பொடி செய்து கொதிக்க வைத்து வடிகட்டிக் குடிக்கவும். 30 முதல் 60 மில்லி லிட்டர் வரை.

## 20. சூலை தீரக்கியாழம்

**சரக்குகள்:**

| | | |
|---|---|---|
| சந்தனச் சிராய் | — | 85 கிராம் (பலம்) |
| கொடிமுந்திரிப்பழம் | — | 85 கிராம் (பலம்) |
| நன்னாரி | — | 85 கிராம் (பலம்) |
| வில்வவேர் | — | 85 கிராம் (பலம்) |
| சீரகம் | — | 85 கிராம் (பலம்) |
| சர்க்கரை | — | 85 கிராம் (பலம்) |

**செய்முறை:**

பொடி செய்து கொண்டு, 3 விரலளவு எடுத்துக் கொண்டு 1 கிராம் (2 சேர்) தண்ணீரில் கலந்து காய்ச்சவும் ½ கிராம் (1 சேர்) வந்தபின், இறக்கி, 4.4. கிராம் (காசெடை) தேன் விட்டுக் குடிக்கவும்.

**அளவு :**

30 முதல் 60 மில்லி லிட்டர் வரை

**விலக்கு :**

புகையிலை, புளி கூடாது.

## 21. கர்ப்ப வீக்கம் தீர

பாலில், தண்ணீர், இஞ்சி போட்டுக் காய்ச்சி கருப்பட்டி கலந்து, திப்பிலிப் பொடி சேர்த்துத் தரவும்.

**அளவு :** 30 முதல் 60 மில்லி லிட்டர் வரை

## 22. பஞ்சமூலக்கியாழம்

**செய்முறை :**

I. சுக்கு, திப்பிலி. சிற்றரத்தை, கண்ட திப்பிலி, பரங்கிப் பட்டை இவைகளை சம எடையில் நீரிலிட்டுக் காய்ச்சி வடி கட்டிக் குடித்தல்.

II சுக்கு, சிற்றரத்தை, செவ்வியம், பேய்ப்புடல், முட்கா வேளை, திசை மூலம், மாவிலிங்கப்பட்டை, முருங்கப் பட்டை, நொச்சிப்பட்டை, எருக்கம்பட்டை சாறுகள், இஞ்சிச்சாறு எடுத்துத் தேனில் கலந்து தரவும்.

**அளவு :**

30 முதல் 60 மில்லி லிட்டர் வரை

## 23. திரி மூலக்கியாழம்

| | |
|---|---|
| கொடிவேலி<br>கண்டங்கத்தரி<br>சுக்கு | } சம அளவு |

தேவையான நீரிட்டு, காய்ச்சிக் இறுத்து வடிகட்டிக் குடிக்கவும்.

**அளவு**

30 முதல் 60 மி.லிட்டர் வரை

## 24. வாத சீதளம் தீர

**1) வாத சீதளம் தீர**

| | |
|---|---|
| சுக்கு<br>சிற்றரத்தை<br>செவ்வியம்<br>தாதுவளை<br>முட்காவேளை | சம அளவு கலந்து கியாழம் வைக்கவும் |

**2) பித்தசீதளம் தீர**

| | |
|---|---|
| சுக்கு<br>வேப்ப ஈர்க்கு<br>சீரகம்<br>கருவேப்பிலை ஈர்க்கு<br>பேய்ப்புடல் | சம அளவு கலந்து கியாழம் வைக்கவும் |

## 25. நீர்க்கட்டு தீர

**சரக்குகள்:**

| | | |
|---|---|---|
| வெங்காயச்சாறு | — | 370 மி.லிட்டர் (¾ படி) |
| முள்ளங்கிச்சாறு | — | 370 மி.லிட்டர் (¾ படி) |
| சந்தனம் | — | 20 கிராம் (¼ பலம்) |
| வெள்ளரிவிதை | — | 40 கிராம் (½ பலம்) |
| வெங்காரம் | — | 35 கி. (1 வராகன்) |

இவற்றைத் தண்ணீரில் கலந்து காய்ச்சி இறக்கி வடி கட்டவும்.

## ஊது சோகை தீர

பசுவின் நீரில் கடுக்காய் 3 போட்டு ஓட்டில் ஒன்றாய் இறுத்து, விரைநீக்கி அரைத்துக் குடிக்கவும்.

## பித்தபாண்டு தீர

| | | |
|---|---|---|
| வெள்ளாட்டு நீர் | — | 2 படி |
| பசு நீர் | — | 2 படி |
| தண்ணீர் | — | 2 படி |

பிடங்கநாரி இலை (கொழுக்கட்டை) 1 தூக்கு

4 ல் 1 பங்கு காய்ச்சி ¾ படியாக்கிக் கொள்ளவும். கடுக்காய் இரண்டு விரையை எடுத்து விட்டுத் தட்டிப் போட்டரைத்து, யொழத்தில் கலந்து 5-நாட்கள் குடிக்கவும். பேதியாகி, நீர் இறங்கும். மறுபத்தியம் 5 நாள். உப்பு முதல் ஒன்றும் ஆகாது.

**உணவு:**

வெந்நீர் சோறு

**தீரும்பிணி:**

பாண்டு, சோகை, காமாலை விடபாகம்.

## 26. பாண்டு, காமாலைத் தீர கியாழம்

வெள்ளாட்டு சிறுநீர் — 4.4 லிட்டர் (குறுணி)

| | | |
|---|---|---|
| சங்கன் வேர்ப்பட்டை<br>சிவனார் வேம்பு<br>கடுக்காய் | } | 1275 கி (15 பலம்) |

**செய்முறை:**

கடைச்சரக்குகளை இடித்துச் சிறுநீரில் போட்டு, பூமிப்புடம் 13 நாட்கள் வைக்கவும். 13 ஆம் நாள் எடுத்து தினம் 1 தேங்காய் மூடி அளவு குடிக்கவும். பேதியாகும்.

**கால அளவு:**

3,5 நாட்கள் குடிக்கவும்

**அளவு :**

30 முதல் 60 மில்லி லிட்டர் வரை.

**உணவு :**

உப்பு, புளி, காரம் கூடாது.

1) பேய்ப்புடல், கொத்தமல்லி, சீந்தில் — கியாழம் பைத்தியம், வாயு, போகும்.

2) இஞ்சிச் சாறு — பாரிச வாயு போக்கும்.

3) பஞ்சமூலக்கியாழம் — சன்னி தீரும்

4) தண்ணீர் — சூதகமயக்கம், விட மயக்கம் தீரும்.

## 27. குளி குளித்தவளுக்குக் கியாழம்

1) வேப்பிலை
மிளகு
உள்ளி
ஓமம்
கருப்பட்டி

**செய்முறை :**

வேப்பிலையை வறுத்து, தண்ணீர் விட்டு அவித்து, ஏனைய சரக்குகளைச் சேர்த்துக் காய்ச்சி வடிகட்டிக் குடிக்கவும்.

**அளவு:**

30 முதல் 60 மில்லி லிட்டர் வரை

2) கோழி முட்டையை, உடைத்து 21.5. லிட்டர் நீரில் (நாழி) வேகவைத்து (½படி) 700 மி. லிட்டர் குறுக்கவும், சுக்கு, மிளகு, பூண்டு எடுத்துக் கொள்ளவும். மூங்கில் இலையை அவித்து தண்ணீர் ஒரு சிரங்கையளவு கூட்டிக் கொண்டு எல்லாச் சரக்குகளையும் சேர்க்கவும். காய்ச்சி வடிகட்டி சாற்றைக் குடிக்கவும்.

**பயன்:**

இரத்தக்கட்டு, சீழ்க்கட்டு தீரும்.

## 28. யோனிச் சூலைக்குக் கியாழம்

திமுட்டி[1] வேரைப்பாலில் காய்ச்சித் தேனில் அருந்தவும்,

## 29. கழிச்சல் தீர (கர்ப்ப)

1) சிறுகாஞ்சோரி வேர்
பொன் முசுட்டை வேர்
சிற்றாமுட்டி
சுக்கு
முத்தாகாசு

இவைகளைக் கியாழமிட்டுக் குடிக்கவும்

2) கீழாநெல்லி — 1 பிடி

வெந்தயம் — 9கி. (½ பலம்)

பொன்வறுவலாக வறுத்து (½ படி) 700 மி.லி. அளவு நீரில் கலக்கவும். காய்ச்சி 650 மி. லி. (ஆழாக்கு) எடுத்து, வடிகட்டிக் கொள்ளவும்.

இத்துடன் சர்க்கரை 3.5. கி. (வராகன்) கூட்டிக் கொள்ளலாம்.

3) பாவட்டை வேரை நறுக்கிக்கொள்ளவும். 350 மி. லி நீரில் (¼ படி) போட்டு 650 மி.லி (ஆழாக்கு) அளவுக்கு வரக்காய்ச்சிக் குடிக்கவும்.

---

1: விடமுட்டியாக இருக்கலாம்.

**வேறு**

4) வெந்தயம் — 36 கி. (பலம்)
பெருங்கிழங்கு — 36 கி. (பலம்)

வெந்தயத்தைப் பொன் வறுவலாக வறுத்துக் கொண்டு 700 மி. லி (½ படி) நீரில் போடவும். பெருங்கிழங்கையும் சேர்க்கவும். காய்ச்சி, வடிகட்டி, குடிக்கவும். அசீரணக் கழிச்சல் தீரும்.

**குறிப்பு:**

அளவு குறிக்கப்படாமல் இருந்தால் கியாழத்தை பொதுவாக 30 முதல் 60 மில்லி லிட்டர் வரை குடிக்கவும்.

**சரக்குகள்:**

| | | |
|---|---|---|
| 5) | பெருங்கிழங்கு | ... (½ பலம்) 43 கிராம் |
| | கடுகு | ... 86 கிராம் (பலம்) |
| | வெந்தயம் | ... 86 கிராம் (பலம்) |

**செய்முறை**

கடுகு, பெருங்கிழங்கைத் தீயில் எரித்துச் சாம்பலாக்கவும் சாம்பலில் வெந்தயத்தை இடப் பொறியும். 700மி.லி (½ படி) தண்ணீர்விட்டுக் காய்ச்சி (ஆழாக்கு) 343 மி.லி. அளவு எடுத்து வடிகட்டிக் குடிக்கவும்.

## 30. குன்மம் தீர

| | |
|---|---|
| பேய்ப்புடல் | ... 43 கிராம் (½ பலம்) |
| சிவனார் வேம்பு | ... 43 கிராம் (½ பலம்) |
| வெள்ளறுகு | ... 43 கிராம் (½ பலம்) |
| தண்ணீர் | ... 21.5லி (நாழி) |

இவற்றைக் காய்ச்சி அரைக்கால் பங்காகக் குறுக்கிக் குடிக்கவும்.

## 31. குடல் வேக்காளம் தீர

1) எருமைமோரைக் காய்ச்சி வடிகட்டவும் ஏலம், கிராம்பு, செண்பகப்பூ, அதிமதுரம். சாதிக்காய் இவற்றைப் பொடி செய்து கலந்து குடிக்கவும்

2) ஓரிலைத் தாமரையை நறுக்கி, சர்க்கரை கலந்து தண்ணீரில் ஊறப்போட்டுக் குடிக்கவும்.

## 32. நீர்க்கட்டு தீர

1 வெள்ளரி விதையை அரைத்துப் பசும்பாலில் கலந்து கொடுக்க

2 ஆவாரைப்பிஞ்சை எடுத்துவந்து

சுக்கான் கல்லை சுட்டுத் தண்ணீரில் கரைத்து தெளிய அரைக்கால் வைத்து, (2 காசெடை) 88. கி வெங்காரத்தைப் பொரித்துப் போட்டுக் கலக்கிக் கொடுக்கவும்.

## 33. சுரம்போக

**சரக்குகள்**

| | | | |
|---|---|---|---|
| I | நெல் பொரி | — | 336 கி. (உழக்கு) |
| | பேய்புடல் | — | 336 கி. (உழக்கு) |

சுருஞ்சீரகத்தை முடிச்சுக்கட்டி, மேற்படி கியாழத்தில் போடவும், பின் எடுத்து அரைத்துத் தரவும்.

II நாகப்பூ
பாலைவேர்
பொன்முசுட்டைவேர்
வெட்டிவேர்
சுக்கு
தேற்றான்

சம அளவு எடுத்துக் கியாழமிட்டுக் கொடுக்கவும்

## நீரிழிவு தீர

**சரக்குகள்**

I பருசணத்திப் பட்டை
ஆவாரம் பட்டை
கடவஞ்சிப் பட்டி
வாதம்பட்டை

} மூன்று

**செய்முறை:**

இடித்துப் பானையில் போட்டு (4 படி) 1960 மி.லி. நீரில் கலந்து காய்ச்சி அரைக்கால் பங்காக ஆக்கி வடி கட்டிக் குடிக்கவும்.

II நாயுருவி — 255 கி (3 பலம்)

தொட்டால் சிணுங்கி — 255 கி (3 பலம்)
புகையூரல் — 85 கி (1 பலம்)

இவற்றை 1.400 (படி) நீரில் கலந்து அரைக்கால் பங்காகக் காய்ச்சி வடி கட்டிக் குடிக்கவும்.

## 33 A. நோவு தீர வேறு

செம்மண் துணி
மிளகு
கடுக்காய்
காடி
சோறு
சுக்கு (½ பலம்) 17.5 கி

கடை சரக்குகளைப் பொடி செய்து கொள்ளவும். தண்ணீர் விட்டு எல்லாவற்றையும் கலந்து கொண்டு காய்ச்சவும். வடிகட்டி உள்ளுக்குத் தரவும்.

## 34. சயம் தீர

சிற்றரத்தையை அமுரி நீரில் விட்டுக் காய்ச்சி வடி கட்டிக் குடிக்கத் தீரும்

**ஊது காமாலை:**

இது காலையில் வீங்கி, கண் மஞ்சரித்து கால் கை சோர்ந்து பலம் கெட்டு வரும்.

## 35. காமாலை தீர

I இருவேலி
விலாமிச்சை
செருப்படி — பெருந்துத்தி வேர்ப்பாலில் தரவும்
நெருஞ்சில்
திருனாப்பாலை
பூண்டு

II கையான் சாறு
படைக்கொழுந்து
பச்சைமஞ்சள்
மிளகு

அரைத்து 1 படி வெள்ளாட்டு நீரில் கலந்து குடிக்க, வயிறு கழியும், மோருஞ் சோறும் சேர்த்து 3 நாட்கள் உண்ணவும்.

**வேறு**

சடைச்சி
பெருமட்டை
பீநாரி — 2 இலை

நன்றாய் இடித்து ¼ படி சாறு, பசும்பால் ¼ படி சேர்த்துத் தரவும். மூன்று நாட்கள் காலையில் குடிக்கவும். ஆறுநாட்கள் உப்பில்லாபத்தியம் வெந்நீர் சோறு உண்ணவும். மூன்றாம் நாள் தலை முழுகி உப்பு வறுத்துக் கூட்டவும்.

**உணவு**

எருமைத்தயிர், உரையிலைச்சாறு, வெல்லம் இரவில் தரவும் இளநீரில் சாறுஎடை வேர் தரவும். இரண்டு நேரமும் எலுமிச்சைப் பழச்சாறு கண்ணில் பிழியவும். கோவையிலை மோர் வார்த்துத் துவைத்து சர்க்கரை போட்டுத் தரவும்.

**குறிப்பு :**

பாடத்தில் கூறப்பட்டிருந்தாலும் பழச்சாற்றை கண்ணில் விடுவது நல்லதல்ல.

## 36. சுவாச காசம் தீர

| | | |
|---|---|---|
| சுக்கு | — | 3.5 கி. (வராகன்) |
| சீனாகற்கண்டு | — | 3.5 கி. (வராகன்) |

இளநீரில் போட்டுக் கலக்கிக் குடிக்கவும், மூன்று நாட்கள் தொடர்ந்து குடிக்கவும்.

## 37. மேகம் தீர

நெல்லிமுள்ளித்தோல் — 3.5 கி. (வராகன்)

சீரகம் — 3.5 கி, (வராகன்)

பசும் பால் 450 மி.லி(அரை படி)போட்டுக் காய்ச்சி 50 மி.லி அரைக்கால்படியாக சுண்ட வைத்து சீனி கலந்து குடிக்கவும்.

## 38. பாடாண முறிவுக்கு

| | |
|---|---|
| கத்தரிவேர்<br>சிறுகீரைவேர்<br>பாகல்கொடி<br>முடக்கொத்தான் | கியாழம் வைத்துக் குடிக்கவும் |

## இரசமுறிவுக்கு

**சரக்குகள்:**

பசும்பால்
(மேல் தோல் நீக்கியது) லாடப் பருத்தி பிஞ்சு
சீரகம்
சாதிக்காய்

**செய்முறை :**

பருத்திப்பிஞ்சை நறுக்கிக் கொள்ளவும் பின் அடுப்பிலேற்றி சீரகம், சாதிக்காயை வெதுப்பிக் கொள்ளவும். பாலில் அரைத்துத்தரவும். இரசம் முறிவு ஏற்படும்

**தீரும்பிணிகள்:**

கை, கால் கடுப்பு தீரும்.

## பிரமியம் தீர

எலுமிச்சம் பழம் — 5 எண்

சீரகம் — வராகன்

பனை வெல்லம் — 1 பலம்

1 படி மோரில் கலந்து குடிக்கத்தீரும்

**வேறு**

திப்பிலி 5
தேற்றான் கொட்டை 3

அரைத்துக் கழுநீரில் தரவும் 3 வேளை குடிக்கவும்

## சாறு, இரசம் பிரிவுகள்

## 39: பிரமியம் தீர

I நல்லெண்ணெய் ... (அரைக்கால் படி) 180 மி.லி.
துளசி ... (அரைக்கால் படி) 180 மி.லி.

3 நாட்கள் கலந்து கொண்டு குடிக்கவும்.

**உணவு:**

உப்பு ஆகும். புளி புகையிலை கூடாது.

**வேறு**

II புளியயிலை ... 700 மி.லி (½ படி)
ஈரவெங்காயச்சாறு ... 700 மி.லி (½ படி)

கலந்து குடிக்கவும்.

III புளியிலைச்சாறு ... 700 மி.லி (½ படி)
வெங்காயச்சாறு ... 700 மி.லி (½ படி)
பிரமிச்சாறு ... 700 மி.லி (½ படி)
கோவைச்சாறு ... 700 மி.லி (½ படி)

கலநது கொண்டு 3 நாட்கள் குடிக்கவும் கசப்பு புளிப்பு கூடாது.

IV கறிக்க ... 13
பூண்டு ... 3
ஓமம் ... 3.5 கிராம் (வராகன்)
திப்பிலி ... 3.5 கிராம் (வராகன்)

நிலாவாரைச் சமூலம் 2800 மி.லி. (2 படி) (இரு நாழி) 42.10. லிட்டர் தண்ணீர் விட்டவித்து முடிந்தவுடன் அரைத்துக் கொள்ளவும். வடிக்கட்டி உட்கொள்ளவும்.

V பற்பாடகத்தை பாலில் அரைத்துத் தரவும்.
பற்பாடகத்தை தயிரில் அரைத்துத் தரவும்.

**வேறு**

1) மூங்கில் பட்டை
2) பனம் பட்டை
3) வில்வவேர்
4) சுக்கு
5) திப்பிலி
6) கொத்தமல்லி
7) சீரகம்

இவற்றைக் காய்ச்சித் தரவும். தேன் கலந்து தர வாந்தி நிற்கும். கடைச் சரக்குகளுக்குச் சம எடையில் காய்ச்சி அரைக்கால் பங்காக்கித் தரத் தீரும்.

## பெரும்பாடு தீர

| | | | |
|---|---|---|---|
| 1) | பருத்திஇலைச் சமூலம் | — | 672 மி. லி (ஆழாக்கு) |
| | நல்லெண்ணெய் | — | 672 மி. லி (ஆழாக்கு) |
| | சீரகத் தூள் | — | சம எடை |
| | பனை வெல்லம் | — | |

இவற்றைக் கலந்து, கலக்கிக் குடிக்கவும் புளி, புகையிலை கூடாது.

2) பருத்தியிலை பிஞ்சு இரண்டையும் நசுக்கிப் பிழிந்துசாறு எடுத்து, எலுமிச்சைப் பழச்சாற்றுடன் கூட்டிக் குடிக்கவும்.

## மேகம் தீர

சீந்தில் தண்டு
வெங்காயம்
சிறுதும்பை — 85, கி. (பலம்)
பனைவெல்லம் — 85. கி. (பலம்)

**செய்முறை**

முதலிரண்டையும் வெள்ளாட்டுப்பாலில் துவைக்கவும் சாறு வாங்கிக் கொண்டு சிறுதும்பையை அரைக்கவும் வடி. கட்டியபின் பனை வெல்லம் கலந்து குடிக்கவும்.

**உணவு**

உப்பு கூடாது.

**காலஅளவு**

3 நாட்கள் காலைமட்டும்.

## 42. தொண்டை அடைப்புத் தீர

எலுமிச்சைப்பழத்தை இரண்டாக அறுத்துக் கொள்ளவும். இரண்டு பூலன் பழத்தில் அக்ரகாரம் (¼ வராகன்) 9 கிராம் வைத்து ஊறவிடவும். ஊறியபின் இரசங்களைக் கலந்து கொண்டு சாப்பிடவும்.

## 43. குதஅரிப்புத் தீர

சாரணைவேர், பால், இஞ்சி எடுத்துக் கொள்ளவும். சாரணைவேரை அரைத்து சாறு எடுத்துக்கொண்டு, பால் இஞ்சிச்சாறு தண்ணீர் கலந்து காலையில் மட்டும் உட்கொள்ளவும்.

## 44. கர்ப்பசூலை தீர

1) தேங்காய்ப்பால், பசும்பால் காய்ச்சிக் குடிக்க.

2) பருத்திக் கொட்டையை இடித்துச்சாறு பிழிந்து வடிகட்டி சர்க்கரையைக் கலந்து குடிக்கவும்

3) பேய்வேளைச்சாறு
பசு நெய்
மயிர் வெங்காயச்சாறு
பாக்களவு மிளகு 8

அரைத்துக் கலந்து தரவும்

## 45. பவுத்திரம் தீர

கருங்குருவை நெல் கொண்டு வந்து 2 படி அரிசியாக்கவும். வெள்ளறுகைப் பொடி செய்து கொள்ளவும், சிரங்கை அளவு பொடியை அரிசியில் போட்டு வெள்ளாட்டுப் பாலில் சோறு ஆக்கவும். மீண்டும் வெள்ளாட்டுப் பால் விட்டுப் பிசைந்து சாற்றை வடிகட்டிக் குடிக்கவும்.

**அளவு:**

ஒரு கடிகை அளவு வெள்ளறுகுத்தூள் சேர்க்கவும் காலை பட்டும் உட்கொள்ளவும்

**காலஅளவு:**

மூன்று நாட்கள்

**உணவு:**

உப்பு, புளி கூடாது. உணவில் வெள்ளாட்டுப்பால் சேர்க்கவும்.

## 46. காதுவலிக்குச்சாறு

வேளையிலை சாறு பிழிந்து காதில் விடவும். உத்தாமணிச் சாறு பிழிந்து காதில் விடவும். சிறுபுள்ளடிச்சாறு, பூண்டுச்சாறு காதில் விடவும்.

### உப்புசம் தீர

| | |
|---|---|
| ஆடா இலைச்சாறு<br>இந்துப்பு<br>திப்பிலி<br>வெங்காரம் | சம அளவு |

சாற்றிலரைத்துத்தேன் விட்டுக் குழப்பித்தரவும்

### பூப்படையக் கியாழம்

கொள்ளுவேர் — பிடி

பூவரசம் பூ — பிடி

1.3 லிட்டர் (படி) நீரில் காய்ச்சி அருந்தவும்.

### கல்லடைப்புத் தீரச்சாறு

நெருஞ்சி வேர் — 4 பலம்

பசும்பாலில் அரைத்துக் குடிக்கக் கல்விழும்.

### முக்குற்றம் தீரக் குடிநீர்

பசு சாணி போட்டவுடன் சாணப்பால் எடுத்துக் காய்ச்சவும். தண்ணீர் விட்டான் கிழங்கு — 10 பலம் இருநாழி நீர்

லிட்டு உழக்காகக்காய்ச்சவும். பின் வடித்து, பசும்பால் உழக்கு ஊற்றி காய்ச்சிக் குடிக்கவும். முக்குற்றத் தோடம் தீரும்.

### கழிச்சல் தீரச்சாறு

எருமைப்பால் — ஆழாக்கு
பழச்சாறு — ஆழாக்கு
கலந்து 4 நாட்கள் குடிக்கவும். கழிச்சல் தீரும்.

### வெப்பம் தீரச்சாறு

வாழைப்பழம் — 5 எண்

கற்றாழை சோறு — பலம்

கற்றாழை சோற்றை இடித்து விளாங்காயளவு எடுத்துக் கொண்டு சாறு பிழியவும். வாழைப்பழத்தை உரித்துப்போட்டு கலந்து குடிக்கவும். 3 நாட்கள் செய்யவும்.

### வேறு

நீர்ப்பூலா கொழுந்து }
புளியங்கொட்டைத் தோல் }

தேங்காய் பாலில் அரைத்துக்குடிக்கவும்.

### வேறு

சந்தனம்

காய்ச்சுக்கட்டி

எலுமிச்சம் பழச்சாற்றில் அரைத்து எருமைத் தயிரில் குடிக்கவும்.

## இரத்த பித்தம் தீரக்கியாழம்

1) சங்கன்வேர்
சிறுகீரைவேர்
ஈரவெங்காயம்
அறுகன்வேர் } சமஅளவு

அரைத்துப் பசு வெண்ணெயில் உண்ணவும்

2) பாகையிலைச்சாறு குடிக்க

3) பொன்னாங்கண்ணிவேர்
முசுமுசுக்கை வேர்
சிறுகீரை வேர்
பனைவெல்லம்

கூட்டி அரைத்து உட்கொள்ள இரத்த பித்தம் தீரும்.

4) நாரத்தம்பிசின்
இலந்தைப்பிசின்

கொட்டைப்பாக்களவு அரைத்து பசுவின்பாலில் குடிக்கவும்.

5) அரைக்கீரைவேர்
செம்பருத்தி இலை
வெள்ளைக் குங்கிலியம்

அரைத்து வடிகட்டிப் பசும்பாலில் உண்ணவும்

**கல்விழச்சாறு**

சாரணைவேர்
சந்தனம் } சமஅளவு

நீர்விட்டரைத்துக் குடிக்கத் தீரும்

**சூதகம் வரக் குடிநீர்**

| | | |
|---|---|---|
| கொள்ளுவேர் | — | பிடி |
| பூவரசம்பூ | — | பிடி |
| தண்ணீர் | — | 1 படி |

கலந்து காய்ச்சிக் குடிக்கவும்.

## பாண்டுவிடபாகம் காமாலைதீரக் குடிநீர்

**சரக்குகள்:**

வெள்ளாட்டுக் கோமயம் — குறுணி
சங்கன்வேர்ப்பட்டை
சிவனார் வேம்பு 15 பலம்
கடுக்காய்

**செய்முறை:**

விரைபோக்கிக் கொண்டு கடுக்காயை ஏனையவற்றுடன் இடித்து, கோமயத்தில் போட்டு 13 நாட்கள் பூமிப் புடம் வைத்திருக்கவும், 13-ஆம் நாள் எடுத்து தினம் ஒரு கொட்டாங்குச்சி குடிக்கவும். இவ்வாறு 3, முதல் 5 நாட்கள் வரை குடிக்க பேதியாகும். பத்தியம் ஒன்றும் ஆகாது.

**வேறு**

**சரக்குகள்:**

| | | |
|---|---|---|
| வெள்ளாட்டுக் கோமயம் | — | 2 படி |
| பசுவின் ,, | — | 2 படி |
| தண்ணீர் | — | 2 படி |
| புடங்க நாரி அல்லது | | |
| கொமுக்கட்டை இலை | — | 1 தூக்கு |
| கடுக்காய் | — | 15 எண் |

**செய்முறை:**

ஒன்றாகச்சேர்த்து எரித்து ½ படியாக எடுக்கவும். வடிகட்டிக் கொண்டு விரை எடுத்த கடுக்காய் இரண்டைத் தட்டிப் போட்டரைத்து, கியாழத்தில் கலந்து 5 நாட்கள் குடிக்கவும். பேதியாகும் நீர் இறங்கும்.

**உணவு:**

உப்பு கூடாது. வெந்நீர் சோறு.

**தீரும்பிணிகள்:**

பாண்டு, சோகை, காமாலை விட பாகம். தீரும்.

**வேறு**

பசுவின் கோமயத்தில் (1 படி) சுத்தித்த கடுக்காய் 3-ஐ போட்டு அரைக்கால் பங்காக எரித்துக் கொண்டு, கல்வத்திலிட்டு அரைத்து, வடிகட்டிக் குடிக்கவும்.

## கணம் தீரச் சாறு

தகரைவிதை
பூண்டு
வசம்பு

கூட்டி நறுக்கி, இடித்து வடிகட்டி, சாறு எடுத்து உள்ளுக்குத்தரவும். மேலே தடவித் துவாலை இடவும்.

### வேறு

பழம்பாசி
உள்ளி
வசம்பு

விளக்கெண்ணெயிலிட்டுப் பிசைந்து சூரியபுடம் வைத்து உள்ளுக்குத்தந்து வெளியில் பூசவும்.

## கணமாந்தம் தீர

இலந்தப்பட்டை
அகத்திப்பட்டை
சவரிவேர்
தென்னங்குரும்பை

நறுக்கிச் சாறு எடுக்கவும். இத்துடன் வெங்காயம், சீரகம் சேர்த்தரைத்துக் கரைத்து வடிக்கட்டித்தரவும்

## நீர் சுரப்புத் தீர

கற்றாழைச்சோறு
சீரகம்
சீனி

எலுமிச்சங்காயளவு

கூட்டி அரைத்துக் கொடுக்கவும்

### வேறு

நெருஞ்சிக்காய் வேர், எலுமிச்சங்காயளவு அரைத்து பசும் பாலில் குடிக்கத் தீரும் கை கண்டது.

## பாண்டு காமாலை தீரக் குடிநீர் (வேறு)

**சரக்குகள்:**

பச்சை உமி — ஒரு குத்து
கழுதைலத்தி — ½ படி

**செய்முறை:**

சட்டியில் உமியைப் போட்டு கழுதைலத்தியை அதன் மேல் வைத்துப் பரப்பவும். பின் வெங்காயத்தை வைத்து தண்ணீர் விட்டு இரவு முழுவதும் ஊறவைக்கவும் காலையில். வடி கட்டிக்குடிக்கவும்.

**கால அளவு:**

ஆறு நாட்கள்

**உணவு :**

வெந்நீர் சோறு, உப்பு கூடாது.

வீக்கம் கண்டால் சுரைக்குடுக்கையைச் சுட்டு, சாம்பலாக்கி சிறுநீரில் கரைத்துப் பூசவும்.

**குறிப்பு :**

இம்முறையானது பின்பற்ற ஏற்றது அல்ல. எனவே இக் குடிநீர் முறையைச் செய்தல் வேண்டாம்.

## அதிசாரம் தீரக் குடிநீர்

**சரக்குகள் :**

சுட்ட கடுக்காய் சாம்பல்
சீலைச் சாம்பல்
இலவம் பிஞ்சு
காசுக்கட்டி
அதிவிடையம்

அரைத்து வெள்ளாட்டுத் தயிரில் உட்கொள்ளவும்.

## வேறு

விரைஎடுத்த பெரிய கடுக்காயைக் கருகச்சுட்டு, நறுக்கி, தயிரில் அரைத்துக் குழைத்து இருவேளை உண்ணவும், மூன்று நாட்களுக்கு, இரத்தக் கழிச்சல், சீதக்கடுப்பு, சீதம் என்பன தீரும்.

## இரத்தக் கடுப்புத்தீர

தயிர்க்கட்டி — ஒருதூக்கு
3 வருடமாங்கொட்டை

அரைத்துக் கலக்கிக் கலந்து குடிக்கவும்.

# சூரணப்பிரிவு

## 47. பரங்கிப்பட்டைச் சூரணம்[1]

**சரக்குகள்:**

| | | |
|---|---|---|
| 1) | பரங்கிப்பட்டை | 935 கி (11 பலம்) |
| 2) | சிவனார்வேம்புபொடி | 170 கி (2 பலம்) |
| 3) | சீரகம் | 85 கி (1 பலம்) |
| 4) | சுக்கு | 85 கி (1 பலம்) |
| 5) | திப்பிலி | 85 கி (1 பலம்) |
| 6) | பசுநெய் | 2.400 லி (2 படி) |

**செய்முறை:**

இவைகளை இடித்துப்பொடி செய்து கொள்ளவும். பசு நெய்யில் கலந்து சூரியபுடம் ஒரு நாள் வைத்து எடுக்கவும்

**அளவு:**

1 கரண்டி காலையில்

**குறிப்பு:**

30 நாள் சூரிய புடம் வைத்து, எண்ணெயை புரையோடிய புண்களுக்கு வெளித்தடவலாம். தலையில் வெடிக்கின்ற பொடுகுக்குப் போடலாம், ஆறும்.

**தீரும்பிணிகள்:**

விப்புருதி, புண், கிரந்தி

### பரங்கிப்பட்டை சூரணம்

பரங்கிப்பட்டை 850 கி (10 பலம்) எடுத்து வெற்றிலைச் சாற்றில் பிசறிக்கொள்ளவும். கொட்டை கரந்தையைப் பானை

---

1 சூரணம் எனப்பட்டாலும் நெய்யையே குறிக்கின்றது.

யில் போட்டு 10.7 லிட்டர் (பதக்கு) நீர் வார்க்கவும். பானை வாயை சீலை கட்டி பிசறின பங்கிப்பட்டையைச் சீலை மேல் வைத்துக் கொள்ளவும். அடுப்பை எரிய விடவும். பரங்கிப் பட்டையின் நீர் சுண்டியபின், நிழலில் உலர்த்தவும். சீனி கூட்டி உண்ணவும்.

**தீரும்நோய்:**

சூலை

**வேறு** (முற்றுப்பெறவில்லை)

| | | |
|---|---|---|
| பரங்கிப்பட்டை | — | ($1\frac{1}{2}$ சேர்) |
| கறுப்பு குங்கிலியம் | — | (பலம்) $\frac{3}{4}$ |
| வெள்ளைக் குங்கிலியம் | — | (பலம்) $\frac{3}{4}$ |
| சிகப்புக் குங்கிலியம் | — | $\frac{3}{4}$ |
| சாம்பிராணி | — | |
| ஆலத்தி கற்பூரம் | — | வலு |

## தாளிசபத்தரி சூரணம் (வேறு)

| | | |
|---|---|---|
| தாளிச பத்தரி | — | (வராகன்) |
| சுக்கு | — 2 | (வராகன்) |
| மிளகு | — 4 | (வராகன்) |
| திப்பிலி | — 8 | (வராகன்) |
| நவச்சாரம் | — 14 | (வராகன்) |
| ஏலம் | — 15 | (வராகன்) |

**செய்முறை:**

சூரணம் செய்து, சர்க்கரை சூரண எடைக்குச் சம அளவு கலந்து கொள்ளவும்.

**அளவு:**

விரலளவு

**தீரும்பிணிகள்:**

அரோசகம் 40, உட்சுரம், சுரிச்ச பிரமியம், உதிர சூலை. பாண்டு, சுரம், அதிசாரம் வாயு என்பன.

### (வேறு) காச இருமல் தீர

| | | |
|---|---|---|
| தாளிச பத்திரி | — | 1 (வராகன்) |
| மிளகு | — | 4 (வராகன்) |
| சுக்கு | — | 6 (வராகன்) |
| திப்பிலி | — | 8 (வராகன்) |
| குசைநீர் | — | 10 (வராகன்) |
| இலவங்கப்பட்டை | — | 1 (வராகன்) |
| ஏலம் | — | 1 (வராகன்) |
| நற்சீரகம் | — | 6 (வராகன்) |
| சீனிசர்க்கரை | — | 32 (வராகன்) |

**செய்முறை:**

சூரணம் பண்ணி, காலை, மாலை உண்ணவும்.

## 48. தாளிச பத்திரி சூரணம்

**சரக்குகள்:**

| | |
|---|---|
| தாளிச பத்திரி | — 85 கி (1 பலம்) |
| மிளகு | — 170 கி (2 பலம்) |
| திப்பிலி | — 255 கி (3 பலம்) |
| சுக்கு | — 340 கி (4 பலம்) |
| காட்டெருமைப் பால் | — 425 கி (5 பலம்) |
| இலவங்கப்பட்டை | — 255 கி (3 பலம்) |
| ஏலம் | — 255 கி (3 பலம்) |
| நா. சர்க்கரை | — 2040 கி (24 பலம்) |

**செய்முறை**

சரக்குகளை இடித்துப் பொடிசெய்து சலித்துக்கொள்ளவும், பால், சர்க்கரையுடன் சேர்த்து வைக்கவும்.

**அளவு**

விரலளவு

**காலஅளவு**

காலை தேன் மாலை வெந்நீர்

**தீரும்பிணிகள்:**

இருமல், வயிற்றுப்போக்கு வழலை, அருவருப்பு, அகுவை வயிற்று நோவு, சூலை, பாண்டு, சயம் பைத்தியம், வாயு.

**விலக்கு:**

புளி, புகையிலை.

## 49. மேகம் தீர சூரணம்

**சரக்குகள்**

கறுப்பு சின்னிப்பட்டை }
சன்னலவங்கம் }
கல்நார் }
நற்சீரகம் }

சூரணம் பண்ணிக் கொள்ளவும்

**அனுபானம்:**

சீனி, சர்க்கரை சமஎடை கலந்து காலை, மாலை உண்ணவும்.

**விலக்கு:**

உப்பு, புளி கூடாது

**உணவு:**

பாசிப்பயறு அரிசியுடன் கலந்து பொங்கி பசுவின் நெய் விட்டு உண்ணவும்.

## சுவாச காசம் தீரக் கண்டங்கத்தரி சூரணம்

**சரக்குகள்:**

| | | |
|---|---|---|
| கண்டங்கத்தரிவேர் | — | 43 கி ($\frac{1}{2}$ பலம்) |
| அரைக்கீரை | — | 85 கி (1 பலம்) |
| சுக்கு | — | 255 கி (3 பலம்) |
| திப்பிலி | — | 255 கி (3 பலம்) |
| மிளகு | — | 255 கி (3 பலம்) |
| மிளகரணைப்பட்டை | — | 85 கி (1 பலம்) |

**செய்முறை:**

இடித்து, சூரணம் செய்து கொள்ளவும். நெய்விட்டு, பொரித்துச் சர்க்கரையைக் கலந்து கொள்ளவும்.

**அளவு:**

பாக்களவு

**மருந்து:**

(பணவிடை) 488 மி.கி. செந்தூரம் சேர்த்து உண்ணவும்

**தீரும்பிணிகள்**

இருமல், சுவாசகாசம்.

**விலக்கு:**

துவரை, மிளகு, வெள்ளங்காய்வற்றல், வெள்ளாட்டு உப்புக்கண்டம், கடுகு, பெருங்காயம், புளி, நல்லெண்ணெய் கூடாது.

## 50. மேகம் தீர ரேவல் சின்னி சூரணம்

**சரக்குகள்:**

| | | |
|---|---|---|
| ரேவல் சின்னி | — | 85 கி. (பலம்) |
| கருஞ்சீரகம் | — | 85 கி. (பலம்) |
| நற்சீரகம் | — | 85 கி. (பலம்) |
| கொத்தமல்லி | — | 85 கி (பலம்) |
| சிறுநாகப்பூ | — | 85 கி. (பலம்) |
| ஏலம் | — | 85 கி. (பலம்) |
| குகைநீர் | — | 85 கி. (பலம்) |
| பொட்டிலுப்பு | — | 85 கி. (பலம்) |
| சீனா கற்கண்டு | — | 340 கி (4 பலம்) |
| சீனி | — | 340 கி (4 பலம்) |

**செய்முறை:**

கடைச்சரக்குகளை இடித்துப் பொடி செய்து சலித்து கலந்து கொள்ளவும். 5 பங்கு, 7 பங்கு எனப்பிரித்துக் கொள்ளவும் 350 மி. லி. ($\frac{1}{4}$ படி) பசும்பால், 350 மி. லி.

நீர்விட்டுக் காய்ச்சவும். 1 பங்கு சூரணத்தை வாயில் போட்டுக் கொண்டு பாலைக் குடிக்கவும் தயிர்சோறு உண்ணவும் சிறுநீர் பிரியும். அந்த நீரில் மேகம் விழும். நாபி குளிர்ந்திருக்கும்.

**காலஅளவு:**

7 நாட்கள், 5 நாட்கள்

**விலக்கு:**

மோர் கூடாது. தயிர் ஆகும். மர்மமடி அனைத்து வெள்ளையும் தீரும்.

## 51. பெரும்பாடு தீர

**சரக்கு:**

கடுக்காய் — 100

**செய்முறை:**

கடுக்காயை சுத்தி செய்து பொடியாக்கி, ஆடா. சாற்றில் 14 தடவை அரைத்து 40 நாட்கள் உலர்த்தவும். பின் உண்ணவும்.

**அளவு:**

280 கி. (கழஞ்சு)

**தீரும் பிணிகள்:**

வாய், நீர்த்தாரை, இரத்தம் விழுதல், இருமல், பெரும்பாடு

## 52. பிரமியம் தீர

**சரக்குகள்:**

தண்ணீர் விட்டான் கிழங்கு — 10கி (1/8பலம்)
தேற்றான் கொட்டை — 85கி (பலம்)
சீரகம் — 85கி (பலம்)
சர்க்கரை — 85கி (பலம்)

**செய்முறை:**

முதல் மூன்று சரக்குகளையும் இடித்து பொடி செய்து சலித்துக் கொள்ளவும் சர்க்கரையைக் கலந்து கொள்ளவும்.

**உண்ணும்முறை:**

பசு வெண்ணையில்

**கால அளவு**

மூன்று நாட்கள்

## 53. கற்பூரசிலாசத்து சூரணம்

**சரக்குகள்:**

1. பேரீச்சம்பழம் — 43கி (½பலம்)
2. நெல்லிப்பருப்பு — 43கி (½பலம்)
3. திப்பிலி — 43கி (½பலம்)
4. கற்பூர சிலாசத்து — 43கி (½பலம்)
5. ஏலம் — 43கி (½பலம்)
6. அதிமதுரம் — 43கி (½பலம்)
7. கடுக்காய் — 43கி (½பலம்)
8. வெங்காரம் — 43கி (½ பலம்)
9. சந்தனக்கட்டை — 43கி (½ பலம்)
10. வெள்ளரிவிதை — 43 கி (½ பலம்)
11. கொத்தமல்லி — 43 கி (½ பலம்).

**செய்முறை:**

சரக்குகளை இடித்துப் பொடி செய்துசலித்துக் கொள்ளவும். சரி எடை சர்க்கரையைச் சேர்க்கவும்.

**உண்ணும் முறை:**

அரைக்கால் படி தேங்காய்ப் பால், இளநீர்

**அளவு:**

1 விரலளவு இருவேளை

**கால அளவு :**

20 நாட்கள்

**தீரும்பிணிகள்:**

சீழ்பிரமியம், இரத்தபிரமியம் உண்டு வரவிட்டு மேக நோய்கள் தீரும்.

**குறிப்பு:**

பத்தியமில்லாவிடில் கை கால் முடங்கும். 4 நாட்களுக்கு ஒருமுறை குளிக்கவும்.

**விலக்கு:**

உப்பு, மிளகு, கொள்சாறு, வெள்ளாட்டுவற்றல் ஏனைய கூடாது.

## கற்பூர சிலாசத்து சூரணம் வேறு

| | |
|---|---|
| 1) பேரீச்சம்பழம் | (4 வராகன்) |
| 2) நெல்லிவிரை | |
| 3) திப்பிலி | |
| 4) கல்மதம் | |
| 5) கல்நார் 1 | |
| 6) சந்தனம் | |
| 7) வெள்ளரிவேர் | |
| 8) கற்பூரம் | |
| 9) ஆவாரை இலை | |
| 10) கற்பூரசிலாசத்து | |

**செய்முறை:**

கலந்து கொண்டு இடித்துச் சூரணம் செய்து கொள்ளவும்.

**உண்ணும் முறை:**

தேன், வெல்லம்

**அளவு:**

ஒரு விரல் பிடியளவு

**உணவு:**

வெந்நீர் சோறு

**தீரும்பிணிகள்:**

மேகம், சிறுநீர்

## 54. சிறுநீர் அடைப்புத்தீர

**சரக்குகள்:**

சூடர் கற்பூரம்
பொரிகாரம் } சம அளவு
நாட்டுசீரகம்

**செய்முறை:**

பொரி காரத்தைப் பொறித்துக் கொள்ளவும். கற்பூரத்தை தீயில் வெதுப்பிக் கொள்ளவும். சீரகத்தை பொடி செய்து, கலந்து சூரணம் செய்து கொள்ளவும்.

**துணை மருந்து:**

நெருஞ்சிச்சாற்றை சமூலத்துடன் பிடுங்கி 21.5 லிட்டர் (நாழி) நீரில் கலந்து கொண்டு காய்ச்சி, 336 மிலி (உழக்கு) குறுக்கிய பின்பு, உட்கொள்ளவும்.

**அளவு:**

மூவிரல்

**தீரும்பிணிகள்:**

வளரும் கெட்ட சதைகள், நீர் அடைப்பு தீர்ந்து நீர் நன்கு பிரியும்

## 55. கிராணி தீர

**சரக்குகள்:**

சீனா கல்கண்டு — 170 கி (2 பலம்)

ஓமம் — 170 கி (2 பலம்)

அரிசிப்பொறி — 170 கி (2 பலம்)

பின்னிரண்டையும் வறுத்து சூரணித்து, கல்கண்டுடன் காலை, மாலை உண்ணவும்

**வேறு**

| | | |
|---|---|---|
| நாவல் கொட்டை<br>மாங்கொட்டை மெழுகு<br>பற்பாடகம் | } | சம எடை |

பொடியாக்கிக் கொண்டு (2 கழஞ்சு) 560 கி தேனில் உண்ணவும்.

## 56. வயிற்றுப் பொருமல் தீர

**சரக்குகள்;**

பொடுதலை
சுக்கு
மிளகு
கடுக்காய்
கறிவேப்பிலை
உப்பு

**செய்முறை:**

இவைகளைக் கறுப்பாக வறுத்துப் பொடிசெய்து சலித்து மோரில் குடிக்கவும்.

## 57. மணி மந்திரச் சூரணம்

**சரக்குகள்:**

| | | | | |
|---|---|---|---|---|
| சீரகம்<br>சுக்கு<br>மிளகு<br>திப்பிலி | } | ஆனைத்திப்பிலி<br>சிறுதேக்கு<br>வால் மிளகு<br>திப்பிலி மூலம் | } | கருஞ்சீரகம்<br>குரோசானி ஓமம்<br>பொன்முசுட்டை வேர்<br>இந்துப்பு |

**செய்முறை:**

85 கிராம் (1 பலம்) சரக்குகளை எடுத்துக் கொள்ளவும். இளவறுப்பாக வறுக்கவும். இடித்து, சலித்துக் கொள்ளவும். அபின் 85 கி. (1 பலம்) சேர்த்துக் கொள்ளவும்.

**தீரும் பிணிகள்:**

எல்லாவிதக் கழிச்சல்கள், அசீரணம், பேதி, கிராணி

**அனுபானம்: தேன்**

## 58. ஆயில் பட்டைச் சூரணம்

**சரக்குகள்:**

1) ஆயில் பட்டை — 85 கி. (பலம்)
2) சாரணைவேர் — 85 கி. (பலம்)
3) மூக்கரட்டைவேர் — 85 கி. (பலம்)
4) சுக்கு — 85 கி. (பலம்)
5) மிளகு — 85 கி (பலம்)
6) பூண்டு — 85 கி. (பலம்)
7) ஓமம் — 85 கி. (பலம்)

**செய்முறை:**

இடித்துப் பொடி செய்து, சலித்து வைத்துக் கொள்ளவும்.

**அளவு:**

விரலளவு

**உட்கொள்ளும் முறை:**

வெந்நீரில்

**தீரும்பிணிகள்:**

வாத குன்மம், வலி குன்மம், பித்த குன்மம், எரிகுன்மம். தக்காளிச் சாற்றில் ஊற வைத்துண்ண சோகை, வாதம், குடல் விப்புருதிபோகும்.

## 59. வாயு தீர

**சரக்குகள்**

இந்துப்பு — 43 கி. (½ பலம்)
மிளகு — 43 கி. (½ பலம்)
திப்பிலி — 43 கி. (½ பலம்)
ஏலம் — 43 கி. (அரை பலம்)
சீரகம் — 22 கி. (கால் பலம்)
குரோசானி ஓமம் — 43 கி. (அரை பலம்)

**செய்முறை :**

வறுத்து இடித்துப் பொடியாக்கி சலித்து தேனில் உட் கொள்ளவும்.

**தீரும்பிணி:**

பசியுண்டாகும்

## 60. அண்டவாதம் தீர

**சரக்குகள்:**

| | | |
|---|---|---|
| இந்துப்பு | — | 85 கி. (பலம்) |
| வெடியுப்பு | — | 85 கி. (பலம்) |
| காந்தம் | — | 85 கி. (பலம்) |
| கருஞ்சீரகம் | — | 85 கி. (பலம்) |
| ஓமம் | — | 85 கி. (பலம்) |
| பெருங்காயம் | — | 85 கி. (பலம்) |
| வெங்காயம் | — | 85 கி. (பலம்) |

**செய்முறை:**

பொடி செய்து கொண்டு சலித்து சூரணம் செய்து உண்ணவும்.

**அளவு:**

விரலளவு காலை, மாலை,

## 61. நிலவாகைச் சூரணம்

**சரக்குகள்:**

நிலவாரைச் சமூலம்

| | |
|---|---|
| சுக்கு | — 140கி (4வராகன்) |
| மிளகு | — 140கி (4வராகன்) |
| சீரகம் | — 140கி (4வராகன்) |
| திப்பிலி | — 140கி (4வராகன்) |
| கண்டத்திப்பிலி | — 140கி (4வராகன்) |
| பூண்டு வெள்ளை வெங்காயம் | — 140கி (4வராகன்) |
| பெருங்காயம், | |
| கிராம்பு— 34கி (½ வராகன்) | — 140 கி (4வராகன்) |

**செய்முறை:**

சரக்குகளை இடித்துக் கொண்டு சூரணமாக்கவும். நில வாரையைத் தனியாக இடித்துக் கொண்டு, 1 பங்கு கடைச் சரக்குகளின் பொடியைக் கூட்டி, சம அளவு சர்க்கரையைச் சேர்க்கவும்.

**அளவு:**

ஒரு விரலளவு

**தீரும்பிணிகள்:**

மேக வெட்டை, நீர்க்கட்டு, காமாலை

**வேறு**

| | |
|---|---|
| பரங்கிப்பட்டை சூரணம் | — 3/4கி (1 1/2 சேர்)* |
| பூனைக்கண் குங்கிலியம் | — 1/8 பலம் |
| வெள்ளைக் கண் | — 1/8 பலம் |
| சாம்பிராணி | — 1/8 பலம் |
| ஆலத்தி கற்பூரம் | — 3/8 பலம் |

**செய்முறை:**

பானையில் சூரணம், தவிர ஏனைய சரக்குகளை இடித்துப் போடவும்.

நிலவாரை சூரணத்தை அதன் மேல் வைக்கவும். சீலையால் கட்டவும். சீலையின் மேல் பரங்கிப்பட்டை சூரணத்தைப் போடவும். பின் சீலை மண் செய்து, மூடவும் அடுப்பிலிட்டுச் சூடு பண்ணவும் (1 நாழிகை) 2 மணி நேரம் சென்ற பின் இறக்கி எடுத்துக் கொள்ளவும்.

**உட்கொள்ளும் முறை:**

தேன்

**அளவு:**

புன்னைக்காய்

**தீரும்பிணிகள்:**

கிரந்திகள்

---

*ஏட்டில் இந்தமுறை சரியான முறையில் முழுமை பெறவில்லை

## நிலவாரைச் சூரணம்

(வேறு)

**சேரும் சரக்குகள்:**

1. நிலவாகை
2. சுக்கு
3. மிளகு
4. வாய் விளங்கம்
5. ஓமம்

வகைக்கு 1 பலம் (35 கி.)

**செய்முறை:**

உலர்த்தி, இடித்துத் தூளாக்கவும்.

**உட்கொள்ளும் முறை:**

சர்க்கரை சம அளவு கூட்டிக் காலை, மாலை உண்ணவும்.

**தீரும் பிணிகள்:**

வாயு, பித்தம், வெப்பம், பொருமல், விம்மல், கபநோய்கள், விக்கல், வாந்தி, உடல் எரிவு, சுவாசகாசம், வயிற்று விம்மல், இருமல், குன்மம், மகோதரங்கள், கர்ப்ப வலி, கர்ப்ப ரோகம் புழுக்கள்.

## 62. இருமல் தீர

**சரக்குகள்**

| | |
|---|---|
| பசு நெய் | — 1.400 லி (படி) |
| சாதிக்காய் | — 35 கி (வராகன்) |
| சாதிப்பத்திரி | — 35 கி (வராகன்) |
| கிராம்பு | — 35 கி (வராகன்) |
| ஏலம் | — 35 கி (வராகன்) |
| கோட்டம் | — 35 கி (வராகன்) |
| அதிமதுரம் | — 35 கி (வராகன்) |
| குரோசானி ஓமம் | — 35 கி (வராகன்) |
| முந்திரிப்பழம் | — 35 கி (வராகன்) |

---

*நிலவாரை என்று குறிப்பிடப்பட்டிருந்தாலும் பரங்கிப் பட்டை சூரணம் செய்யும் முறையே உள்ளது.

| | |
|---|---|
| பேரீச்சம்பழம் | — 35 கி (வராகன்) |
| சீனி | — 35 கி (வராகன்) |
| தூதுவளை சமூலத்தூள் | — 140 கி (4 பலம்) |
| சுக்கு | — 140 கி (4 பலம்) |

## இருமல் போக (வேறு)

கற்கடக சிங்கி
சிறு தேக்கு
திப்பிலி
கடுக்காய்
நெல்லிமுள்ளி — சம அளவு
கோட்டம்
மிளகு
சடாமாஞ்சில்
இந்துப்பு

**செய்முறை**

இவைகளை இடித்துச் சூரணம் செய்து நெய்யில் குழைத்து உண்ணவும்.

**உண்ணும்முறை:**

தேன்

**அளவு**

1 கரண்டி காலை மாலை

**தீரும்நோய்கள்:**

வாதகாசம் இருமல்.

## வேறு

தேற்றான் விரையைப் பொரித்துத் திப்பிலியை வறுத்துப் பொடி செய்து கொண்டு கலந்து காலை, மாலை உண்ணவும்.

## 63. இருமல் தீர

மருக்காரை வேர்ப்பட்டையை பாலில் சேர்த்துக் காய்ச்சி உலர்த்தவும். சாதிக்காய், சிற்றரத்தையைச் சேர்த்துப் பொடி செய்து, உட்கொள்ளவும்.

## இருமல் தீர

தேற்றான் விரையை முத்துப்போல் தேய்த்து மெல்லிய தாகச் சீவி எலுமிச்சம்பழச்சாறு விட்டரைத்து, சீரகம் 1 வராகன், கூட்டி வெண்ணெயுடன் குழைத்து விழுங்கவும். ஈளை இருமல் தீரும்.

**சரக்குகள்:**

**வேறு**

| | | |
|---|---|---|
| கடுக்காய்ப்பூ | (1 பலம்) | 3.5 கி. |
| சிறுதேக்கு | (1 பலம்) | ,, |
| திப்பிலி | (1 பலம்) | ,, |
| நெல்லிமுள்ளி | (1 பலம்) | ,, |
| சுக்கு | (1 பலம்) | ,, |
| கோட்டம் | (1 பலம்) | ,, |
| சடாமாஞ்சில் | (1 பலம்) | ,, |
| மிளகு | (1 பலம்) | ,, |
| இந்துப்பு | (1 பலம்) | ,, |
| கண்டங்கத்தரிவிரை | (1 பலம்) | ,, |
| முள்ளிவேர் | (1 பலம்) | ,, |

இவைகளை இடித்துச் சூரணம் பண்ணவும்.

**உண்ணும்முறை:**

தேன்.

**தீரும்பிணிகள்:** வாதகாசம், இருமல்

## 64. கற்பூராதிச் சூரணம்

**சரக்குகள்:**

| | | |
|---|---|---|
| பச்சைக் கற்பூரம் | | |
| பூலாங்கிழங்கு | | |
| ஏலம் | | சம எடை |
| சாதிக்காய் | | |
| சாதிப் பத்திரி | | |
| கிராம்பு | — | 35 கி (வராகன்) |
| சிறுநாகப்பூ | — | 35 கி (வராகன்) |
| மிளகு | — | 105 கி (3 வராகன்) |
| திப்பிலி | — | 140 கி (4 வராகன்) |
| சிறுமூலம் | — | 175 கி (5 வராகன்) |
| இந்துப்பு | — | 210 கி (6 வராகன்) |
| சுக்கு | — | 245 கி (7 வராகன்) |

**செய்முறை:**

இவைகளைப் பொடி செய்து கொண்டு சீனி சர்க்கரை சமமாய்க் கூட்டித் தேனில் உண்ணவும்.

**தீரும்பிணிகள்:**

காச சுவாசம், இரைப்பு, மூல குன்மம், எரிச்சல், ஒக்காளம், நெஞ்சடைப்பு

## 65. இரத்த பித்தம் தீர

**சரக்குகள்:**

முந்திரிப்பழம்

நெற்பொறி

நெய்தல்கிழங்கு

பேரிச்சம்பழம்

நன்னாரி

குகைநீர்
வெட்டிவேர்
நெல்லிமுள்ளி
முத்தக்காசு
சந்தனம்
தக்கோலம்
சாதிக்காய்
இலவங்கப்பட்டை
இலவங்கப்பத்திரி
நிலப்பனைக் கிழங்கு
கோட்டம்
கொத்தமல்லி
கிராம்பு — வகைக்கு சுமார்
செங்கழனிக் கிழங்கு — 0.9 கி (¼ பலம்)
சிறு நாகப்பூ
விலாமிச்சவேர்
அதிமதுரம்

**செய்முறை:**

கடைச்சரக்குகளைப் பொடி செய்து சலித்துக் கொண்டு சம அளவு சர்க்கரை சேர்த்து நெய்யில் உண்ணவும்.

## 66. சயம் தீரக் கண்டங்கத்தரிச் சூரணம்

**சரக்குகள்:**

கண்டங்கத்தரி
ஏலம்
திப்பிலி
சீரகம்
மிளகு
வாய்விளங்கம்
வால்மிளகு — 35 கி (வராகன்)
அதிமதுரம்
அக்கராகாரம்



கருஞ்சீரகம்
முந்திரிப்பழம்
பேரீச்சம்பழம்
சர்க்கரை — 10.5 கி. (3 பலம்)

**செய்முறை:**

இடித்துச் சூரணம் செய்து கொண்டு நெய்யில் உண்ணவும்

ஆடாதொடை வேர், அறுகன்வேர் குடிநீரில் அனுபானமாக குடிக்கலாம்

**குறிப்பு:**

நெய் சர்க்கரை, அப்ரக செந்தூரத்துடன் வைத்துக் கொடுக்கவும்.

## 67. அண்ட வாதம் போக

**சரக்குகள்:**

| | |
|---|---|
| கோழிக்காரம் | — 3.5 கி (வராகன்) |
| சுக்கு | — 3.5 கி (பலம்) |
| கொப்பரைத்தேங்காய் | — 3.5 கி (பலம்) |
| வெங்காயம் | — 3 5 கி (வராகன்) |

**செய்முறை:**

சூரணம் செய்து எடுத்துக்கொள்ளவும்

**உட்கொள்ளும் முறை:**

சுக்குக்கியாழம் மூன்று வேளை

**உணவு:**

கோழி முட்டையைப் பொரித்துத்தரவும்

## 68. கர்ப்பவிப்புருதி தீர

**சரக்குகள்:**

| | |
|---|---|
| பச்சரிசி மாவு | — 1.344 கி (படி) |
| நல்லவெல்லம் | — 1.344 கி (படி) |
| ஆத்திக்கொழுந்து முனை | — 1 பிடி |

**செய்முறை:**

சரக்குகளை இடித்துச் சலித்துப் பெரிய பங்கு3, சிறியபங்கு மூன்று எனப்பிரிக்கவும். பெரியவர்களுக்குப் பெரிய பங்கு, சிறியவர்களுக்கு சின்னப்பங்கையும் உண்ணத்தவுரம்.

**உணவு:**

பச்சரிசி, துவரம்பருப்பு சேர்க்கவும்.

**விலக்கு:**

உப்பு, புளி கூடாது.

## 69. மந்தார காசம் போக

**சரக்குகள்:**

செம்பருத்திப்பூ —
சீரகம் —

பொடிசெய்து சலித்துக் கொண்டு உண்ணவும், காலை, மாலை இருவேளை, 7 நாட்கள்.

## வெட்டை தீர

**சரக்குகள்:**

| | | |
|---|---|---|
| ஏலம் | — | 3.5 கி. (பலம்) |
| சீரசம் | — | 3.5 கி. (பலம்) |
| மதுரம் | — | 3.5 கி. (பலம்) |
| சர்க்கரை | — | 7.0 கி. (2 பலம்) |

**செய்முறை:**

கடைச்சரக்குகளை இடித்துக் கொண்டு சலித்து எடுத்துக் கொள்ளவும், சீனியைச் சேர்த்துக் கொள்ளவும்.

**கால அளவு:**

ஒரு மண்டலம்

**அளவு:**

விரலளவு

**உண்ணும்முறை :**

பசும்பால், வெள்ளாட்டுப்பால் வெந்நீர் இவைகளில் குடிக்கவும்.

**உணவு:**

வாழை, அவரை சேர்க்கவும்

**தீரும்பிணி:**

அனைத்து வெட்டைகளும் தீரும்

**வேறு**

## 70. புனர்நவாதி சூரணம்

**சரக்குகள்:**

முற்றின சாரணை வேர் (துக்கு)
சுக்கு
மிளகு
திப்பிலி
ஏலம்
கிராம்பு
பச்சிலை சம எடை
குறுந்தொட்டி வேர்

### 1. புனர்நவாதி சூரணம் (வேறு)

முற்றிய சாரணை வேர் — (5 பலம்) 17.5 கி
திப்பிலி — (2½ பலம்) சுமார் 8.75 கி

**செய்முறை:**

இடித்து சூரணம் செய்து கொண்டு தேன், நெய்யில் உண்ணவும்

**தீரும்பிணிகள்:**

அக்னி மந்தம், செரியாகுணம், குடல்வாதம்.

**குறிப்பு:**

சாரணை வேரைப் பாலில் சுத்தி செய்து கொள்ளவும்.

நெருஞ்சில் வேர்
கொடிவேலி வேர்
சீரகம்
ஓமம்

**செய்முறை :**

சாரணைவேரைப் பசும் பாலில் வேக வைத்து நறுக்கி, உலர்த்தி, இடித்துப் பொடி செய்யவும். ஏனைய கடைச்சரக்கு களையும் பொடி செய்து சூரணித்துக் கலந்து கொள்ளவும்.

**அளவு:**

மூவிரலளவு

**உட்கொள்ளும் முறை:**

தேன்

**தீரும்பிணிகள்:**

பேதி, பெருவயிறு, காசம், சிலேத்துமம், பித்தம், வாயு சூலை, வெப்பம் முதலியன.

## 71. சிங்கிநாதச் சூரணம்

**சரக்குகள்:**

| | |
|---|---|
| கற்கடக சிங்கி<br>கண்டங்கத்தரி வேர் தோல்<br>திரிகடுகு<br>சிறுவழுதுணை வேர் | சம எடை |

**செய்முறை**

சூரணித்துக் கொள்ளவும்

**உண்ணும்முறை:**

ஒருதரம் தேனில் குழைத்துண்ணவும்

வயிறு பேதலிக்கும். குளிர்ந்த நீரில் வயிறு பேதலியாது தீரும்

**தீரும்பிணிகள்:**

விக்கல், இருமல், நீர்ப்பாய்ச்சல், கபம் என்பன.

## புனர்வாதிச் சூரணம்

**சரக்குகள்:**

| | | |
|---|---|---|
| சாரணைவேர் | — | 125 கி. (5 பலம்) |
| திப்பிலி | — | 88 கி. (2½ பலம்) |

**செய்முறை:**

சாரணை வேரைப் பாலில் சுத்தி செய்து கொள்ளவும். உலர்த்தி, பொடி செய்து கொண்டு சலித்து எடுத்துக் கொள்ளவும்.

**உண்ணும் முறை:**

தேன், நெய்

**தீரும் பிணிகள்:**

பசித்தீ குறைவு, செரியாமை, குடல் வாதம்

## 72. சதகுப்பை சூரணம்

**சரக்குகள்:**

| | | | |
|---|---|---|---|
| சதகுப்பை | — | 3.5 கி. | (1 பலம்) |
| நற்சீரகம் | — | 3.5 கி. | (1 பலம்) |
| பெருஞ்சீரகம் | — | 3.5 கி. | (1 பலம்) |
| கருஞ்சீரகம் | — | 3.5 கி. | (1 பலம்) |
| ஏலம் | — | 3 5 கி. | (1 பலம்) |
| சன்ன இலவங்கப்பட்டை | — | 3.5 கி. | (1 பலம்) |
| அதிமதுரம் | — | 3.5 கி. | (1 பலம்) |
| கொத்தமல்லி | — | 3 5 கி. | (1 பலம்) |
| இலவங்கம் | — | 3.5 கி. | (1 பலம்) |

**செய்முறை:**

இடித்துப் பொடி செய்து, சலித்துக் கொள்ளவும். (2 பங்கு) 7.0 கி சீனா கல்கண்டு சேர்க்கவும். காற்றுப்போகாமல் சீலை கட்டி மூடி, மண்கலம் அல்லது பாத்திரத்தில் வைக்கவும்.

**உண்ணும் முறை:**

வெந்நீரில்

**அளவு:**

விரலளவு.

**கால அளவு:**

20 நாட்கள் காலை, மாலை.

**தீரும் பிணிகள்:**

ஈரல், சூலை, அம்பல பித்தம், நெஞ்சு கபலம், உகிர் சூலை, குலையைப்பற்றிய கபம், அசடுகள், பித்தநீரைத் தள்ளிப் போடும், விகாரம், பைத்தியம் உடலுக்கு வலிமையைத் தரும். தாதுவுக்கு மகிழ்ச்சியைத் தரும். கண்ணொளி ஏற்படும். தூக்கம், புத்தித் தெளிவு ஏற்படும். வயிற்றுப் பூச்சியைக் கொல்லும், இடுப்பு நோவு தீரும்.

## 73. இஞ்சிச் சூரணம்

**சரக்குகள்:**

இஞ்சி — 35. கி. (வராகன்)
சர்க்கரை — 35. கி. (வராகன்)

**செய்முறை:**

இஞ்சியை இடித்து, சூரணித்துக் கொண்டு 5 பங்கு வைக்கவும். 1 பங்கை சம எடைப் புழுங்கலரிசியுடன் சேர்த்தரைத்துப் பசும் பாலில் உண்ணவும்.

**தீரும்பிணிகள்:**

வாந்தி, மயக்கம், தலை கிறுகிறுப்பு, பித்தம் 40 தீரும்.

## இஞ்சிச் சூரணம் (வேறு)

**சேரும் சரக்குகள்:**

இஞ்சி — 2 சேர்
சாதிக்காய் — ½ பலம்

| | | |
|---|---|---|
| ஏலம் | — | |
| கொடிவேலி | — | |
| இலவங்கப்பட்டை | — | |
| இலவங்கப் பத்திரி | — | |
| இலவங்கம் | — | |
| சிறுநாகப்பூ | — | |
| கொத்தமல்லி | — | வகைக்கு |
| சீரகம் | — | அரை பலம். |
| திப்பிலி | — | 1 75 கி. |
| தாளிசபத்திரி | — | |
| நெல்லிப்பருப்பு | — | |
| அதிமதுரம் | — | |
| வெள்ளைக்கல்கண்டு | — | (1 பலம்) 3 5 கி, |

**செய்முறை:**

சூரணம் செய்யவேண்டும்.

**தீரும்பிணிகள்:**

பசி உண்டாகும், பயித்தியம், சயம், மலக்கட்டு, பசித்தீக் குறைவு, பித்தம் தீரும்.

## 74. காசம் தீர

**சரக்குகள்:**

| | | |
|---|---|---|
| இரசம் | — | 3.5 கி (வராகன்) |
| சங்கன் பழம் | — | 14. கி. (4 வராகன்) |
| பலகறை பற்பம் | — | 14.0 கி. (4 வராகன்) |
| வெங்காயம் | — | 14.0 கி. (4 வராகன்) |

**செய்முறை:**

இடித்துப்பொடி செய்து சலித்துக் கொள்ளவும்.

**அளவு:**

உளுந்து எடை.

**உண்ணும்முறை:**

சர்க்கரை, நெய்

## 75. இலவங்க சூரணம்

**சரக்குகள்:**

| | | |
|---|---|---|
| கிராம்பு | — | 70 கி. (2 வராகன்) |
| ஏலம் | — | 70 கி. (2 வராகன்) |
| தாளிசபத்திரி | — | 1120 கி. (16 வராகன்) |
| அதிமதுரம் | — | 2240 கி. (32 வராகன்) |

**செய்முறை:**

இடித்து, சலித்து எடுத்துக் கொள்ளவும்.

**அளவு:**

விரலளவு

**உண்ணும்முறை:**

சர்க்கரை சேர்த்து

**காலஅளவு:**

20 நாட்கள்.

**தீரும்பிணிகள்:**

பித்தப்பாண்டு, பித்த காமாலை, பித்தப்பிரமை.

## 76. கண்டதிப்பிலி சூரணம்

**செய்முறை:**

கண்டதிப்பிலியை வாங்கிப் பழச்சாற்றில் ஊற வைக்கவும். ஊறிய பின் எடுத்துலர்த்தி, காயவைத்துப் பொடி செய்து சலித்துக் கொள்ளவும்.

**அளவு:**

35 கி (வராகன்) உண்ணவும்.

**தீரும்பிணிகள்:**

அக்னி மந்தம், செரியாமை, குடல் வாதம், பித்தவாயு, மேகவாயு, உடற்கருப்பு, வெப்ப வாயு என்பன.

## 77. மேகம் தீர சூரணம்

**சரக்குகள்;**

| | |
|---|---|
| கருப்பு சின்னிப்பட்டை<br>சன்ன இலவங்கம்<br>கல்நார்<br>நற்சீரகம் | சம எடை |

**செய்முறை:**

இடித்துப் பொடி செய்து கொண்டு சலித்து எடுத்துக் கொள்ளவும்.

**உண்ணும்முறை:**

சீனி, சர்க்கரையுடன் சமஅளவு கலந்து.

**உணவு:**

பாசிப் பயிறு, அரிசியைப் பொங்கி பசு நெய்விட்டு உண்ணவும்.

**விலக்கு:**

உப்பு, புளி கூடாது.

**தீரும்பிணிகள்:**

சதகுப்பைச் சூரணம்

மேகத்தினால் வயிற்று இரணத்தை ஆற்றும். நிர்முகத்தில் கல்லைக் கரைக்கும். காது செவிடு குணம் பண்ணும் தினவு, அசந்திருக்கும் கட்டின வாயு, வாய் கோணிப் போகும் வாயு, வலிப்பு, வாயு, மூர்ச்சை வாய் விகாரம், பித்த தோட, பித்த பிரமை, தொண்டை அடைப்பு வாய் நாக்கு கழுத்து வீக்கம், இருமல், வயிற்றுவலி, மாறும் நோக்காடு சர்வாங்கவாதம் சூலை வலி உளமாந்தை வாத பித்தம், கபம், மேகத்தினால்

ஏற்படும் பிணிகள். தாதுப்பெருக்கம். (வீரிய விருத்தி) உண்டாகும் இப்படிப்பட்ட பிணிகள் தீரும்.

## 78. சூதகவாயு தீர

**சரக்குகள்:**

| | | |
|---|---|---|
| ஓமம் | — | 3.5 கி (பலம்) |
| நாய்க்கடுகு | — | 3.5 கி (பலம்) |
| திரிகடுகு | — | சுமார் 0.9கி (¼ பலம்) |
| கண்ட திப்பிலி, தோஷாபுறம், | — | 0.9 கி (¼ பலம்) |
| அரத்தை | — | 0.9 கி (¼ பலம்) |
| இலவங்கப்பட்டை | — | 0.9 கி (¼ பலம்) |
| பூண்டு | — | 0.9 கி (¼ பலம்) |
| கிராம்பு | — | 0.9 கி (¼ பலம்) |
| சீரகம் | — | 9.0 கி (¼ பலம்) |
| பனை வெல்லம் | — | 14 0 கி (4 பலம்) |

**செய்முறை:**

பொடி செய்து, சலித்துக் கொள்ளவும் புழுங்கலரிசி 1 பிடி. பச்சையரிசி 1 பிடி. வறுத்து இடித்துப் பொடி செய்து கொள்ளவும். கலந்து, பனை வெல்லத்துடன் கலந்துண்ணவும்.

## 79. செவ்வட்டைக் கடி தீர

**சரக்குகள்:**

பூண்டு
பனைமுட்டி
செங்கொடிவேலி
வெள்ளைச் செங்கொடிவேலி

**செய்முறை:**

இவைகளை இடித்துப் பொடி செய்து சலித்துக் கொள்ளவும்.

**காலஅளவு:**

மண்டலம்.

**விலக்கு:**

கசப்பு, புளி.

## 80. குட்டம் தீர

**செய்முறை:**

பரங்கிப்பட்டையைத் தூள்செய்து சூரணித்துக் கொள்ளவும் பழச்சாற்றில் ஊறவைத்து, எடுத்துக் காய வைக்கவும் 10 முறை செய்யவும்.

சிவனார் வேம்புத்தைலம் வாங்கிப் பிசைந்து 1.344 (1படி) வைத்துக் கொள்ளவும்.

**அளவு:**

நெல்லிக்காய் அளவு

**தீரும்பிணிகள்:**

கிரந்தி, சூலை, புண்கள், குட்ட ரோகம், சொறி, சிரங்கு, மேல்புற்று, வெடிப்பு, வெள்ளை, செவியடைப்பு, புழு, தடிப்பு, மேகத்தால் வந்த பிணி என்பன.

## 81. பஞ்சலவண சூரணம்

**சரக்குகள்:**

இந்துப்பு
வெடியுப்பு
கல்லுப்பு

**செய்முறை:**

இவைகளைப் பொடி செய்து கொள்ளவும்.

**அளவு:**

ஒரு கரண்டி.

**உண்ணும்முறை:**

தேன்

1. மூன்று உப்புகளே கூறப்பட்டுள்ளன.

**தீரும்பிணிகள்:**

செரியாமை, ஆமைச்சூலை, உட்சூலை உட்குத்து, வாய் நீர் ஊறல், வாயு, பெருவயிறு முதலியன தீரும்.

## செரியாமை தீர இஞ்சிச் சூரணம்

**சரக்குகள்:**

| | |
|---|---|
| இஞ்சி | — 1.75 கி. (2 சேர்) |
| சாதிக்காய் | — 1.75 கி. (அரைப் பலம்) |
| ஏலம் | — 1.75 கி. (அரைப் பலம்) |
| கொடி வேலி | — 1.75 கி. (அரைப் பலம்) |
| இலவங்கப்பட்டை | — 1.75 கி. (அரைப் பலம்) |
| இலவங்கப்பத்திரி | — 1.75 கி. (அரைப் பலம்) |
| சிறு நாகம் | — 1.75 கி. (அரைப் பலம்) |
| பூ நாகம் | — 1.75 கி. (அரைப் பலம்) |
| கொத்தமல்லி | — 1.75 கி. (அரைப் பலம்) |
| சீரகம் | — 1.75 கி. (அரைப் பலம) |
| திப்பிலி | — 1.75 கி. (அரைப் பலம்) |
| தாளிசபத்திரி | — 1.75 கி. (அரைப் பலம்) |
| நெல்லிப்பருப்பு | — 1 75 கி. (அரைப் பலம்) |
| அதிமதுரம் | — 1.75 கி. (அரைப் பலம்) |
| கற்கண்டு | — 3.5 கி. (பலம்) |

**செய்முறை:**

கடைச்சரக்குகளைப் பொடி செய்து இடித்து, சலித்துக் கொள்ளவும்.

**தீரும்பிணிகள்:**

பசித்தீ உண்டாகும், பைத்தியம், மலக்கட்டு, செரியாமை, பித்தம் என்பன.

## சயம் தீரச் சூரணம்

| | | |
|---|---|---|
| கண்டங்கத்திரி | | |
| ஏலம் | | |
| திப்பிலி | | |
| சீரகம் | | ஒரு வராகன் |
| மிளகு | | |
| வாய் விளங்கம் | | |
| வால் மிளகு | | |
| அதிமதுரம் | | |
| அக்ரககாரம் | | |
| கருஞ்சீரகம் | | |
| முந்திரிப்பழம் | | |
| பேரீச்சம்பழம் | | |
| சர்க்கரை 3 பலம் | | |

**செய்முறை:**

கண்டங் கத்திரியை நெய்யில் இளவறுப்பாக வறுத்துக கொள்ளவும். பின் கடைச்சரக்குகளை இடித்துச் சூரணம் பண்ணவும்

**உண்ணும்முறை:**

1) நெய்

2) ஆடா தொடை வேர் கியாழம்

3) அறுகன் வேர் கியாழம்

4) மிளகு

**குறிப்பு:**

நெய் சர்க்கரையுடன் அப்ரக செந்தூரம் வைத்து உண்ணவும்.

## அயில்பட்டை சூரணம்

| | | | |
|---|---|---|---|
| அயில்பட்டை | — | 3.5 கி. | (1 பலம்) |
| சாரணைவேர் | — | 3.5 கி. | (1 பலம்) |
| மூக்கரட்டை வேர் | — | 3.5 கி. | (1 பலம்) |
| சுக்கு | — | 3.5 கி. | (1 பலம்) |

| | | | |
|---|---|---|---|
| மிளகு | — | 3.5 கி. | (1 பலம்) |
| பூண்டு | — | 3.5 கி. | (1 பலம்) |
| ஓமம் | — | 3.5 கி. | (1 பலம்) |

**செய்முறை:**

இடித்துச் சலித்துப்பொடி செய்து கொள்ளவும்.

**உண்ணும்முறை:**

வெந்நீர்

**தீரும்பிணிகள்:**

வாதகுன்மம், வலிகுன்மம், பித்தகுன்மம், எரி குன்மம் குடல்விப்புருதி தீரும்.

## சம்பாதிச் சூரணம்

| | | | |
|---|---|---|---|
| நாவல்பட்டை | — | 9.25 கி. | (25 பலம்) |
| ஆத்திப்பட்டை | — | 4.20 கி. | (12 பலம்) |
| தென்னம் பாளை | — | 10.5 கி. | (3 பலம்) |
| கருவாழைக்கிழங்கு | — | 3.5 கி. | (1 பலம்) |
| காசுக் கட்டி | — | | (6 பலம்) |
| கொம்பரக்கு | — | 10.5 கி. | (3 பலம்) |
| அபினி | — | 3.5 கி. | (1 பலம்) |

**செய்முறை:**

தனித்தனியாக இடித்து, துணியால் சலித்துக்கொண்டு ஒன்றாகச் சேர்க்கவும்.

**அளவு:**

4 வராகன் பாலில் உண்ணவும். உடலுக்குத் தக்கபடி தேனில் உண்ணவும்.

**தீரும்வியாதிகள்:**

யோனி ரோகம், கர்ப்பம் கலைந்து போவது, வெள்ளை விழுதல், என்புருக்கி, பெரும்பாடு, புழுக்கடி, மூலக்கடுப்பு கிராணி.

**விலக்கு:**

அறிந்து பத்தியம் பண்ணவும்

## சந்தனாதி சூரணம்

**சரக்குகள்:**

| | |
|---|---|
| சந்தனம் | சம அளவு |
| அதிமதுரம் | |
| கோரைக்கிழங்கு | |
| கச்சோலம் | |
| கோட்டம் | |
| செங்கழுநீர்கிழங்கு | |
| முந்திரிகைப்பழம் | |
| பேரீச்சம்பழம் | |
| இலுப்பைப் பூ | |
| வெட்டிவேர் | |
| விலாமிச்சவேர் | |
| நெல்லிப்பருப்பு | |

**செய்முறை:**

இடித்துத் துணியால் சலித்துக் கொள்ளவும். இத்துடன் சரியளவு சர்க்கரை சேர்க்கவும்.

**அளவு:**

கழஞ்சு

**தீரும்பிணிகள்:**

கைகால் எரிவு, கண் எரிவு, சூலை எரிவு, பித்தசூலை, சுழல்பித்தம், பிரமேகம்.

## வெட்டைச் சூரணம்

**சரக்குகள்:**

| | | | |
|---|---|---|---|
| ஏலம் | — | 3.5 கி. | (1 பலம்) |
| சீரகம் | — | 3.5 கி. | (1 பலம்) |
| அதிமதுரம் | — | 3.5 கி. | (1 பலம்) |
| மிளகு | — | 3.5 கி. | (1 பலம்) |
| சர்க்கரை | — | 7.0 கி. | (2 பலம்) |

**செய்முறை:**

கடைச்சரக்குகளை இடித்துக் கொண்டு, துணியால் சலித்துக் கொள்ளவும். பின் சீனிசர்க்கரை இருபங்கு சேர்த்துக் கொள்ளவும்.

**அளவு :**

ஒரு விரல் அளவு

**உண்ணும் முறை:**

பசும்பால், வெள்ளாட்டுப்பால், சுடுநீரில் கொள்ளவும்.

**உணவு :**

வாழைக்காய், அவரைக்காய், 1 மண்டலம் கொள்ளவும்.

## இஞ்சிச் சூரணம்

| | | |
|---|---|---|
| இஞ்சி | — | 35.0கி (10 பலம்) |
| சீரகம் | — | 3.5கி (1 பலம்) |
| தாளிச பத்திரி | | சம அளவு |
| திப்பிலி | | |
| ஏலம் | | |
| கிராம்பு | | |
| கோட்டம் | | |
| வாய்விளங்கம் | | |

**செய்முறை:**

இஞ்சியை மேல் தோலைச் சுரண்டி எடுத்து விட்டு, நறுக்கி, எலுமிச்சம்பழச்சாற்றில் போட்டு 60 நாழிகை ஊற வைத்து, எடுத்துக் கொள்ளவும். சூரியபுடம் வைக்கவும். பின் சீரகம் கூட்டி எலுமிச்சம்பழச்சாற்றில் போட்டு ஒரு நாள் ஊற வைக்கவும். சூரிய புடம் மறுநாள் வைக்கவும். கடைச்சரக்குகளை இளவறுப்பாய் வறுத்து, சூரணம் செய்யவும்.

**அளவு:**

ஓர்விரலளவு.

**தீரும்பிணிகள்:**

வாயு, பித்தம், அரோசகங்கள், சோறு வேண்டாமை, பித்த வெட்டை, பொருமல் விம்மல், சூலை.

## சிவனார்வேம்புச் சூரணம்

வெள்ளைச் சிவனார்வேம்பு சமூலத்தை இடித்துப் பொடி செய்து, கருப்பட்டி கூட்டி 5 நாட்கள் சாப்பிடவும்.

### சூரணம் வேறு

| | | |
|---|---|---|
| சிவனார் வேம்பு சமூலத்தூள் | — | 3.5கி 1 பலம் |
| சீரகத் தூள் | — | 3.5கி 1 பலம் |
| சர்க்கரை | — | 3.5கி 1 பலம் |

கலந்து கொண்டு உண்ணவும்.

**காலஅளவு:**

காலை, மாலை.

**தீரும்பிணிகள்:**

வெள்ளை விழுதல்,

## ரேவல் சின்னி சூரணம்

| | | |
|---|---|---|
| ரேவல் சின்னி | — | 3.5கி 1 பலம் |
| கருஞ் சீரகம் | — | 3.5கி 1 பலம் |
| சீரகம் | — | 3.5கி 1 பலம் |
| கொத்தமல்லி | — | 3.5கி 1 பலம் |
| சிறு நாகப்பூ | — | 3.5கி 1 பலம் |
| ஏலம் | — | 3.5கி 1 பலம் |
| குகை நீர் | — | 3.5கி 1 பலம் |
| பொட்டிலுப்பு | — | 3.5கி 1 பலம் |
| கற்கண்டு | — | 14.0கி 4 பலம் |
| சர்க்கரை | — | 14.0கி 4 பலம் |

**செய்முறை:**

தனித்தனியாக இடித்துக் கொண்டு 7 பங்கு, 5 பங்கு என பிரித்துக்கொள்ளவும்

**உண்ணும்முறை:**

காய்ச்சினபால் கால் படியுடன் குடிக்கவும். பின் தயிர் சோறு உண்ணவும். நீர் பொழியும் வெண்ணெய், நெய்யில் சர்க்கரை கலந்தது போல நீரில் விழும். தொப்புள் (நாபி) குளிர்ந்து இருக்கும்.

**கால அளவு:**

5 நாட்கள், 7 நாட்கள் உண்ணவும்

**விலக்கு:**

மோர்கூடாது தயிர் சோறு உண்ணவும்.

**தீரும்பிணிகள்:**

வெள்ளை, அனைத்துவகை மேகமும் தீரும்.

## வேறு

| | |
|---|---|
| ரேவல் சின்னிப்பட்டை | — 3.5கி (1 பலம்) |
| சீரகம் | — 3.5கி (1 பலம்) |
| பொட்டிலுப்பு | — 3.5கி (1 பலம்) |

**செய்முறை:**

தனித்தனியாக இடித்துக் கலக்கவும். 5 பங்கு செய்து 1 பங்கைக் காலையில் நிசித்தண்ணீருடன் குடிக்கவும் பின் எருமை மோர் வாங்கி இருசாமம் வரை குடிக்கவும். நீர் இறங்கும். பிணிகள் தீரும்.

**உணவு:**

தயிர் சோறு உண்ணவும்.

**அளவு:**

5 நாட்கள்.

**குறிப்பு:** நீச்சுத்தண்ணீர்

## கர்ப்பத்தின்மேல் பசி உண்டாகச் சூரணம் (அக்னி தீபனத்திற்கு)

| | |
|---|---|
| அமுக்ரா வேர் | சம அளவு |
| ஓமம் | |
| திப்பிலி | |
| சிறுமூலம் | |
| சீரகம் | |

**செய்முறை :**

பொடி செய்து கொண்டு உண்ணவும்.

**உண்ணும்முறை:**

தேன், கருப்பட்டி

## இரத்த பித்தம் போகச் சூரணம்

முந்திரிகைப் பழம்
நெற்பொரி
நெய்தல் கிழங்கு
பேரீச்சம்பழம்
நன்னாரி
குசைநீர்
வெட்டிவேர்
நெல்லிமுள்ளி
முத்தக்காசு
சந்தனம்
ஏலம்
தக்கோலம்
சாதிக்காய்
இலவங்கப்பட்டை
இலவங்கப்பத்திரி
நிலப்பனங்கிழங்கு
கோட்டம்
கொத்தமல்லி
கிராம்பு

| | |
|---|---|
| செங்கழுநீர்கிழங்கு | |
| சிறுநாகப்பூ | வகைக்கு |
| விலாமிச்சைவேர் | கால் பலம் |
| அதிமதுரம் | |
| சர்க்கரை | |

**செய்முறை:**

சூரணத்தைச் சம அளவு சர்க்கரை சேர்த்துண்ணவும்.

## தூதுவளைச் சூரணம் சூசிசா வாயுச் சூரணம்

| | | |
|---|---|---|
| சீரகம் | — | 10.5 கி 3 பலம் |
| கோட்டம் | — | 1.75 கி ½ பலம் |
| அதிமதுரம் | — | 1.75 கி ½ பலம் |
| அரத்தை | — | 1.75கி½ பலம் |
| கிராம்பு | — | 0.87 கி ¼ பலம் |
| மயில்துத்தம் | — | 1 வராகன் |
| அக்ரகாரம் | — | 1 வராகன் |
| கோரோசனை | — | 1 வராகன் |
| தூதுவளைவேர் | — | 87.5 கி 2½ பலம் |
| சங்கன்வேர் | — | 87.5 கி 2½ பலம் |
| விலாமிச்சைவேர் | — | 1 வராகன் |

**செய்முறை :**

இவற்றைக் காயப்போட்டு இடித்துத் துணியால் போட்டு சலித்து எடுத்துக் கொள்ளவும்.

**அளவு:**

ஒருவிரலளவு, காலை, மாலை உண்ணவும்.

**தீரும்பிணிகள்:**

சயம், அதிக இருமல், நெஞ்சுவலி திணறடிக்கும் சுவாசம் அதிக பித்தம், கபத்தால் எழுந்த இருமல் இவை தீரும்.

## குன்மம் போகச் சூரணம்

**சரக்குகள்:**

| | | |
|---|---|---|
| கொடிவேலிவேர் | — | 3.5 கி 1 பலம் |
| சிலதைவேர் | — | 3.5 கி 1 பலம் |
| கற்கடக சிங்கி | — | 10.5 கி 3 பலம் |
| திப்பிலி | — | 7.0 கி 2 பலம் |
| ஓமம் | — | 4 பலம் |
| சுக்கு | — | 10.5 கி 3 பலம் |
| பெருங்காயம் | — | 4 வராகன். |

**செய்முறை:**

முதலிரண்டையும் பாலில் சுத்திசெய்து கொள்ளவும். பின் இடித்து சூரணம் செய்ய வேண்டும்.

**அளவு:**

ஒரு விரலளவு.

**உண்ணும்முறை:**

நெய், தேனில் கொள்ள — வாத உடல் உள்ளவர்கள்.

**காலஅளவு:**

20 நாட்கள்.

**தீரும்பிணிகள்:**

வலிகுன்மம், சுத்திகுன்மம், வயிற்று இசிவு

## கிராணி தீரச் சூரணம்

**சரக்குகள் :**

| | | |
|---|---|---|
| ஓமம் | — | 3 வராகன் |
| குப்ராசானி ஓமம் | — | 3 வராகன் |
| சாதிக்காய் | — | 1 எண் |
| கிராம்பு | — | வராகன் |
| ஏலம் | — | வராகன் |

**செய்முறை :**

பொடி செய்து, சலித்து வைத்துக் கொள்ளவும்.

**உண்ணும்முறை :**

எருமைத்தயிர்

**அளவு :**

வராகன் எடை

**காலஅளவு:**

ஐந்து நாட்கள்

## சிறுநீரில் இரத்தமாய் விழுவது தீரச் சூரணம்

**சரக்குகள்:**

| | | |
|---|---|---|
| சீனி சர்க்கரை | — | 15 வராகன் |
| நிலப்பனங்கிழங்கு | — | 15 வராகன் |
| குகைநீர் | — | 15 வராகன் |
| ஏலம் | — | 7 வராகன் |
| சர்க்கரை | — | 4 வராகன் |

**செய்முறை:**

இடித்துச் சலித்துச் சர்க்கரையுடன் கலந்து உண்ணவும்.

**அளவு :**

இரு விரலளவு 20 நாள் உண்ணவும்.

**உண்ணும்முறை :**

இளநீர்

**குறிப்பு :**

குதிரை சிறுநீர்போல் விழுந்தாலும் தீரும். மோர் போல விழ, இலவணத்தையே (உப்பு) தண்ணீரில் இடித்து சூரணம் போட்டு எட்டு நாள் தரவும். சிறுநீர் கடுப்பு எரியாதிருக்கும்.

## கற்பூராதிச் சூரணம்

**சரக்குகள்:**

| | | |
|---|---|---|
| பச்சைக் கற்பூரம் | | |
| பூலாங்கிழங்கு | | |
| ஏலம் | | சமஅளவு |
| சாதிக்காய் | | |
| சாதிப்பத்திரி | | |
| கிராம்பு | — | 1 வராகன் |
| நாகப்பூ | — | 1 வராகன் |
| மிளகு | — | 3 வராகன் |
| திப்பிலி | — | 4 வராகன் |
| சிறுமூலம் | — | 5 வராகன் |
| இந்துப்பு | — | 6 வராகன் |
| சுக்கு | — | 7 வராகன் |

**செய்முறை:**

சூரணம் செய்து கொள்ளவும்.

**உண்ணும் முறை:**

சீனிசர்க்கரையைச் சம அளவு சேர்த்து, தேனில் உண்ணவும்.

**தீரும்பிணிகள்:**

காச சுவாச இரைப்பு, மூல குன்மம், எரிச்சல், வாந்தி, (ஓக்காளம்) நெஞ்சடைப்பு.

## காசம் தீரச் சூரணம்

| | | |
|---|---|---|
| காட்டுச் சீரகம் | — | 10 வராகன் |
| சீரகம் | — | 10 வராகன் |
| கருஞ்சீரகம் | — | 10 வராகன் |
| பெருங்காயம் | — | 10 வராகன் |
| கற்கண்டு | — | 27 வராகன் |
| கொத்தமல்லி | — | 61 வராகன் |
| இலவங்கம் | — | 25 வராகன் |
| சாதிக்காய் | — | 2 வராகன் |

**செய்முறை:**

தனித்தனியாக இடித்து எடைப்படி நிறுத்துக் கலக்கவும்.

**அளவு:**

மூவிரல்

**கால அளவு:**

காலை, மாலை 40 நாட்கள் உண்ணவும்.

**விலக்கு:**

கசப்பு, புளிப்பு, கூடாது.

**குறிப்பு:**

**அனல்காண:**

| | |
|---|---|
| சிற்றாமணக்கு எண்ணெய் | — 1 சேர் |
| பசும்பால் | — 1 சேர் |
| சாதிக்காய் | — 3 எண் |
| சீரகம் | — சாதிக்காய் பொடி எடை |

**செய்முறை:**

சிற்றாமணக்கு எண்ணெயில் பசும்பாலைக் கலந்து கொள்ளவும். சாதிக்காயைப் பொடி செய்து தூவவும். அடுப்பிலேற்றிக் காய்ச்சவும். பின் சாதிக்காய் பொடி அளவுக்குச் சீரகத்தைப் பொடி செய்து எண்ணெயில் போடவும். மெழுகுபதத்தில் பின் 15 ரஸ்தாளி வாழைப் பழத்தைப் போடவும். இறக்கிய பின் சாதிப்பன்னீர்விடவும்.

**தீரும்பிணிகள்:**

வெப்பம் நீங்கும்.

**கால அளவு:**

காலை, மாலை, 40 நாட்கள் ஒரு கரண்டி வீதம் குடிக்கவும்.

## செவ்வட்டை கடி தீரச் சூரணம்

பூண்டு

பனைமுட்டி

செங்கொடி வேலி வேர்

வெள்ளைக் கொடி வேலி வேர்

சமமாய் இடித்து 1 மண்டலம் உட்கொள்ளவும். கசப்பு, புளிப்பான உணவு கூடாது.

# பற்ப, செந்தூர வகுப்பு

## 83. அரிதார பற்பம்*

அரிதாரபற்பம் கொண்டக்கால்
பத்தியமாவது கேள்
நெறிதாகப் புளிப்புத்தான் நிகழும்
பூசணி அப்பச் செந்தூரம்

(வேறு)

**செய்முறை:**

அரிதாரத்தைச் சுத்தி செய்து பூசணிக்காய் குடலில் வேக வைத்தும், சுண்ணாம்பு நீரில் சுத்தி செய்தும் நல்லெண்ணெயில் வேகவைத்தும் எடுத்துக் கொள்ளவும். மூக்கரட்டையைச் சாரணைப்பாலில் அரைத்து அடைபண்ணிச் சட்டியில் வைக்கவும். அடைமேல் அரிதாரத்தை வைத்து, மேல் சட்டி கொண்டு மூடி, சீலை மண் செய்து 3 சாமம் புடமிடவும்.

**அளவு:**

244 மி.கி. (½ பணவெடை)

**உட்கொள்ளும் வழி:**

தேனில்

**தீரும்பிணிகள்:**

முந்திரிச்சாறு — தலைவலி குன்மம்
பூசணிப்பழநீர் — பிரமேகம்

மண்டை தலை, கடிவிடம் பனவெல்லம் 1 பண எடை தர வாதப்பிணிகள்.

---

* பாடல் முழுவதும் இல்லை

வெள்ளரிக்காய்நீர் — நீரடைப்பு

பழச்சாறு — கண்வலி

மலசலக்கட்டு — கோழிமுட்டை ஓடு
எலிப்புழுக்கை கோழிக்காரம்

பொடி செய்து வெள்ளரிக்காய் நீரில் தரவும், கல், மாமிசசதை வளர்ச்சி நீங்கும்

**தாளக (அரிதார) பற்பம்**

புற்றுமண், உப்பை அரைத்துக் குகைபண்ணவும் தாளகம் ஒரு பலம் கொண்டு வந்து சட்டியிலிட்டுச் சீலைமண் செய்து, குகையில் வைத்துப்புடமிட பற்பமாகும். சுண்ணாம்புத் தண்ணீர் இரண்டு சாமம் கொடுக்கவும்.

**வேறு**

தாளகம் — 3.5 கி. (1 பலம்)

அத்திபட்டை சாற்றிலரைத்து வில்லை தட்டிக் காயவைத்துக் கொள்ளவும். புளியம் பட்டைச் சாம்பலை ஒரு சட்டியிலிட்டு அதன் மேல் அத்திப்பட்டை சாறு பிழிந்து, திப்பியை வைத்துத் திப்பியின் மேல் வில்லையை வைக்கவும். பின் மேலே சாம்பலால் மூடி எரிக்க பற்பமாகும்.

**வேறு**

**சரக்குகள்:**

அரிதாரம் — 3.5 கி. (பலம்)

நாயுருவிச்சாறு.

**செய்முறை:**

சட்டியில் நாயுருவிச்சாறு விட்டு அரிதாரத்தைப்போட்டு, கிளிஞ்சலால் மூடவும். சீலை மண் செய்து காட்டு எருவராட்டியில் புடமிடவும். பற்பமாகும்.

## 84. இரச பற்பம்

**சரக்குகள்:**

இரசம் — 35 கி. (பலம்)

வெள்ளைக்கீழா நெல்லி வேர்

சிவப்புக்கீழா நெல்லி வேர்

**செய்முறை:**

இரசத்தைச் சட்டியிலிட்டுக் கீழாநெல்லி வேரைப்போட்டு மேல் மூடி சீலை மண் கொண்டு வாயை அடைக்கவும் அடுப்பிலேற்றி எரித்து எடுக்கப் பற்பமாகும்.

### இரசபற்பம் (வேறு)

இரசம் — 35 கி. (பலம்)

கோவைச்சாறு விட்டரைத்து வழித்துக்கொள்ளவும். ஒரு சட்டியிலிட்டு சீலை மண் செய்து மூடி, காட்டு வராட்டியால் குக்குடபுடமிடவும்.

## 85. எஃகு பற்பம்

இரும்புக் குகையை அச்சிரமாய்த் தட்டிப் புதுச் சட்டியில் வைத்துச் சாறு அமுங்கவிடவும். மேல் சட்டி கொண்டு மூடி சீலை மண் செய்து அடுப்பில் வைத்து உலையில் 4 சாமம் காலாக்கினியாய் எரித்து எடுக்கப் பற்பமாகும்.

## 86. குட்டம் போகப் பற்பம்

தருப்பை புலகத்தின் சாறுதான் கொண்டு
நெருக்கு அக்ரகாரத்துடன்
நிச்சயமாக அதில் கொள்ளே திப்பிலி தேனில் கொள்
நெடுங்கு செங் குட்டத்திற்கு

நிச்சயமாகக் குமரிச் சாறதலே
உடம்பில் கொள் மறம் போல
உரித்து வந்து தானிருந்தால்
வடியும் தேனும் காண மகிழ்ந்து
பொடியில் பற்பம் கொள்ளிடமே.
இல்லாதிமிர வாத மலங்கு கொள்ளிடமே
எல்லாம் சுவாசம் பின்னும் திரிப்பால் பொடியில் கொள்ளே
இரத்த பித்தந்தான் தீர இரும்புரோசப் பொடியில் கொள்ள
தரித்த நீர்க்கோவை வெள்ளாட்டு தங்கும் பாலில்தான் கொள்ள
உரைத்த சூலை கடுப்புக்கு உண்ணும் திப்பிலி தேனுடனே
நிருத்த காய உட்டிணம் போம் நிச்சய பூசணிக்காய் சாறே

## 87. கற்பூரசிலாசத்து பற்பம்

**சரக்குகள்:**

கற்பூர சிலாசத்து — 70 கி. (2 பலம்)
பொரி காரம் — 70 கி. (2 பலம்)

**செய்முறை:**

பழச்சாறு விட்டரைத்து ஆட்டி வில்லை தட்டி, காயப் போட்டு புடமிட்டு எடுக்கப் பற்பமாகும்.

**தீரும்பிணிகள்:**

நீரடைப்பு, பிரமேகம், பெருவயிறு, வெட்டை கல்லடைப்பு, சதையடைப்பு, நீர்க்கடுப்பு நீர்த்திறப்பு மேகம்

**(வேறு)**

கற்பூரசிலாசத்தைக் கட்டியாய் எடுக்கவும். துணிக்குள் வைத்து மேலே துணியால் சுற்றவும். சுண்ணாம்பைக் கனமாய்ப் பூசி காட்டு எருவில் புடமிடவும்.

## 88. கவுரி பாடாண பற்பம்

**சரக்குகள்:**

*கவுரி பாடாணம் — 35 கி. (பலம்)*

**செய்முறை:**

குகையில் வைத்து சிவப்பு நெய்சட்டி இலைச்சாறுவிட்டு சீலைமண் செய்து மூடி காட்டு எருவில் புடமிட பற்பமாகும்.

## 89. காந்த பற்பம்[1] (காரீய பற்பம்)

**சரக்குகள்:**

*காரீயம் — 35. கி (பலம்)*

**செய்முறை:**

காடியில் 6 நாட்கள் ஊறப் போடவும் பின் கோமயத்தில் ஊறப் போடவும். தாய்ப்பாலில் அரைத்து குகையில் வைத்து சீலை மண் செய்து மூடி, கசபுடமிடவும், பற்பமாகும்,

## 90. பவழபற்பம்

*பவழம் — 35 கி. (பலம்)*

எருக்கம் பாலில் 30 மணி நேரம் (60 நாழிகை) ஊற வைக்கவும். ஆவார இலையை அரைத்து வில்லை தட்டவும். பவழத்தை நடுவில் வைத்து, மேலும் கீழும். அடைகளை வைத்து சீலை மண் செய்து மூடவும். காட்டு எரு முட்டையில் புடம் வைக்கப் பற்பமாகும்.

**உண்ணும்முறை :**

தேன், வெண்ணெய்.

**தீரும்பிணிகள் :**

இருமல், வெப்பம், சூடு.

---

1. வங்கபற்பம் தவறாக காந்தபற்பம் என்று கூறப் பட்டுள்ளது.

## 91. படிகாரபற்பம்[1]

படிகாரத்தைக் கொண்டு வந்து பற்பமாக்கவும்.

**உண்ணும்முறை :**

சர்க்கரை, சாராயம், குளிர்நீர்

**அளவு :**

(½ வராகன்) 9.மி.கி.

**கால அளவு :**

15 நாட்கள்

**விலக்கு :**

இறைச்சி, புளி, கைப்பு, உணவுகள் கூடாது.

**தீரும் பிணி :**

மேகம் 20

## 92. பஞ்சலோகபற்பம்

**சரக்குகள் :**

| | | |
|---|---|---|
| இரசம் | — | 35 கி (பலம்) |
| அரைப்பொடி | — | 53 கி (1½பலம்) |
| கந்தகம் | — | 35 கி (பலம்) |
| வெங்காரம் | — | 18 கி (½பலம்) |
| காந்தம் | — | 3¼ (வராகன்) |

**செய்முறை**

கற்றாழைச் சாற்றில் அரைத்து சட்டியிலிட்டு சீலை மண்ணால் மூடி 14 சாமம் தொடர்ந்து எரித்து எடுக்க பற்பமாம்.

**அளவு:**

244 கிராம் (பண்வெடை) காலை, மாலை வெல்லத்தில் உட்கொள்ளவும்.

---

1. பற்பம் செய்முறை கூறப்படவில்லை.

**தீரும்பிணிகள்:**

பாண்டு, காமாலை, பெருவயிறு, விடபாகம்,சத்தி குன்மம், உள்மூலம், மிகுந்த வாயு, திரிச்சவாயு

## 93. வங்க பற்பம்

**சரக்குகள்:**

| | |
|---|---|
| வெள்வங்கம் | — 70 கி (2 பலம்) |
| கரு வங்கம் | — 70 கி (2 பலம்) |

**செய்முறை:**

குண்டு சட்டியிலிட்டு கரண்டியால் துழாவவும். மிளகு போட்டு வறுக்க, பற்பமாகும்.

**உண்ணும்முறை:**

தேன். நெய்.

## 94, நாக பற்பம்

**சரக்குகள்:**

| | |
|---|---|
| நாகம் | — 35 கி. (பலம்) |
| சுக்கு | — 35 கி. (பலம்) |
| திப்பிலி | — 35 கி. (பலம்) |
| மிளகு | — 35 கி. (பலம்) |
| உப்பு | — 35 கி. (பலம்) |
| மஞ்சள் | — 18 கி. (½ பலம்) |

**செய்முறை:**

நாகத்தை இலுப்பை எண்ணெயில் 10 புடம் போடவும். பசு நெய்யில் 11 புடம் போடவும் வெபணம் தட்டி வைத்து காய்ச்சிப் பாலில் விடவும் இப்படி 29 புடம் வைக்கவும். கடை சரக்குகளை இடித்து பொடி செய்து, நாகத்துடன் போட்டு சட்டியிலிட்டு வறுக்கவும். பற்பமாகும்.

**உட்கொள்ளும்முறை:**

பொன்னாவரைப்பட்டை சூரணத்துடன், தேன்.

**அளவு:**

(3 பலம்) 105 மி. கி.

**காலஅளவு:**

மண்டலம் கொள்ள

**தீரும்நோய்:**

அனைத்துவகை மேகங்கள்

## 95. சிருங்கி பற்பம்

**செய்முறை:**

கலைக் கொம்பை நறுக்கிக் கொண்டு சுண்ணாம்பால் கனமாய்ப் பூசவும். சீலைமண் செய்து மூடி, காட்டெருவில் புடமிட பற்பம்.

**உண்ணும்முறை:**

தேன், நெய், வெண்ணெய்

**திரும் பிணிகள்:**

உடல் உறுதியாகும்: வன்மை அறிந்து உண்ணவும்

## 96. செம்பு பற்பம்

**சரக்குகள்:**

| | | |
|---|---|---|
| செம்புத்தகடு | — | 35 கி. (பலம்) |
| கந்தகம் | — | 165 கி (5 வராகன்) |
| இரசம் | — | 70 கி (2 வராகன்) |

**செய்முறை:**

கந்தகத்தை சங்கிலைச்சாறு விட்டரைத்து வெதுப்பவும். கந்தகம் வெண்மையாகும் போது இரசம் விட்டரைக்கவும். செம்புத்தகட்டை அதன் மேல் வைக்கவும். காய்ந்தவுடன் புதுசட்டியில் வைத்து 7 சீலை மண் செய்து கசபுடம் வைக்கவும். பற்பமாகும்.

**அளவு:**

தக்கதுணை மருந்துகளில் 488 மி.கி. (பணவெடை) தரவும்

**தீரும்பிணிகள்:**

அக்னி மந்தம், வாதரோகம் தீரும்

**செய்முறை:**

கறுப்பு காக்கண சமூலத்தைச் சூரணம் செய்யவும். சட்டியில் 3 விரல் கனத்திற்குச் சூரணத்தைப் பரப்பவும். அதன் மீது பழைய செம்புத்துட்டை வைக்கவும். அதன்மேல் தாளகப் பொடியைப் போடவும். தாளகப் பொடி மீது இலுப்பைப் பிண்ணாக்கு, 3 விரல் கனமாய் காக்கணச் சமூலச் சூரணம் போடவும். வேப்பிலையை அரைத்து வில்லை தட்டவும். வில்லையைச் சட்டியின் மேல்மூடி, 3 சீலை மண் செய்து, மூடி, அடுப்பில் வைத்து கமலாக்கினியாய் 3 சாமம் எரித்து எடுத்து ஆறியபின பார்க்க வெண்மையான பற்பமாயிருக்கும்.

**அளவு:**

தக்கபடி 488 மி.கி (டணவெடை) தரவும்

**தீரும்பிணிகள்:**

சர்வரோகம், சர்வசுரங்கள், சர்வ சயங்கள், சர்வ இரணங்கள், அக்னிமந்தம்.

**வேறு**

கருப்புக் கிழங்கு கருணை செடி சமூலத்தைச் சூரணமாக்கவும். சட்டியில் ½ பங்கு பரப்பவும். 10 செப்புத்துட்டை வைத்துப்பரப்பி, அந்தச் சந்திக்குள் இலிங்கத்தூளைப் போடவும். மேலேவேப்பிலைத் தூளைப் போடவும். சட்டியைச் சுற்றி 3 விரல் கனம் உப்பைப் பரப்பவும். கருப்புக் கருணைக் கிழங்குத் தூளைப் போடவும். 3 சீலை மண் செய்து அடுப்பிலேற்றிக் கமலாக்கினியாய் எரிக்கவும். ஆறவிட்டுப் பார்க்க குங்கும நிறமாய் இருக்கும்.

**அளவு:**

தக்கபடி (பணவெடை) 488 மி.கி. ஒருவேளை மட்டும் உட்கொள்ளவும்.

# 97. செந்தூர வகுப்பு
## அரிதாரச் செந்தூரம்

**பாடல்**

அரிதாரந்தான் முக்கழஞ்சு
ஆனகை கொன்றை இலைமேல்
நெறிதாய் எண்ணைதான் தடவி
நேராய் அதன் மேல் பரப்பி
சிறிய சட்டிதனில் வைத்து
சீராய் சீலை மண் செய்து
ஒரு நாழிகை தான் எரித்தால்
உகந்தந்த அமுதமாய் வரும்.
பேர்தான் எடுத்து மகிழ
ஆற்றிப் பொடியாக்கி
தரு மேகங்கள் வேர்ப்பட்டைதானே
பொடியாய் இட்டடக்கி
குருவே சார்வேளை அதன் சோறும்
செரிந்த வெற்றிலைச் சாற்றிலிடே
வெற்றிலை சாரகத்தின் மேலே மருவும்
செந்தூரம் விடைகேள்
ஏத்தி ஈளை இருமல் உடன்
யெலாம் தான் காசமுடன்
உத்த சுவாச காய்ச்சல் வகையும்
உகந்த கோழை விப்புருதியும்
இத்தினி பலவும் தீரும் என்று
இயம்பும் **வியாசர்** மொழியாமே.

**பொருள்:**

ஆனைக்கொன்றை இலைமேல் எண்ணெயைத்தடவி, அரிதாரம் 840 கி (முக்கழஞ்சு) அதன் மேல் வைக்கவும். பின் சட்டியில் வைத்து, சீலை மண்ணால் மூடி (1 நாழிகை) 2 மணி நேரம் எரிக்கச் செந்தூரமாகும்.

**தீரும் பிணிகள்:**

ஈளை, இருமல், சுவாச காசம், கோழை விப்புருதி,

**குறிப்பு:**

வியாசரால் செய்யப்பட்ட மருத்துவ நூலிலிருந்து இப் பாடல் எடுக்கப்பட்டுள்ளது.

**வேறு**

வடக்கு செல்லும் பிராயணவேர்[1]
    வளைத்த அதனை இழைத்தெடுத்து
நடத்தும் நீச்சத்தனிலே அரைத்து
    நலமாய் ஏழு வேளை கொண்டால்
இடிக்கும் மருந்து சூலையமும்
    இதுவே அவிழ்தம் இனிப் பார்
மடக்கும் சூனியம் இதில் போகும்
    மற்ற மருந்தில்லை காண்பீர்

**(வேறு)**

பெருமரத்தைத் துளைத்து அதில் பொன்னரிதாரத்தை வைத்துக் கட்டை போட்டு அடைக்கவும். காட்டு முட்டையை முழ உயரம் அடுக்கி, அதன் மேல் கட்டையைப் போடவும். எரித்து, எடுக்க செந்தூரம்.

**(வேறு)[2]**

**சரக்குகள்:**

அரிதாரம் — 70 கி. (2 பலம்)
காடி —

**செய்முறை:**

காடியில் 1 நாள் ஊறவைத்து, கோமயத்தில் 1 நாள் ஊறவைத்து.

---

1. செந்தூர முறைக்கும் இப்பாடலுக்கும் எவ்விதமான தொடர்பும் இல்லை.

2. முற்றுப் பெறவில்லை

## 98. இரச கற்பூர செந்தூரம் [1]

**சரக்குகள்;**

இரச கற்பூரம் — *165* கி. (*5* வராகன்)
படிகாரம் — *53* கி (*2½* வராகன்)

## 99. இரச செந்தூரம்

**சரக்குகள்:**

| | | |
|---|---|---|
| அரைப்பொடி | — | *3360* கி (*12* கழஞ்சு) |
| கந்தகம் | — | *2160* கி (*7* கழஞ்சு) |
| வெங்காரம் | — | *1220* கி (*4* கழஞ்சு) |

**செய்முறை:**

கற்றாழைச் சாற்றால் 4 சாமம் அரைத்து, தாழைச்சாறு விட்டு தாழைச்சோறு மேலே போட்டு கட்டி மூடவும். சீலை மண் செய்து மூடி, 3 நாட்கள் எரித்து 4-ம் நாள் எடுத்து இறக்கி வைக்கச் செந்தூரம்.

**உண்ணும்முறை:**

தேன், வெள்ளைப்பூண்டு தைலம், வெங்காயம், வெள்ளரிக் காய், தண்ணீர்.

**அளவு:**

*244* மி.கி. (பணவெடை)

**தீரும்பிணிகள்:**

விடபாகம், பைத்தியம், பாண்டு, காமாலை, பெருவயிறு, சுவிசை, அகவை, நீராம்பல் சத்திகுன்மம், வலிகுன்மம், எரி குன்மம் என்பன தைலத்தில் உண்ணத் தீரும் நீரடைப்பு, கல்லடைப்பு வெங்காயம் வெள்ளரிக்காய் தண்ணீரில் தரத் தீரும்

---

1. சரியான முறையில் இல்லை.

## 100. உலோகச் செந்தூரம்

**சரக்குகள்:**

| | | |
|---|---|---|
| உலோக மண்டூரம் | — | 336 கி. (உழக்கு) |
| நாவல் பட்டைச்சாறு | — | 672 லி. (அரை படி) |
| கையான் சாறு | — | 672 லி. (அரை படி) |

**செய்முறை:**

உலோகமண்டூரத்தைச் சாற்றில் ஊற வைத்து பின் காய வைக்கவும். திரிபலைத் தண்ணீர் விட்டரைத்து, வில்லை தட்டி 7 புடமிடவும். செந்தூரம் கிடைக்கும்.

**உண்ணும்முறை:**

திரிபலா பொடி

**அளவு:**

(பணவெடை) 488 மி.கி.

**தீரும்பிணிகள்:**

நீரிழிவு, சூலை, குன்மம், பிரமியம், பாண்டு, ஊது காமாலை என்பன.

## 101. உலோக மண்டூரச் செந்தூரம்

**சரக்குகள்:**

| | | |
|---|---|---|
| உலோக மண்டூரம் | — | 140 கி. (4 பலம்) |
| இலிங்கம் | — | 35 கி. (1 பலம்) |
| இரசம் | — | 35 கி. (1 பலம்) |

**செய்முறை:**

மூன்றையும் கலந்துபுடமிடவும். இரத்த நிறமாய் இருக்கும்.

**உண்ணும்முறை:**

இஞ்சிச்சாறு

**தீரும்பிணிகள்:**

கிராணி, பைத்தியம், காமாலை, சூலை வகைகள், சோகை, மாந்தம், சுவாசகாசம், அக்னிமந்தம், மந்தாக்கினி.

## உலோக மண்டூரம் (வேறு)

நாவற்பட்டைச்சாறு — 336 மி. லி (உழக்கு)
கையான் சாறு — 336 மி. லி. (உழக்கு)

**செய்முறை:**

உலோக மண்டூரப் பொடியைக் கலந்து வேக வைக்க நீறு போலாகும். திரிபலைகியாழத்தில் அரைப்பொடியைக் கலந்து வைத்து அரைத்து காய வைக்கவும். 7 புடம் வைத்து எடுத்துப் பார்க்க இரத்த நிறமாய் இருக்கும்,

**உண்ணும்முறை:**

திரிபலைப்பொடி, கருப்பட்டி

**அளவு:**

488 மி. கிராம் (பண எடை)

**தீரும்பிணிகள்:**

நீரிழிவு, சூலை, குன்மம், பிரமியம், பாண்டு, சூலை குன்மம் காமாலை என்பன.

**வேறு**

பொன்னரிதாரம் — 70 கி. (2 பலம்)

## 102. தாளகச் செந்தூரம்

**சரக்குகள்:**

தாளகம்: — 70 கி. (2 பலம்)
நீர்முள்ளி இலை,
நீர்

**செய்முறை:**

நீர்முள்ளி இலையைத் தாளகத்தின் மேல் நூலால் சுற்றவும் நீர்முள்ளிச் சாறு (4 படி) 5.600லிட்டர் எடுத்துக் கொண்டு தாளகத்தை அதில் போட்டு மூடவும். சீலை மண் செய்து மூடி அடுப்பிலேற்றிக் கொண்டு எரிக்கவும். செந்தூரமாகும்.

**வேறு**

| | | |
|---|---|---|
| தாளகம் | — | 35 கி. (பலம்) |

இதை பொன்னாங்காணி வேரில் கலசம் கட்டிக் காய வைக்கவும். புளி 35 கி., வெடியுப்பு 35 கி., அரைத்துக் கூட்டிப் புடமிடவும்.

## 103. இரச செந்தூரம்

**சரக்குகள்:**

| | | |
|---|---|---|
| இரசம் | — | 35கி. (வராகன்) |
| கந்தகம் | — | 18 கி. (½வராகன்) |

**செய்முறை :**

வெள்ளெருக்கன் பாலால் அரைத்து வில்லை தட்டிக் காய வைக்கவும். 1 வராட்டியில் இலகு புடமிடவும்.

**உண்ணும்முறை :**

பனை வெல்லம்

**தீரும்பிணி :**

மேகம்

## 104. கருவங்க செந்தூரம்

**சரக்குகள் :**

| | | |
|---|---|---|
| காரீயம் | — | 70 கி. (2 பலம்) |

கோமயத்தில் உருக்கி 5 தரம் சாய்க்கவும்.

வெள்ளாட்டுப் பால், கோமயத்தில் போட்டு உருக்கலாம். அமுக்ராவேரை நறுக்கிச் சட்டியிலிடவும். சுத்தி செய்த காரியத்தை 4 நாட்கள் வறுக்கச் செந்தூரமாகும். அமுக்ராக் கொழுந்து போட்டும் வறுத்து வைத்து. செந்தூரத்தில் தரவும்

**தீரும்பிணிகள்:**

மூத்திர அடைப்பு, நீர்க்கடுப்பு, தீரும்.

**உண்ணும்முறை:**

வெண்ணெயில் உண்ண உளமாந்தை, சயம் தீரும்.

**(வேறு)**

காரீயத்தை உப்புச் சட்டியில் கணக்காக வறுக்கவும் சிறுகீரையை நறுக்கிச்சாறு எடுக்கவும். கலந்து பெருக வறுத்தால் செந்தூரம்.

**உண்ணும்முறை:**

பசு நெய்

**அளவு:**

பணஎடை 488 மி.கி.

**கால அளவு:**

மண்டலம்

**தீரும்பிணிகள்:**

சிரங்கு, கடி, குட்டம், படர்தாமரை செவ்வட்டைக்கடி

**(வேறு)**

காரீயம் 70 கி. ஐ உருக்கி மோரில் சாய்த்து எடுக்கவும் பிறகு கோமயத்தில் உருக்கிச் சாய்க்கவும். பின் பட்டை, ஆவாரம் பட்டை 4.4 மி.கி. (குறுணி) அளவு தூள் போட்டு மூன்று முருக்கம் கம்பு கொண்டு வறுக்கவும். முருக்கம் பூ போலச் செந்தூரம் கிடைக்கும். அபின் கூட்டவும்.

(வேறு)

''காரீயம் பின்னுந்தான் கூட்டி
கரைத்தவேரின் பொடிபதக்கு
திரச்சட்டியில் தான் போட்டு
அதிகமாய் முருக்கம் கொண்டு
ஆறத் தேர்ந்தான் வறுக்க
அக்கொம்பு தீ மட்டாகப்
பாற் செந்தூரம் முருக்கம்பூ
பண்ணு நிறமாய் பகர்ந்ததுவே பல
நிறஇழிவுக்குப் பண எடை
செந்தூரம் தேனில் கொள்ளு

**உரை:**

கண வேரின் பொடியை (பதக்கு) ஒரு சட்டியில் இடவும். காரீயத்தைப்போட்டு வறுக்கவும். முருக்கம்பூ நிறமுள்ள செந்தூரம் கிடைக்கும்.

**அளவு:**

488 கி. (பணவெடை) உட்கொள்ளவும்.

**உண்ணும்முறை:**

தேன்.

**தீரும்பிணி**

நீரிழிவு.

## 105. அப்ரகச் செந்தூரம்

**சரக்குகள்:**

வெள்ளை அப்ரகம்

கந்தகம்

**செய்முறை:**

ஒரு ஓட்டில் கந்தகத்தை அடியிலும் நடுவில் அப்ரகத் துண்டையும் மேலே கந்தகத்தையும் வைத்து சீலை மண் செய்து குக்குட புட மிடவும்.

**உண்ணும்முறை:**

ஆவாரைவிதைப்பொடி ஒருபிடி ஆவாரைப்பிசின் 488 கி. (பணவெடை) சேர்த்துத்தேனில் உண்ணவும்.

**தீரும்பிணிகள்:**

மேக வகைகள்

## 106. செம்புச் செந்தூரம்

**செய்முறை:**

பழந்துட்டு ஒன்றை எடுத்து அதன்மேல் முன்னங்கி இலையை அரைத்துக் கவசம் செய்து குகையில் வைத்து சீலை மண் செய்து மூடவும். காற்றில்லாத இடத்தில் புடமிடவும். ஒரு முறை செந்தூரம் ஆகாவிட்டால் மறுபுடம் வைக்கவும்.

## பஞ்சலவணச் செந்தூரம்

| | |
|---|---|
| வெடியுப்பு<br>இந்துப்பு<br>வளையலுப்பு<br>கல்லுப்பு<br>சீனாக்காரம் | 70 கி. (2 பலம்) வகைக்கு |

**செய்முறை:**

உப்புகளைப் பொடி செய்து மண் பானையில் போடவும். குப்பைமேனியிலை, சங்கனிலை, முருங்கை இலையைப் போட்டு சீலைமண் செய்து புடமிடவும். சிவந்த பதம் பார்த்துக் காய்ச்சி விடவும்.

## பாடாணச் செந்தூரம்

**சரக்குகள்:**

பாடாணம் — 35 கி. (பலம்)

துருசு — 35 கி. (பலம்)

**செய்முறை:**

பாடாணத்தை வெள்ளெருக்குப் பாலில் ஊறவைக்கவும். துருசு 5 நாட்கள், ஊறவைக்கவும். பின் துருசை அரைத்துப் பாடாணத்திற்குக் கலசமாகச் செய்து கொள்ளவும். வச நாபி இலையை அமுரியில் 3 நாட்கள் ஊறவைத்துக்கொள்ளவும். கலசத்திலிட்டு சீலைமண் செய்து மூடி காய வைக்கவும், சுண்ணாம்புக் கல்லை மேல், கீழாக மூடிவைத்துப்புடமிடவும். பாடாணம் செந்தூரம் கிடைக்கும்.

## 107. நவநாத செந்தூரம்

**சரக்குகள்:**

சாதிலிங்கம் — கட்டி
வெடியுப்பு — ½ பலம்

**செய்முறை:**

சட்டியில் பாதி வெடியுப்பைக் கொட்டி, நடுவில் இலிங்கத்தை வைத்து மேலே மீதி வெடியுப்பால் மூடவும். 1 சாமம் சூடு செய்யவும் பின் கட்டியை எடுக்க, செந்தூர மாயிருக்கும்.

**அளவு**

488 மி. கி (பணஎடை)

**அனுபானம்:**

பருத்திச்சாறு, தாய்ப்பால்' தேன்.

**தீரும்பிணிகள்:**

சன்னி, தோடம், சுரம்,

**குறிப்பு:**

சன்னிதீர தவசு முருங்கைச் சாற்றில் தரவும்.

# மருந்துப்பிரிவு[1]

## 103. வெள்ளை படுதல் தீர

**சரக்குகள்:**

| | | |
|---|---|---|
| நல்லெண்ணெய் | — | 1020 கி. (¾ படி) |
| எலுமிச்சம்பழச்சாறு | — | 10 |
| வெள்ளைக்கரு | — | 10 |

இவற்றைக் கலந்து கொண்டு 5 வேளை உண்ணவும்.

**உணவு:**

இச்சாபத்தியம்.

**தீரும்பிணிகள்:**

இரத்தசீழ்

**(வேறு)**

| | | |
|---|---|---|
| வெள்ளைக்கருவேல் தழை | — | எலுமிச்சை அளவு |
| இலந்தைத்தழை | — | எலுமிச்சை அளவு |

தண்ணீரில் கலந்து வடிகட்டி 3 வேளை குடிக்கவும்.

**விலக்கு:**

புளி, புகையிலை கூடாது

**(வேறு)**

| | |
|---|---|
| கருத்தகடாவின் கோமயம் | — (கால் படி) 680 மி. லி. |
| நல்லெண்ணெய் | — (அரைக்கால் படி) 340 மி.லி |
| கருப்பட்டி | — 1 பிடி |

---

1. **குறிப்பு:** முதலுதவி போன்று மருத்துவர்கள் இல்லாத இடத்தில் கையாளப்படும், அனுபவ முறைகள் என்றே கொள்ளலாம்.

கருகலந்து கொண்டு 3 வேளை குடிக்கவும்.

## வெள்ளை தீர

சிவனார்வேம்பு சமூலம் இடித்துப்பிட்டு விட்டு கருப்பட்டி கூட்டி 5 நாள் சாப்பிடவும்.

### (வேறு)

*சிவனார்வேம்பு சமூலப் பொடி*
*சீரகம்* — *35 கி. (1 பலம்)*
*சர்க்கரை*

முதலிரண்டையும் இடித்துச் சூரணம் செய்து சர்க்கரை சேர்த்து, காலை, மாலை உண்ணவும். இச்சாபத்தியம்

### (வேறு)

| | | |
|---|---|---|
| சீரகம் | — | 8.75 கி. (கால் பலம்) |
| ஏலம் | — | 8.75 கி. (கால் பலம்) |
| பனங்கற்கண்டு | — | துட்டெடை |
| நல்லெண்ணெய் | — | துட்டெடை |

நல்லெண்ணெயில் குழப்பி, கோழி முட்டைவெண்கருவில் கூட்டிக் குடிக்கவும், 5 நாட்கள் குடிக்கவும் புளி, புகையிலை, உப்பு கூடாது.

### (வேறு)

கிராம்பு சிவ........ மான பச்சரிசி பறித்து வந்து ஒரு எலுமிச்சங்காயளவு அரைத்து பசும்பாலில் கலந்து சீனி போட்டு குடிக்க வெள்ளை தீரும்.

### (வேறு)

தேங்காயை உடைத்து அரிசிபோல் அரிந்து கொள்ளவும் பாசிப்பயிறை உடைத்துக் கொள்ளவும். ...ங்காய் குடலத்து அரைத்து தண்ணீரில் கலந்து வடிகட்டி சீரகம் — ஒரு வராகன் அரைத்து, சீனி சர்க்கரையில் கலந்து மூன்றுநாள் குடிக்கவும். புளி, உப்பு கூடாது. ஆறு நாட்களுக்கு.

## 104. மேக வெட்டை தீர

**சரக்குகள் :**

| | | |
|---|---|---|
| பசுவின் கோமயம் | — | 340 மி. லி. (½ படி) |
| எலுமிச்சைப்பழம் | — | 5 |
| சீரகம் | — | 35 கி. (பலம்) |

**செய்முறை :**

சீரகத்தைப் பொடி செய்து கொள்ளவும். பழத்தைப் பிழிந்து சாறு எடுத்து கலந்து கொள்ளவும்.

**அளவு :**

மூன்று வேளை குடிக்கவும்.

**தீரும்பிணிகள் :**

வெள்ளை, சீழ்மேகம் தீரும்.

**(வேறு)**

கசகசாவை வறுத்துப் பொடி செய்து சர்க்கரையில் கலந்து பசும் பாலில் அருந்தவும்.

**(வேறு)**

### பிரமியத்திற்கு மருந்து[1]

வரகரிசியை 3 பங்காகப் பிரித்து ஒரு பங்கை பொரித்துக் கொண்டு திருக்கையில்[2] வைத்து குழப்பிக் கொள்ளவும் அன்றாடம் செய்து கொள்ளவும்.

**(வேறு)**

| | |
|---|---|
| சீரகம்<br>சர்க்கரை<br>பருத்திவிதைப்பால்<br>சிவனார்வேம்பு | சமஅளவு |
| நல்லெண்ணெய் | — 680 மி.லி. அரை படி |

கடைச்சரக்குகளைப் பொடி செய்து கொண்டு நல்லெண்ணெயுடன் சேர்த்து, அருந்தவும்.

**விலக்கு:**

கசப்பு, புளிப்பு, புகையிலை கூடாது.

---

1. முற்றுப்பெறாமல் உள்ளது.
2. இது மாவரைக்கும் இயந்திரத்தைக் குறிக்கும்.

### வெள்ளைவிழுவதற்கு மருந்து

| | |
|---|---|
| அம்மான் பச்சரிசித்தூள்<br>எள்<br>கருப்பட்டி | சம அளவு |

இடித்து 10 நாள் ஒருவிரலளவு உண்ணவும். இச்சா பத்தியம்

(வேறு)

| | |
|---|---|
| சீரகம்<br>ஏலம்<br>பனங்கற்கண்டு<br>நல்லெண்ணெய் | துட்டெடை |

நல்லெண்ணெயில் குழப்பி முட்டை வெண்கருவில் கூட்டிக் குடிக்கவும்.

**அளவு:**

5 நாட்கள்;

**விலக்கு:**

புளி, உப்பு, புகையிலை கூடாது.

## 105. மேகம் தீர

**சரக்குகள்:**

சீரகம் — 35 கி. (பலம்)
சுண்ணாம்பு —
நா. சர்க்கரை —

**செய்முறை:**

சீரகத்துடன் சுண்ணாம்பைச் சேர்த்து சூரியபுடம் வைக்கவும். பின் சுரண்டி, உமி போகத் தேய்த்துப்புடைத்து எடுக்கவும். தக்கபடி நா. சர்க்கரையைக் கூட்டிக் கொண்டு உண்ணவும்.

**கால அளவு:**

மூன்று வேளை, ஆறு நாட்கள்

**திரும்பிணிகள்:**

நீர்க்கடுப்பு, மேகம்.

## 106. பிரமேகம் தீர

அத்திப்பட்டை புளியங்கொட்டைத்தோல் பாலில் சேர்த் தரைத்துக் குழப்பி உண்ணவும்.

**(வேறு)**

**சரக்குகள்:**

| | | |
|---|---|---|
| முற்றிய தேங்காய் | — | 6 |
| நறுவாழைப்பட்டைச்சாறு | — | 680மி.லி (கால் படி) |

**செய்முறை:**

தேங்காயை உடைத்துத்திருகிப் பால் பிழிந்து வாழைச் சாற்றுடன் கலக்கவும். பின் வங்கபற்பத்துடன் 488 மி. கி. (பணவெடை) சேர்த்து உண்ணவும்.

**காலஅளவு:**

காலை மாலை 3 நாட்கள்

**விலக்கு:**

உப்பு என்பது கூடாது 6 நாட்கள் கடைபிடிக்கவும்.

**(வேறு)**

நத்தைக்கூடு சுட்டதூள் 105 கி (3 வராகன்) எடையை மாம்பட்டைச் சாற்றில் குடிக்கவும்.

## 107. பிரமியம் தீர

**சரக்குகள்:**

| | | |
|---|---|---|
| எலுமிச்சம் பழம் | — | 5 எண் |
| சீரகம் | — | 3.5 கி (வராகன்) |
| பனைவெல்லம் | — | 3.5 கி (வராகன்) |
| மோர் | — | 1.344 லி (படி) |

**செய்முறை:**

பழத்தைப் பிழிந்து சாறு எடுத்துக் கொள்ளவும். சீரகத்தைத் தூள் செய்யவும். மோரில் அனைத்தையும் கலக்கிக் குடிக்கவும்

**(வேறு)**

**சரக்குகள்:**

வெள்ளைக் குங்கிலியம் — (2 பலம்) 70 கி.
பனைவெல்லம் — (5 பலம்) 175 கி.

**செய்முறை:**

இரண்டையும் பொடி செய்து கலந்துண்ணவும்.

**உணவு:**

தயிர் கோழி முட்டை வெள்ளைக் கருவில் கலந்து சோறு உண்ணவும் 3 வேளை

**அளவு:**

கழற்சிக்காய்

**விலக்கு:**

இச்சாபத்தியம்

**பிரமியம் தீர குடிநீர்**

மூங்கில் பட்டை
பனம் பட்டை
வில்வவேர்
சுக்கு
திப்பிலி
கொத்தமல்லி
சீரகம்
— காய்ச்சி அருந்தத் தீரும்

**(வேறு)**

உப்புச் சட்டியில் போட்டுவறுத்துக் கொட்டி, வசம்பு, மிளகு, மோர் விட்டுக் காய்ச்சித்தர பசி உண்டாகும்.

**(வேறு)**

திப்பிலி — 5
தேற்றான்கொட்டை — 3

அரைத்துப் பொடி செய்து கழுநீரில் குடிக்கவும். பத்திய மில்லை. மூன்று நாட்கள் தொடர்ந்து குடிக்கவும்.

(வேறு)

கோழியவரைச்சாறு, சீனி சேர்த்து உண்ணவும்.

(வேறு)

மிளகு ஒரு பிடி எடுத்துக் கொண்டு அதைச் சீலையில் சுற்றித் தீயிலிட்டுச் சாம்பலாக்கவும். சாம்பலை 267 மி.லி (அரைக்கால் படி) நல்லெண்ணெயுடன் நீச்சுத் தண்ணீரில் கலந்து கலக்கிக் குடிக்கவும் மூன்று நாட்கள் தொடர்ந்து குடிக்கவும்.

(வேறு)

வாளம்பிசின்மாங்கொட்டையளவு அரைத்துப் பசும்பாலில் குடிக்கத் தீரும். 10 நாட்கள் தொடர்ந்து குடிக்கவும்.

(வேறு)

கிராம்பு, சிவப்பு அம்பான் பச்சரிசியை அரைத்து எலுமிச்சை அளவு பசும்பாலில் கலந்து சீனி சர்க்கரை போட்டுக் குடிக்கவும்.

(வேறு)

**சரக்குகள்:**

| | |
|---|---|
| தென்னம்பாளைச்சாறு | — 534 மி.லி (½ படி) |
| சீரகம் | — 35 கி. (வராகன்) |
| பனங்கருப்பட்டி | — 18 கி. (½ பலம்) |

**செய்முறை:**

சீரகத்தைப் பொடி செய்து கலக்கவும் பின் உண்ணவும் மூன்று வேளை குடிக்கவும்.

**உணவு:**

வெந்நீர் சோறு

(வேறு)

| | |
|---|---|
| பருத்திக்கொட்டை | — (வீசம்) |
| தென்னம்பாளைச்சாறு | — 534 மி.லி (½ படி) |

| | |
|---|---|
| சீரகம் | — 3.5 கி (வராகன்) |
| சீனி | — 11 கி. (அரைக்கால் பலம்) |

**செய்முறை:**

பருத்திக்கொட்டையை நனைத்து வைக்கவும். தண்ணீர் விட்டுத் துவைத்து (வீசம்) பால் எடுக்கவும். தென்னம் பாளையை இடித்துப் பால் 534 மி.லி. (கால் படி) எடுத்துக் கொண்டு சீரகத்தூளை கலக்கவும். சீனியையும் கலந்து கொள்ளவும். மூன்று வேளை குடிக்கவும்.

**உணவு:**

வெந்நீர் சோறு.

**தீரும்நோய்கள்:**

இரத்தப்பிரமியம், சீழ்பிரமியம்.

**(வேறு)**

வெள்ளைக் குங்கிலியம் 3.5 கி. (வராகன்) பொடி செய்து கொண்டு பசும் பாலில் கலந்து குடிக்கவும்.

**(வேறு)**

ஆவாரை இலைச்சாறு 336 மி.லி. (உழக்கு) நல்லெண்ணெயில் கலந்து குடிக்கவும்.

**(வேறு)**

**பிரமியம் போக**

**சரக்குகள்:**

| | | |
|---|---|---|
| சீரகம் | — | 2 வராகன் |
| கொத்தமல்லி | — | 2 வராகன் |
| சீனி | — | 2 வராகன் |

இளநீரைக் கண் திறந்து மூன்று சரக்குகளையும் போடவும் பனிப்புடம் வைத்து காலையில் உண்ணவும். பின் தண்ணீரில் குளிக்கவும்.

**காலஅளவு:**

மூன்று நாட்கள் செய்யவும்.

**குறிப்பு:**

மஞ்சள்நிறமாய் வர 9 நாட்கள் குடிக்கவும். இரத்தம் கண்டால் 12 நாட்கள் குடிக்கவும்.

**உணவுமுறை:**

புளி, புகையிலை, காய் பண்டம் தள்ளவும் உப்பு. வெள்ளாட்டுக்கறி, பாசிப்பயிறு துவரம் பருப்பு ஆகும்.

## பிரமியம் தீர

நல்லெண்ணைய் அரைக்கால் படி
துளசிச்சாறு ½ படி } கலந்து குடிக்கவும்

**தீரும்பிணிகள்:**

பிரமியம், வெள்ளை ஒழுதல், பாங்கிசம், கல்லடைப்பு பெரும்பாடு

**உணவு:**

உப்பு ஆகும், புளி கூடாது.

**விலக்கு:**

புளி, புகையிலை கூடாது.

**(வேறு)**

தேற்றான் கொட்டை (மேல் தோல் நீக்கியது)
சீரகம்
தண்ணீர் விட்டான் கிழங்கு

அரைத்து சர்க்கரை கலந்து பசு வெண்ணெயில் கலந்து மூன்று நாட்கள் உண்ணவும்.

**(வேறு)**

புளியிலை, ஈரவெங்காயம் துவைத்து ½ படி சாறு எடுத்து கலந்து 3 வேளை குடிக்கவும்.

**(வேறு)**

பிரமி இலை, கோவையிலை அரைத்து முன் சொன்ன சாற்றில் கரைத்து மூன்று வேளை குடிக்கவும்.

**உணவு:**

கசப்பு, புளிப்பு கூடாது.

(வேறு)

பூண்டை சட்டியில் காயவைத்து பசும் பால் ½ படி விட்டுக் காய்ச்சவும் காயும் போது பச்சரிசியைப் போட்டு சோறாக்கி, 3 நாட்கள் உண்ணவும்.

(வேறு)

ஆவாரம் பூவில் உள்ள அரிசியை எடுத்து வெல்லம் சேர்த்து பாலில் குடிக்கத் தீரும்.

இரத்தம் விழுந்தால் இலையை நீரில் அளாவி வெல்லம் சேர்த்துக் குடிக்கவும்.

சீழ் விழுந்தால் சிறுபீளை வேரை வெல்லம் கூட்டிப் பாலில் குடிக்கவும்.

**உணவு:**

கம்பரிசிமாக்கஞ்சி, பச்சரிசித் தெளிவு குடிக்கவும்.

## 108. சிறுநீரில் இரத்தம் விழுதல் தீர

**சரக்குகள்:**

பொன்னாங்கண்ணி வேர் }
பசும்பால் }

அரைத்துக் கலக்கிக் குடிக்கவும்

## 109. உடல் சூடு தீர

திருநீற்றுப்பச்சை பாக்கு, அரிசி 18 கி (அரை பலம்) தண்ணீரில் கலநது கொண்டு பொங்கவும் 8 மணி (4 நாழிகை) நேரம் சென்றபின் உண்ணவும். 4 நாட்கள் தொடர்ந்து உண்ணவும்.

## 110. பெரும்பாடு தீர மருந்து

சட்டிச் சாரணை கிழங்கு
மூக்கரட்டைச் சமூலம்
குறுவை அரிசி

அரிசியுடன் கலந்து களி கிண்டி தின்னத்தீரும்

**(வேறு)**

பருத்தி இலையைப் பிழிந்து சாறும், எலுமிச்சைச் சாறும் சேர்த்துக்குடிக்கத் தீரும்

**(வேறு)**

இலுப்பைப் பட்டைச் சாறு குடிக்கத் தீரும்

**(வேறு)**

புற்றுமேலுள்ள கட்டுக் கொடியை அரைத்துக் கொடுக்கத் தீரும்.

**(வேறு)**

பருத்தி இலை, பிஞ்சு இரண்டையும் நசுக்கிப் பிழிந்து சாறு எடுத்து, எலுமிச்சம் பழச்சாறுடன் கலந்து குடிக்கத் தீரும்.

**(வேறு)**

**பெரும்பாடு போக**

பருத்தியிலை, பிஞ்சு இரண்டையும் நசுக்கித் துவைத்து சாறு பிழிந்து எலுமிச்சைப் பழச் சாற்றுடன் கலந்து குடிக்கவும்.

**(வேறு)**

தேங்காய்ப்பால் — அரைக்கால்படி
நொச்சியிலைச்சாறு — அரைக்கால் படி

இரண்டையும் கலந்து குடிக்கவும்

**(வேறு)**

சங்கம்பழச்சாறு
தேங்காய்ப்பால் } படி

கலந்து குடிக்க இரத்தமாகப் போவது நிற்கும்

(வேறு)

செங்கீரைத்தண்டுசாறு
பச்சரிசிக்கழுநீர் }

சேர்த்துக் கலந்து குடிக்கத்தீரும். அதிசாரம் பெரும்பாடு தீரும்.

(வேறு)

| | | |
|---|---|---|
| திப்பிலி | — | 5 |
| தேத்தாங்கொட்டை | — | 3 |

அரைத்துக் கழுநீரில் குடிக்கவும். 3 நாட்கள் அருந்தவும். பத்தியமில்லை.

(வேறு)

தேற்றான் கொட்டையை அரைத்து இரண்டு வாழைப் பழத்தில் 3 நாட்கள் உண்ணவும்.

(வேறு)

| | | |
|---|---|---|
| தேங்காய்ப்பால் | — | அரைக்கால்படி |
| நொச்சியிலைச்சாறு | — | அரைக்கால் படி |

கலந்து குடிக்கவும்.

(வேறு)

**பெரும்பாடு தீர**

**சரக்குகள்:**

பருத்தி இலை சமூலச்சாறு — ஆழாக்கு
நல்லெண்ணெய் — ஆழாக்கு
சீரகம்
பனைவெல்லம்

கலந்து கொண்டு அரைத்து 3 வேலை உட்கொள்ளவும். புளி, புகையிலை கூடாது.

(வேறு)

நத்தை சூரி விரை
நாயுருவிவேர்
ஆவாரை பிஞ்சு, தோல்

தேங்காய்ப்பாலில் மேற் சொன்ன மூலிகைகளை 4 நாழிகை ஊறவைக்கவும், பின் ஆவாரைப் பிஞ்சு அல்லது தோலையும் ஊற வைத்த மூலிகைகளையும் தேங்காய்ப்பாலில் அரைத்து 3 நாட்கள் உண்ணவும்.

**விலக்கு:**

உப்பு, புளி கூடாது.

(வேறு)

நெருஞ்சி வேர்ப்பொடி — 336 மி.கி. (உழக்கு)
ஊசிக்காந்தம் —

பொடி செய்து கொண்டு இரு நாழி நெய்யில் வேக வைத்துக் கூட்டி உண்ணவும்.

## 111. கெட்ட கண் சதை வளர்ச்சி தீர

(துன்மாங்கிச படலம் பூச்சு)

**செய்முறை:**

சவுக்காரம் — 280 கி. (கழஞ்சு)
அஞ்சுப்பு — 280 கி. (கழஞ்சு)
கோழிக்காரம் — 280 கி. (கழஞ்சு)

**செய்முறை:**

பொடி செய்து பசுநெய் 336 மி.லி (உழக்கு) யில் வேக வைத்து உட்கொள்ளவும்.

**குறிப்பு:**

தேற்றான் வேர், பழைய சோறு கலந்தரைத்து தொப்புள் மேல் பூசி வரவும்.

## 112. வயிற்றுக் கடுப்புத் தீர

முட்டையை இரவு, தண்ணீரில் ஊறப் போட்டு காலையில் இறுத்துக் கொள்ளவும். கோழி முட்டை வெண்கருவை மூன்று வேளை மத்தித்துக் கொடுக்கவும்.

**(வேறு)**

தேங்காய்ப் பால் 336 மி.லி. (உழக்கு) மாம்பட்டைப்பால் 336 மி.லி. (உழக்கு) கலந்து குடிக்கவும்.

**(வேறு)**

நஞ்சு முறித்தான்வேரைக் காயப்போட்டு தூள் செய்து விரலளவு பச்சைத் தண்ணீரில் குடிக்கவும்.

**குறிப்பு:**

வாந்தி. பிராந்தி மிகுதியானால் கோழிக்குஞ்சு மிளகு நீர் பண்ணிக் குடிக்கவும். வாந்தி குணமானவுடன் தூள் சிறிது வறுத்துத்தர கடுப்பு உடன் தீரும்.

**(வேறு)**

மாம்பட்டை 70 கி. (2 பலம்) அத்திப்பட்டை 70 கி (2 பலம்) 1,344 லி (படி) நீரில் கியாழம் செய்யவும். அரைக் கால் பங்காக எரித்துக் குறுக்கவும். மாதுளையை மூன்று சீலை சுற்றி, சாணியால் மூடி எருவால் சுட்டு சாணி கருகின உடன் எடுத்துக் கொள்ளவும். பின் மாதுளையைக் கியாழத்தால் அரைத்து ஐந்து உருண்டையாக்கவும்.

**உட்கொள்ளும் முறை:**

வாழைக்கிழங்கு தண்ணீர்

**(வேறு)**

வேர்ப்பூலா கொழுந்து, சீரகம் இரண்டையும் அரைத்து வெள்ளாட்டுப் பாலில் குடிக்கவும்

(வேறு)

கஞ்சாப்பொடியை மூவிரல் அளவு எடுத்துக் கோழி முட்டையில் பொறித்து மூன்று வேளை உண்ணவும்.

**அளவு:**

தினை

**உணவு:**

வாழைக்காய், துவரம்பருப்பு ஆகும்.

(வேறு)

புளியங் கொட்டைத்தோல் 165 கி. (வராகன்) சுக்கு 165 கி. (வராகன்) பொடி செய்து, தயிரில் கலந்து மூன்று நாட்கள் குடிக்கவும்.

## 113. மூலக்கடுப்பு தீர

மிளகு 35 கி. (1 பலம்)
ஈரவெங்காயம் 35. கி (1 பலம்)
சதகுப்பை 35. கி (1 பலம்)
சீரகம் 35 கி. (1 பலம்)

எலுமிச்சை சாற்றிலரைத்து, வாழைக்கிழங்கு தண்ணீரில் குடிக்கவும்.

## 114. வயிற்றுப் பொருமல் தீர

முற்றின தேங்காய் 3 ஐ உடைத்து பால் எடுக்கவும். பாலின் எடைக்கு எருமைப்பால் கலக்கவும். பின் சுக்கு, மிளகு பூண்டு 8.5 கி (வராகன்). பொடி செய்து கொண்டு போட்டுக் கலக்கிக் காய்ச்சி ½ படி 333 மி.லி. குடிக்கவும்

(வேறு)

கையாந்தகரை பற்பாடகம்
கருதக்காளி நாயுருவி
மெய்யா வாழும் சங்கு சாட்டரணை
வேலிப்பருத்தியிலை நான்கும்

தெய்ய அரி மிளகுடனே அரைத்து
அடை சுட்டு
கையால் வாங்கித் தின்பீரா
காதம் விட்டோடும் இருமல்

2. இந்துப்புச் சீனாக் காரம் விளைந்த
பொட்டிலுப்பு வெங்காரம்
சந்தித்து நாலும் ஒன்றாய்ச்
சிலாசத்து சரியாக்கூட்டி
மத்தித்து மடல் சாறு விட்டு
மதித்தித்து அந்தப்புடமே போட
சந்தித்து தேனில் கொள்ள
செழித்திடும் மேகங்கள், கிரிச்சர
பந்தித்து குன்மம் ஐந்தும்
பறந்திடும் மிகவே கண்டாய்.

## இருமல் தீர அடை

**சரக்குகள்:**

கையான்
பற்பாடகம்
கருதக்காளி
நாயுருவி
சங்கு இலை
சாட்டரணை இலை
வேலிப் பருத்தி இலை
மிளகு

நொறுங்க அரைத்து அடை சுட்டு உண்ணவும் இருமல் தீரும்.

## பஞ்சலவணபற்பம் வயிற்றுப் பொருமல் தீர

1) இந்துப்பு
2) சீனாக்காரம் — சம அளவு
3) பொட்டிலுப்பு
4) வெங்காரம்
5) சிலாசத்து

கற்றாழைச் சாற்றில் அரைத்துச் சூரணத்தின் சரிஎடை குழைத்து. 5 புடமிடவும்.

**உண்ணும்முறை:**

தேன்.

**தீரும்பிணிகள்:**

மேகம், (கிரிச்சரம்) சிறுநீர்த் தடை, குன்மம் 5 என்பன.

**குறிப்பு:**

பற்பங்களைப் பாலிலும், உப்புகளை மோர் அல்லது தண்ணீரில் உண்ணுவது பொதுவான வழக்கம். இங்கு தேனில் உண்ணக் கூறிஉள்ளது. மாறுபட்டு உள்ளது.

**வயிற்றுப் பொருமல் தீர பஞ்சலவண பற்பம்**

1) இந்துப்பு
2) வளையல் உப்பு
3) வெடியுப்பு
4) படிக்காரம்
5) கல்லுப்பு

பொடி செய்து குடுவையில் இடவும் பின் சங்கிலை, குப்பைமேனி இலை, முருங்கை இலை, போட்டு நிரப்பி, சீலை மண் செய்து புடமிடவும். வெந்த பதம் பார்த்து, எடுக்கவும். உருகி இருக்கும். அதை ஒரு ஓட்டிலே காய்ச்சிக் கொள்ளவும்.

## 115. கீழ்மூலம்தீர

அவுரி இலை, கற்றாழைச்சாறு, சீனி கலந்து பாக்களவு மூன்று நாட்கள் உண்ணவும்.

## 116. அந்தர வாயு தீர

கடுக்காய் — 612 கி. (½ படி)

தண்ணீரில் அரைத்து தலை முதல் வீக்கம் உள்ள இடத்தில் பூசி சூரிய ஒளியில் நிற்கவும்.

**(வேறு)**

| | | |
|---|---|---|
| பூண்டு | 140 கி. | (4 பலம்) |
| கல்லுப்பு | 70 கி. | (2 பலம்) |

எலுமிச்சைச்சாறு விட்டரைத்து நல்லெண்ணெய் (¼ படி) கூட்டிக் குழப்பி வெய்யலில் வைத்துத் தினம் புன்னைக் காயளவு உண்ணவும்.

(வேறு)

மாவிலங்கக் கொழுந்து எலுமிச்சைக்கனியளவு அரைத்துப் பசும் பாலில் குடிக்கவும். உணவு பாற்சோறு மட்டும்.

(வேறு)

தைவேளை 1 பிடியில் இலுப்பைப் புண்ணாக்கு பாக்களவில் போட்டரைத்துக் கொள்ளவும். வெங்காயம், பூண்டு சேர்க்கவும். நல்லெண்ணெயில் குழப்பி எலுமிச்சையளவு 3 நாட்கள் காலை, மாலை மூன்று நாட்கள் உண்ணவும்.

## 117. உருத்திர வாயு தீர

சுத்தி செய்த வெங்காரம் — (10 வராகன்) 350 கி. பூவரசன் பட்டையை அரைத்து 3.5 கி. பற்பத்தை கொட்டைப் பாக்களவு கல்கத்தில் வைத்துத் தரவும்.

**உணவு :**

பச்சரிசி, பாசிப் பயிறுடன் பசும்பாலைக் காய்ச்சிக் குடிக்கவும்.

## 118. பக்கச் சூடு தீர

முடக் கொத்தான் இலை, ஈர வெங்காயம் இரண்டையும் அரைத்து விளக்கெண்ணெயில் குழப்பி விழுங்கவும்.

(வேறு)

**பக்கச் சூடு தீர**

கம்பிளியைச் சுட்டுக் கரியாக்கி, வெந்நீரில் குடிக்கத் தரவும்

## 119. அடிவயிற்று இசிவு தீர

வெந்நீரில் பசு வெண்ணெயை எலுமிச்சைக் காயளவு போட்டுத் தரவும்.

## 120. குன்மம் தீர (சக்தி)

| | | |
|---|---|---|
| வெள்ளாட்டு ஈரல் | | |
| (உரித்த)வெங்காயம் | — | 2 பிடி |
| முடக்கொத்தான் | — | 2 பிடி |

இவற்றை ஊறின விளக்கெண்ணையில் போட்டு வறுத்து கருக்காமல் எடுத்துக் கொள்ளவும். நாள்தோறும் எலுமிச்சை அளவுக்கு உண்ணவும்.

**(வேறு)**

குமட்டிக் காயை உலர்த்திப் பொடிசெய்து வெங்காயம், இந்துப்பு சேர்த்து அம்மியிலரைத்துச் சாற்றை வெந்நீரில் குடிக்க மாறும்.

**(வேறு)**

**சரக்குகள்:**

| | | |
|---|---|---|
| நொச்சிவேர் | — | 140 கி. (4 பலம்) |
| கருவேல் | — | 140 கி. (4 பலம்) |
| மிளகரணை | — | 140 கி. (4 பலம்) |
| கஞ்சாக்கோரைச் சாறு | — | 140 கி. (4 பலம்) |
| கஞ்சாக்கோரை வேர் | — | 140 கி. (4 பலம்) |

**செய்முறை:**

இடித்து உலர்த்திப் பொடி செய்து சலித்துக் கொண்டு மூன்று பங்காக்கி ஓமத்தூளுடன் விரலளவு வெந்நீரில் உண்ணவும்.

**கால அளவு:**

40 நாட்கள்

**(வேறு)**

**சரக்குகள்:**

| | | |
|---|---|---|
| மிளகு | — | 140 கி (4 பலம்) |
| கள் காடி | — | 2 மி.லி (4 சேர்) |

பசும்பால் — ½ மி.லி (சேர்)
சீரகம் — 35 கி (1 பலம்)
சுக்கு — 140 கி (4 பலம்)
கல்லுப்பு — 35 கி (1 பலம்)

**செய்முறை:**

அடுப்பிலேற்றிக் கொதிக்க வைத்து ¼ மி.லி (¼ சேர்) ஆக்கவும். சட்டியில் துளை போட்டு அதன் மேல் மணல் போடவும். அதன் கீழ் சரியாக வைத்து வடிகட்டவும். வடிகட்டிய கியாழத்தை எடுத்துக் கொள்ளவும். சுக்கு 140 கி. (4 பலம்) கோமியத்திலிட்டு கல்லுப்பு 35 கி (பலம்) போட்டு ஊறவைக்கவும். பின் கல்லுப்பை எடுத்துக் கழுவிக் காயவைத்து அரைத்துக் கொள்ளவும். சுக்கை இடித்து மாவாக்கிக் (துட்டு) குருவை அரிமா 333 கி. (½ படி) பனை வெல்லம் கூட்டிப் பிசைந்து பிட்டுசுட்டு 3 பங்கு செய்து மேற் சொன்ன கியாழத்தில் வைத்துக் குடிக்கவும்.

## குன்மம், வாந்தி நிற்க

### (வேறு)

மயிலிறகு சுட்டுக் கரி பண்ணிச் சுராபானத்தில் சர்க்கரை, பழச்சாறு என்ற ஏதாவது ஒன்றில் கலந்து தரவும். கசப்பு, புளிப்பு, புகையிலை கூடாது. வயிற்று நோய் தீரும்

### எரிகுன்மம் தீர (வேறு)

கோழிமுட்டை மஞ்சள் கரு நீக்கி, வெள்ளைக் கருவை எடுத்துக் கொண்டு புதுச் சுண்ணாம்பில் மூன்று நாளைக்கு உண்ணவும்.

## 121. இருமல் தீர மருந்து

துளசி —1 பிடி
பசும் பாலிலரைத்து 4, 6 நாட்கள் குடிக்கவும்

---

**குறிப்பு:**

சட்டியின் கீழ் என்பதை சட்டியின் மேல் வைத்து வடி கட்டவும் என்பதே பொருத்தமானதாகும்.

### வேறு

தேற்றான் விரையைத் தேய்த்துத் தூளாக்கிக் கொண்டு எலுமிச்சைப்பழச் சாற்றில் அரைத்த, ஏரகப்பொடி 3.5 கி (வராகன்) சேர்த்து உண்ணவும்.

| | | |
|---|---|---|
| பசுநெய் | — | 1.344 லி (படி) |
| பூசணிக்காய் | — | குடல் |
| மிளகு | — | 17.5 கி ( ½ பலம் ) |
| திப்பிலி | — | 17.5 கி. ( ½ பலம்) |
| தான்றிக்காய் | — | 17.5 வராகன் ( ½ பலம் |
| ஏலம் | — | 17.5 வராகன் (½ பலம்) |

சூரணித்துக் கொண்டு நெய்யில் வறுத்துத் தின்னவும்.

### (வேறு)

| | | |
|---|---|---|
| கடுக்காய் | — | 35 கி. (பலம்) |
| கடுக்காய் பூ | — | 35 கி. (பலம்) |
| சிறுதேக்கு | — | 35 கி. (பலம்) |
| திப்பிலி | — | 35 கி. (பலம்) |
| நெல்லிமுள்ளி | — | 35 கி. (பலம்) |
| சுக்கு | — | 35 கி. (பலம்) |
| கோட்டம் | — | 35 கி. (பலம்) |
| கண்டங்கத்திரி | — | 35 கி (பலம்) |
| முள்ளிவேர் | — | 35 கி. (பலம்) |
| மிளகு | — | 35 கி. (பலம்) |
| இந்துப்பு | — | 35 கி. (பலம்) |

**செய்முறை :**

இவைகளைச் சூரணம் செய்து கொண்டு தேனில் உட்கொள்ளவும்.

### (வேறு)

ஈர வெங்காயத்தில் மிளகு அளவு அபின் வைத்து கதிரில் கோர்த்துச் சுட்டுத் தின்னவும் எட்டு நாளைக்குத் தின்னவும்.

## இருமல் தீர

ஊமத்தைவேரை இடித்து உலர்த்தி இடித்துக் கொண்டு ஒரு பல் வாயில் வைத்துக் கொண்டு சுங்கானில் வைத்துக் குடிக்கத் தீரும்.

(வேறு)

கழுவின கற்றாழைச் சோறு, சிற்றரத்தை, பனங்கற்கண்டு மூன்றும் கூட்டி அரைத்து உண்ணத் தீரும்.

(வேறு)

சர்க்கரை, சீரகம், சுக்கு, 70 கி நெல்லிப்பருப்பு 105 கி கீழாநெல்லி அரைத்துப் பசும்பாலில் குடிக்கத் தீரும். புளி, புகையிலை கூடாது.

(வேறு)

மருக்காரைவேர்ப்பட்டையைப் பாலில் சுத்தி செய்யவும். உலர்த்திச் சிற்றரத்தை சாதிக்காயுடன் சேர்த்திடித்து, துணியால் சலித்து உண்ணவும்.

வேறு

குப்பை மேனியை இடித்துச் சாறு பிழிந்து கல்லுப்புப் போட்டுக் குடிக்கவும்.

வேறு

தேற்றான் விரையைப் பொறித்தும் திப்பிலியை வறுத்தும் பொடியாக்கவும் கற்கண்டு, தேன் கலந்து புது சட்டியில் வைத்துக் கொண்டு காலை, மாலை உண்ணவும்.

## 122. தொண்டைக்கட்டு தீர

| | | |
|---|---|---|
| மிளகு | — | 350 கி. (10 வராகன்) |
| சுக்கு | — | 3.5 கி. (1 வராகன்) |
| வெங்காரம் | — | 3.5. கி. (1 வராகன) |
| திப்பிலி | — | 16.5 கி, (5 வராகன்) |

கூட்டி, அரைத்து உண்ண இருமல் தீரும்.

(வேறு)

| | | |
|---|---|---|
| சீரகம் | — | 70 கி. (2 பலம்) |
| சுக்கு | — | 70 கி. (2 பலம்) |
| நெல்லிப்பருப்பு | — | 105 கி. (3 பலம்) |
| சர்க்கரை | — | 70 கி. (2 பலம்) |
| கீழாநெல்லியிலை | — | |

இவைகளை அரைத்துப் பசும்பாலில் குடிக்கவும்.

## 123. இரத்த வாந்தி தீர மருந்து

### சூரண வகுப்பில் சேர்க்கவும்

| | |
|---|---|
| வெட்டிவேர் | சம எடை |
| விலாமிச்சவேர் | |
| முருங்கைவேர் | |
| பட்டைகோரைக் கிழங்கு | |
| சந்தனம் | |
| கோட்டம் | |
| கோரோசனை | |

சூரணித்துத் தேன் விட்டுத் தாய்ப்பாலில் உண்ணத்தீரும்.

### பற்று (வேறு)

கோழி முட்டை வெண்கருவில் சுண்ணாம்பு கூட்டவும். சீலையில் தடவி இரண்டு நெரி அசலில் போடத் தீரும்.

## 124 மூலம் தீர உருண்டை

நீர்முள்ளி - வேரை ஒரு சிரங்காய் அளவு எடுக்கவும் வறுத்துப் பொடி செய்யவும். சுக்கு 1, மஞ்சள் 3, சிறு கடுக்காய் 2 களிப்பாக்கு 2. அரைத்துப் பொடி செய்து கொண்டு மூன்று உருண்டை செய்யவும்.

**அளவு:**

1 உருண்டை உண்ண — வயிறு கழியும்.

**உண்ணும்முறை:**

கோ மூத்திரத்திலிட்டுக் குடிக்கவும்.

**கால அளவு:**

மூன்று நாட்கள்

**உணவு**

பால்சோறு மட்டும்.

**(வேறு)**

## இரத்தமூலம்தீர கனி

70கி (2 வராகன்) சாதிக்காயைச் சீனா கல்கண்டு சீரகம் வெண்ணெயுடன் சேர்த்துருக்கிக் களியாக்கி உண்ணவும்.

**(வேறு) குடிநீர்**

கஞ்சா கொண்டு வந்து ஒரு பானையில் போட்டு நீர் விடவும்: பனிப்புடம் வைக்கவும். வடி கட்டிக் குடிக்கவும்.

**(வேறு)**

முள்ளங்கிக் கிழங்கை 4 ஆகப் பிளக்கவும். அதில் வெங்காயத்தை மூடிக் கட்டவும். காய்கறிகளை வேக வைக்கும் போது. இதையும் போட்டு வெந்தபின் எடுத்து உண்ணவும்.

## கீழ்மூலம் தீர

சவுரி இலை
கற்றாழைச் சோறு } பாக்களவு
சீனி

3 நாட்கள் கொடுக்கவும்

பச்சையரிசி
பாசிப்பயிறு } சிரங்கையளவு

கருணைக்கிழங்கு முன் சொன்ன அளவுக்கு சமஎடை அரிந்து கொள்ள வேண்டும். புதுச்சட்டியிலிட்டு (சோறாகப்) பொங்கிப் பசுவெண்ணை சர்க்கரை கூட்டி உண்ணவும்.

**(வேறு)**

புல்லறுகுத்துளிரை அரைத்துத் தண்ணீரில் கலந்து உண்ணவும், பத்துநாட்கள் உண்ணவும்.

(வேறு)

நத்தை சூரி இலையை அரைத்துப் பாக்களவு நெய்யில் துவைத்து மூன்று நேரம் மாலை உண்ணவும் கை கண்டது.

## 125. வாந்தி நிற்க (கீரிப்பூச்சியால் ஏற்பட்ட)

களிப்பாக்கு, கடுக்காய் அரைத்துக் கொடுக்கவும். சிறு நுரையப் விழும். கோவையிலை, கீழா நெல்லியிலையை வெள்ளாட்டுப் பாலில் வார்க்கவும்.

(வேறு)

வில்வவேர் நரம்பு, இழையை முடிந்து போட்டுக் காய்ச்சிப் பாலல் குடிக்க வாந்தி நிற்கும்.

(வேறு)

மாதுளம்பழச்சாற்றில் நெற் பொறி, சர்க்கரை கூட்டி உட்கொள்ள வாந்தி நிற்கும்.

(வேறு உருண்டை)

| | | |
|---|---|---|
| இஞ்சி<br>திப்பிலி<br>பச்சைக் கற்பூரம் | } | கழஞ்சு |

கூட்டி கடலை அளவு உருண்டை செய்து பென்று தின்னக், காசம் மாறும்.

(வேறு)

| | | |
|---|---|---|
| இஞ்சி | — | 2 வராகன் |
| சர்க்கரை | — | 2 வராகன் |

அரைத்து 5 பங்கு செய்து 1 பங்கு எடுத்து புழுங்கலரிசி சம எடை கூட்டவும். அரைத்துப் பசும்பாலில் கரைத்துக் குடிக்கவும்.

**தீரும்பிணிகள்:**

வாந்தி, மயக்கம், தலை கிறுகிறுப்பு, பித்தம் 40 வகையும் தீரும்.

## 126. மாந்தம் தீர

**கட்டுமாந்தம்**

வயிறு கட்டிக்கொண்டு கழியும். ஆனான் கொழுந்து, ஓமம் கூட்டி அரைத்து வார்க்கவும்

**(வேறு)**

பாகலிலையை வாட்டிப் பிழிந்து விளக்கெண்ணெயில் கலந்து தரவும்.

**(வேறு)**

வேலிப்பருத்தி இலையை வாட்டிப் பிழிந்து நல்லெண்ணெ. யில் கலந்து தரவும்.

**(வேறு)**

**ஓடுமாந்தம்**

இது மணல்வரட்டினாப் போல இருக்கும். தண்ணீர் ஓடும் பாவட்டங் கொழுந்து, மிளகு, வசம்பு, ஓமம் சேர்த் தரைத்து அல்லிச் சாற்றில் கரைத்துத் தரவும்

## 127. பொடுகு தீர

சுண்டை வேரை அரைத்துத் தலையில் கட்டி ஒரு நாழிகை சென்றபின் குளிக்கவும்

**(வேறு)**

எட்டிப்பழத்தை அரைத்து அப்பி, சீலைகட்டி ஒரு நாழிகை சென்றபின் குளிக்கவும்.

**(வேறு)**

கற்றாழைச் சோற்றை அரைத்துத் தலையில் தடவவும். மூன்று நாட்கள் செய்யவும். பூச்சி பொறிந்து செத்துப் போகும்.

## 128. செவ்வாப்பு தீர

**சரக்குகள்:**

முருங்கைப்பட்டை
ஈரவெங்காயம்
கஞ்சாங் கோரை
சின்னியிலை
நன்னாரி வேர்

**செய்முறை:**

இடித்துச் சாறுபிழிந்து எண்ணெயில் கலந்து குடிக்கவும்.

## 129. வெப்புப்பார்லை தீரச் சாறு

**விவரம்:**

இது ஈரலைப் பற்றி வளர்ந்திருக்கும்.

வெள்ளாட்டு நீரில் இருகடுக்காய்களைக் கரைத்துக் குடிக்க வயிறு கழியும். மோர் சோறுண்ணவும். மறுநாள் கருப்பட்டி முள்ளிக்காயளவு தின்னவும். பின்பு பொடி போட்டு மூன்று நாட்கள் தின்னக் கரையும்.

## 130. கவிசை தீர உருண்டை

நடு வயிற்றில் திரண்டிருக்கும். வயிறு பேதியாகும்.

**சரக்குகள்:**

1) நொச்சியிலை
2) தும்பையிலை
3) துளசியிலை
4) கஞ்சாக்கோரை
5) குப்பைமேனி
6) செருப்படி
7) கையான்

8) பொடுதலை
9) கொழுஞ்சிவேர்
10) சாரணை
11) வசம்பு
12) சுக்கு
13) கடுக்காய்
14) மிளகு
15) பூண்டு
16) திப்பிலி
17) இந்துப்பு
18) பெருங்காயம்
19) வெள்ளருகு

**செய்முறை:**

அரைத்துக் குப்பிக் காய்ச்சி 12 கி (கழஞ்சு) உருண்டை செய்து தினம் 1 உண்ணவும். 1 மண்டலம் உண்ணவும்.

**குறிப்பு:**

18 என்று எண்ணிக்கை கூறப்பட்டது 19 ஆக உள்ளது.

## 131. சிரங்கு தீர எண்ணெய்

**சரக்குகள் :**

பத்தாம்பழச் சோறு
எருக்கன் பால்
குப்பை மேனிச்சாறு
நெல்லிக்காய் கந்தகம்
நல்லெண்ணெய்

**செய்முறை**

கந்தகத்தைப் பொடி செய்து நல்லெண்ணெயுடன் கலந்து சூரிய புடம் வைத்துப் பூசிக் கொள்ளவும். இலுப்பைப் பிண்ணாக்குத் தேய்க்கவும்,

**சிரங்கு தீரப்பூச்சு**

| | | |
|---|---|---|
| சவுட்டுமண் | } | அரைத்துப்பூசவும் |
| சந்தனம் | | |

இலுப்பைப்பிண்ணாக்கு தேய்த்துக் குளிக்கவும்.

## 132. இரத்த பித்தம் தீர

| | | |
|---|---|---|
| ஆடா, சாறு | — | 5376 மி லி (2 படி) |
| பசும்பால் | — | 333 மி.லி (கால் படி) |
| நா. சர்க்கரை | -- | 18 கி (அரை பலம்) |

மூன்றையும் கலந்து கொண்டு 3 வேளை உண்ணவும் தொடர்ந்து 6 நாட்கள் தொடரவும்.

**விலக்கு :**

உப்பு, புளி கலந்த உணவு கூடாது. 7 ம் தலை முழுகத் திரும்.

**(வேறு)**

| | |
|---|---|
| சங்கன்வேர் | சம எடை |
| சிறுகீரைவேர் | |
| ஈரவெங்காயம் | |
| அறுகன்வேர் | |

அரைத்துப் பசு வெண்ணெயில் குழப்பி உண்ணவும்.

**(வேறு)**

பாகல் இலைச்சாறு குடிக்க

**(வேறு)**

| | |
|---|---|
| பொன்னாங்கண்ணிவேர் | கூட்டி உண்ணவும் |
| முசுமுசுக்கை வேர் | |
| சிறுகீரைவேர் | |
| பனைவெல்லம் | |

(வேறு)

நாரத்தன்பிசின், இலந்தைப்பிசின், கொட்டைப்பாக்குடன் அரைத்துப் பசும்பாலில் குடிக்கவும்.

## 133. இரத்த காசம் தீர மருந்து

அத்திப்பழத்தைத் தேன் விட்டு அரைத்துண்ணத் தீரும்.

## 134. வாயு தீர

**செய்முறை:**

தேன், கற்பூரம், வெற்றிலைச்சாறு, இந்துப்பு, வசம்பு, சுக்கு, சீனிச் சர்க்கரை (காசு) கலந்து உதடு, நாக்கில்பூச முக சன்னி வாயு தீரும்

(வேறு)

**சரக்குகள்:**

| | | |
|---|---|---|
| 1 | நல்வேளைவேர் | சம எடை |
| 2 | நாய்வேளைப்பட்டை | |
| 3 | கண்டங்கத்தரிப்பட்டை | |
| 4 | சாரணைவேர் | |
| 5 | மூக்கரட்டைவேர் | |

அரைத்து, எலுமிச்சையளவுக்கு எடுத்துக் கொள்ளவும். பூண்டு, மிளகு, புளி சேர்த்து மிளகு நீர்வைத்துக் கொள்ளவும். 1 கரண்டி விளக்கெண்ணெயில் தாளிசம் பண்ணி உண்ணவும்.

## 135. தொண்டை தூருக்கு மருந்து

கோழிக்காரம் பாக்களவு தேனிலிட்டுக் குழப்பிக் குடிக்கவும்.

## 136. பித்த வெறி தீர மருந்து

காடியில் பூ நாகம் (4 துட்டு) போட்டு 40 நாட்கள் அரைத்து எட்டு நாளைக்கு ஒருமுறை உட்கொள்ளவும். வெந்நீர் வைத்துத் தலைக்குக் குளிக்கவும்.

(வேறு)

கழுதைப் பால் 2 பங்கு இஞ்சிச்சாறு 1 பங்கு சர்க்கரை சேர்த்துக் குடிக்கவும்.

(வேறு)

| | | |
|---|---|---|
| இஞ்சிச்சாறு | — | 4 துட்டு எடை |
| எலுமிச்சம்பழச்சாறு | — | 4 துட்டு எடை |
| தேன் | — | 4 துட்டு எடை |

கலந்து காலையில் குடிக்கவும். நான்கு நாழிகையில் குண மாகும்.

(வேறு)

நிலாவரை வேரை அரைத்து கருப்பட்டியுடன் சேர்த்துப் பசும்பாலில் குடிக்கவும். வயிறு கழியும்.
மாற்று: பாலும் சோறும் உண்ணவும்.

## 137. வாத சூலை தீரப் பற்று

சுக்கு, மிளகு, எருக்குவேர், கள்ளிக் கொழுந்து காய நெல்லி; சுண்ணாம்பு நீற்றிய நீரால் விட்டரைத்துப் பூசவும்.

### கர்ப்ப சூலை தீர (வேறு)

தேங்காயப்பால் பசும்பால் இரண்டையும் கலந்து காய்ச்சிக் குடிக்கவும்.

### (வேறு) அடை

பரங்கிப்பட்டை — 175 கி. (5 பலம்)

(2½ பலம்) 87.5 கி.ஐ பாக்குச் சீவல் போலச் சீவிக்கொள்ளவும்.

4.032 லி 3படி சாராயத்தில் போட்டு உப்புக் கசியாத சட்டியில் வைத்து மூடவும். ஆறு நாட்கள் சென்றபின் எடுத்துப் பயன்படுத்தவும். 1 வேளைக்கு — 336 மி.லி. (உழக்கு) வீதம் குடிக்கவும்.

உணவு

கோழி முட்டை, முருங்கைப் பிஞ்சு சேர்க்கவும். அடை பிரிக்காத கோழிக்குஞ்சு சேர்க்கலாம். 12ம் நாளுக்குப் பிறகு வெள்ளாட்டு இறைச்சி, கோழி உண்ணலாம். 15 நாளைக்குப் பிறது விளக்கெண்ணெய் வார்த்து வெளிச்சம் படாமல் அடுப்பிலேயே வடிகட்டவும். இதற்கு மூன்று நாட்களுக்கு நோன்பிருந்து, 15 நாள் முதல் 19ம் நாள் வரை வெந்நீரில் குடிக்கவும். 35ம் நாள் விளக்கெண்ணெய் தேய்த்துக் குடிக்கவும். சாராயத்திலரைத்து அடை சுட்டு, தேனில் தொட்டுத் தின்னவும் பட்டை எல்லாம் ஊறப்போடவும். 15 நாளைக்குப் பிறகு குருவை புழுங்கலரிசியில் ஊறப்போட்டு அரைத்து அடை சுட்டுத் தேனில் துவைத்துத் தின்னவும். வெள்ளாட்டு உப்புக் கண்டம் சுட்டுத் தின்னவும்.

### யோனி சூலை தீர

திமுட்டி வேரைப்பாலில் போட்டுக் காய்ச்சி தேன் விட்டுக் குடிக்கவும்.

### (வேறு) பற்று

| | | |
|---|---|---|
| இந்துப்பு | — | 17.5 கி (அரை பலம்) |
| நவச்சாரம் | — | 17 5 கி (அரை பலம்) |
| குந்திரிகம் | — | 17.5 கி (அரை பலம்) |
| அரை சுண்ணாம்புக்கல் | — | பாக்களவு |

பெருந்தும்பைச் சாற்றில் உழக்களவு எடுத்துக் கொண்டு சரக்குகளை அரைத்துப் பூசவும்.

## 138. உள் நாக்கு வளர்ச்சி கரைய

நவச்சாரம்
இந்துப்பு
வெங்காரம்
கொடி வேலி வேர்
} தேனிலரைத்து உள் நாக்கில் வைக்கவும்

### (வேறு)

சட்டியைச் சூடுபண்ணி எலுமிச்சைச் சாறு விட்டு, ஈர வெங்காயத்தைக் கயிற்றில் கோர்த்து உள்நாக்கில் காட்டவும்.

(வேறு)

கோழிக்காரத்தைப் பாக்களவு தேனில் கலந்து குழப்பிக் குடிக்கவும்.

(வேறு)

கையான்சாறு }
கற்பூரம் }

அரைத்து கழஞ்சளவு உருண்டைசெய்து புது ஓட்டில் வைத்துப் பனிப்புடம் வைக்கவும். ஒரு உருண்டை உண்ணவும். காலையில் தொண்டைக் கம்மல் தீரும்.

(வேறு)

ஒரு கழஞ்சு தேற்றான் பழந்தோலை வெண்ணெயில் எரித்து உள்ளுக்குத் தரவும்.

(வேறு)

எலுமிச்சம்பழத்தை அறுத்துக் கொள்ளவும். பூவன் பழம் இரண்டு, அக்ரகாரம் ¼ வராகன் இவற்றைச் சாற்றில் ஊற வைக்கவும். ஊறிய பின் உட்கொள்ளவும். தொண்டையில் உள்ளகபம், தொண்டைக்கட்டு, விக்கம் என்பன திரும், கோழையை அறுக்கும்.

## உள்நாக்கு வளர்ச்சியால் ஏற்பட்ட இருமல் தீர

முசுமுசுக்கையைக் கசக்கி இரு காதிலும் பிழியவும்.

## 139. நாவரட்சி தீர

அக்ரகாரத்தை நாவிலடக்கிக் கொள்ள வாயில் நீர் ஊறும்

(வேறு)

அதிமதுரம், அக்ரகாரம் — சம எடை; தேனிலரைத்து மிளகு அளவு மாத்திரை செய்து தாய்ப்பாலில் உட்கொள்ளவும்.

(வேறு)

முன்னைவேர் கொண்டு வந்து பஞ்சு போல் தட்டவும் பழைய அரிசி (படி) 1.344 கி. எடுத்துக் கொள்ளவும் உடைத்து 1.344 லி நீர் வார்த்துப் பாதியாகக் காய்ச்சி முன்னை வேரைப் போட்டு ஆறவைத்து அருந்தவும்.

(வேறு)

கொம்பு பாகல் கொண்டு வந்து நறுக்கி நீரில் வேக வைத்து உண்ணவும். நீரும் குடிக்கவும்.

(வேறு)

வெந்நீரில் தேன் கலந்து கொப்பளிக்கவும்

(வேறு)

அதிமதுரம், கற்பூரம் தாய்ப்பாலில் கலந்து நாக்கில் தடவவும்.

(வேறு)

பழம்புளி (முக்கழஞ்சு) 36 கி. கோரோசனம் 488 மி.கி. கூட்டித்தின்னத் தீரும்.

## 140. மருந்தீடு தீர

எலுமிச்சை 10 கொண்டு வந்து 4 ஆகப் பிளந்து 4 தேற்றான் கொட்டையை இதில் வைக்கவும். 40 நாட்கள் காலையில் சாப்பிடவும்.

## 141. மலட்டுப் பூச்சி தீர

கோழிமுட்டை வெண் கருவை எடுத்துக் கொடிவேலி வேருடன் அரைத்துக் கூட்டி உண்ணவும்.

## 142. தாதுவிருத்திக்கு

| | | |
|---|---|---|
| துத்தியிலை | — | (12 துட்டெடை) |
| மகாப்பூரத்தூள் | — | (12 துட்டெடை) |

சீனி சர்க்கரை — (12 துட்டெடை)
தூள் செய்து மூன்று நாட்கள் உண்ணவும்.

(வேறு)

முருங்கைப்பூவை எலுமிச்சையளவு அரைத்துப் பசும்பால் (½ படி) சர்க்கரை (½ பலம்) சேர்த்து மூன்று நாட்கள் உண்ணவும்.

**விலக்கு:**

புளி, புகையிலை கூடாது.

(வேறு)

கோதுமை ரொட்டியைப் பாதியாக அறுத்துத் தண்ணீர் 4 332 லி (3படி) விட்டு 6.72 மி.லி (½ படி) காய்ச்சி சர்க்கரையில் கலந்துண்ணவும்.

## 143. சூதகவலி தீர

மிளகாய் 5 ஐ அரைத்து நெய்க்குள்
வைத்து விழுங்கவும்.

(வேறு)

பிண்ணாக்கு — 70 கி (2 பலம்)
உப்பு — 35 கி. (பலம்)

இடித்துக் கொண்டு பிட்டவியலாக அவித்துச் சாப்பிடவும்.

**கால அளவு:**

காலை, மாலை, 6 நாட்கள் உண்ணவும்.

## 144. குடல்வாதம் தீர

முடக்கறற்றான் கொழுந்து
நீர்ப்பூலா கொழுந்து
வெங்காரம்

ஆமணக்கெண்ணெயில் பொறித்துத்தின்னவும்.

**உணவு:**

பாற்சோறு.

குறிப்பு:

குடல் முறுக்கி, வயிற்றெறிச்சல் தீரும்.

(வேறு) குடிநீர்

குறிகுணம்:

குடல் முறுக்கி வயிறு இரையும்.

சுக்கு
மிளகு
பூண்டு
கருஞ்சீரகம்
வெந்தயம்
குறிஞ்சி இலை
உப்பு

தண்ணீர்விட்டு, முதலில் குறிஞ்சி இலையை உப்புப் போட்டு அவிக்கவும். பின் தண்ணீரை வடி கட்டவும்ச் கடைச் சரக்குகளை அரைத்துக் கொண்டு கலந்து கொதிக்க விட்டு எடுத்துக் குடிக்கத் தீரும்.

## 145. பீனசம் தீர மருந்து

மிளகு — 17.5 கி. (½ பலம்)

கையான் சாற்றிலரைத்துக் குழப்பித் தேய்த்துக் குளிக்கவும். 4 நாட்களுக்கு ஒரு முறை வீதம் பத்துத் தடவை குளிக்கவும்.

### நீர்ப்பீனசம் தீர நசியம்

தேற்றான் பழம்
கஸ்தூரி மஞ்சள்
திப்பிலி

பொடி செய்து நாசியில் ஊத நீர்ப்பீனசம், சிரசுபாரம் தலைவலி தீரும்.

## 146. தாய்ப்பால் சுரக்க

ஆலம் விதையை எருமைத் தயிரிலரைத்து உட்கொள்ளவும்

## 147. பெருவயிறு. தீர

| | | |
|---|---|---|
| புள்ளிக் கிரைச் சாம்பல் | -- | 4032 கி. (4 படி) |
| வாழைச்சருகுச் சாம்பல் | — | 4032 கி. (4 படி) |
| நாயுருவிச் சாம்பல் | — | 4032 கி. (4 படி) |

**செய்முறை :**

(2 மரக்கால்) தண்ணீர் விட்டுக் கரைத்துக் கொண்டு வடி கட்டவும். நவச்சாரம் 35 கி. (பலம்) கல்லுப்பு 35 கி (பலம்) பொட்டிலுப்பு 35 கி. (பலம்) சேர்க்கவும். காய்ச்சவும். (படி) வற்றிய பிறகு இறக்கிப் பனிப்புடம் வைக்கவும். காலையில் உப்பு எடுக்கவும். உலரவைத்து சரி எடை சர்க்கரை கலக்கவும். அம்மியில் அரைக்கவும்.

**விலக்கு :**

புளி, புகையிலை

**குறிப்பு :**

இம்மருந்து உட்கொள்ளுமுன் பேதிக்குச் சாப்பிடவும். சூடு கொண்டால் பால் சேர்த்துக் கொள்ளவும்.

**அளவு :**

3 விரலளவு 7 நாட்கள் உண்ணவும்.

**(வேறு)**

| | | |
|---|---|---|
| அரைப்பொடி | — | 140 கி. (4 வராகன்) |
| சூதம் | — | 70 கி. (2 வராகன்) |
| காந்தம் | — | 350 கி. (10 வராகன்) |

**செய்முறை :**

கற்றாழைச் சாற்றிலரைத்து சூரியபுடம் வைக்கவும். தக்கபதத்தில் எடுத்து வைக்கவும்.

**அளவு :**

488 மி.கி. (பணவெடை)

## 148. கிராணி தீர

அதிவிடையம், சாதிக்காயை அரைத்துத் தயிரில் குழைத்து உண்ணவும்.

(வேறு)

நிலவேம்பு, சுக்கு இரண்டையுமரைத்துச் சுண்டையளவு தாய்ப்பாலில் தரவும்.

(வேறு)

பிரண்டை நறுக்கின பொடி குறுணி எடுத்துக் கொண்டு வறுக்கவும். பதக்குமோரில் ஊறவைக்கவும். காலையில், இரண்டு மூன்று நாள் குடிக்கவும்.

(வேறு)

நாவல்கொட்டை, மாங்கொட்டை மெழுகுடன் (பிசின்) பற்பாடகம் இவற்றைப் பொடிசெய்து இருகழஞ்சு தேனில் உண்ணவும்.

(வேறு) சூரணம்

| | | |
|---|---|---|
| சீனாகல்கண்டு | — | 70 கி. (2 பலம்) |
| ஓமம் | — | 70 கி. (2 பலம்) |
| அரிசிப்பொரி | — | 70 கி. (2 பலம்) |

முதல் இரண்டையும் வறுத்துப் பொடி செய்து பொரியுடன் அரைத்துக் காலை மாலை உண்ணவும். புளி கூடாது.

(வேறு)

பூண்டு உரித்துப் பாலில் அவித்துப் பிழிந்து, 3 நாட்கள் குடிக்கவும்.

## 149. உப்பு மீறினால்

தயிரை முறித்துத் தரவும்.

(வேறு)

உரலில் பச்சரிசியை ஊறவைத்து (2 நாழிகை) உடைத்து அரிசியைக்களைந்து கொள்ளவும். பின் அரிசி, சீரகம் (படி) நீரில் அரைத்துச் சர்க்கரையைக் கலந்து உட்கொள்ளவும்

## 150. இரச முறிவுக்கு

பசும்பால், பருத்திப் பிஞ்சின் மேல் தோலைச் சேர்த்துச் சீரகம், சாதிக்காயை (வெதுப்பியபின்) அரைத்துக் கொடுக்கவும்.

## 151. பாடாண முறிவுச்கு

வெள்ளாட்டுப்பால், பசும்பால், மிதிபாகல்சாறு 1 344 லி. (படி) உள்ளுக்குத் தரவும். பேதியாகும்.

## 154. செரியாமை தீர

பன்றிக்கறி தின்று செரியாமைக்குக் கழுநீர் உட்கொள்ள, செம்மறியாட்டுக்கறியுண்டு செரியாமைக்குக் கஞ்சி காய்ச்சிக் குடிக்க பால்பழம் தின்று செரியாமைக்கு மூக்குப்பொடி பன்னீர் வெந்நீர் கொள்ளவும்.

வெற்றிலை பாக்கு தின்று செரியாமைக்குச் சர்க்கரை. போடவும். வாழைப்பழத்திற்குக் குறிஞ்சாச்சாறு குடிக்கவும் வெள்ளாட்டுக் கறிக்கு சுண்டை வற்றல் காய்ச்சி மிளகுயாழும் குடிக்கவும். பல்வேறு இறைச்சிக்கு எலுமிச்சைச்சாறு அருந்தவும்

## 153. கல்விழ

சாரணைவேர்ப் சந்தனம் சமஎடை எடுத்து நீர் வார்த்து அரைத்து உண்ணவும்

## 154. சுக்கிலப் பிரமியம் தீர

. சங்கன்வேரைப் பசும் பாலிலரைத்துக் குடிக்கவும்.

## 155. (கர்ப்ப) வாந்தி நிற்க

கொத்தமல்லியைக் கழுநீரில் கலந்தரைத்து சர்க்கரையைச் சேர்த்துக் கழுநீரில் குடிக்கவும்.

(வேறு)

வில்வவேர், விலாமிச்சவேர், நெற்பொறி காய்ச்சிக் குடிக்கவும்.

(வேறு)

அமுக்ராவேர், ஓமம், திப்பிலி, சிறுமூலம், சீரகம் சம எடை கொண்டு பொடித்துக் கருப்பட்டியில் உட்கொள்ளவும்.

## 156. பிள்ளை விரைவில் பிறக்க

பேய்க்சுரப்பன்சாறு, மிளகு, மிளகுநீர் கலந்து உட்கொள்ளவும்.

## 157. காமாலை தீரச் சாறு

பசும்பால் — 333 மி. லி. (½ படி)
சீரகம் —
பனங்கருப்பட்டி —

சீரகத்தைப் பாலில் காய்ச்சியரைத்து எலுமிச்சை அளவு எடுத்துப் பனங்கருப்பட்டியுடன் சேர்க்கவும். உசிலையை இரவு, பழச்சாற்றில் ஊற வைக்கவும். காலையில் உறைந்த அந்த இரசத்தை வடிகட்டி, கல்கத்துடன் கலந்துண்ணவும்.

**உணவு:**

சோறுடன் பசும் பால் விட்டு உண்ணவும்.

**விலக்கு:**

5 நாட்கள் உப்பு, புளி கூடாது.

(வேறு)

கையான்சாறு
(சிறு) படைக் கொழுந்து
பச்சைமஞ்சள்
மிளகு

அரைத்து 1 படி வெள்ளாட்டுக் கோமியத்தில் கலந்து குடிக்க வயிறு கழியும் பின் சோறும், மோரும் 3 நாட்கள் சாப்பிடவும்,

**( வேறு) குடிநீர்**

| | | |
|---|---|---|
| வெள்ளாட்டுக்கோமியம் | — | குருணி |
| சங்கன்வேர்ப்பட்டை | — | 15 பலம் |
| சிவனார் வேம்பு | — | 15 பலம் |
| விரைபோக்கிய கடுக்காய் | — | 15 பலம் |

**செய்முறை:**

இடித்துக் கோமயத்திலிட்டு, பூமிப்புடம் 13 நாட்கள் வைக்கவும். தினம் ஒரு கொட்டாங்குச்சி குடிக்கப் பேதியாகும். 3 நாட்கள் 5. நாட்கள் குடிக்கவும்.

**கலிக்கம்**

சிற்றாமணக்கு விரையைத் தாய்ப்பாலில் அரைத்துக் கண்ணிலிடத்தீரும்.

## 158. செவிடுதீரச் சொட்டு மருந்து

வெங்காயம்
பூண்டு

இவற்றின் சாறுடன் மாட்டு இரத்தம் கலந்து சுடவைத்துக் காதில் விடவும்.

## 159. பிள்ளைப்பிணி தீர

ஆமை... வசம்பு, முட்டை, வெங்காயம் — அரைத்து இளவெந்நீரில் தரவும்.

**(வேறு)**

நாவல் மரப்பூச்சிக் கூட்டில் உள்ள பூச்சி, வசம்பு முட்டை, வெங்காயம் அரைத்துத் தரவும். மலசலம் கட்ட, கற்றாழை மடல் வாங்கி சோறு எடுத்துக் கல்வத்திலரைத்து 1 பனை வெட்டு 1 கரண்டி விளக்கெண்ணையைப் பிழிந்து தரவும்.

## எரிகுன்மம்தீர

வாழைப் பூம் 20, நல்ல வெல்லம் 1 வட்டு, நெய் 1 படி (1. 332 லி.) பிசைந்து புளியில் வைத்துக் காலையில் உண்ணவும்.

## கண்டமாலை தீரப் பூச்சு

சதுரக்கள்ளிக்கரி
ஊமத்தங்கரி
கோவைத்தண்டுகரி
நாயுருவிக்கரி
எருக்கன்கரி

எலுமிச்சம்பழச் சாற்றில் அரைத்துப் பூசத்திரும்.

## (வேறு)

சிறுகீரைத்தண்டை உலர்த்திப் பொடி செய்து புண்மேல் போடத் தீரும்.

## கழல் வாதம் தீர மருந்து

| | | |
|---|---|---|
| கழற்சிப்பருப்பு | — | பாதி |
| திப்பிலி | — | 5 எண் |
| கருப்பட்டி | — | முள்ளிக்காயளவு |
| சுண்ணாம்பு | — | மருந்தளவு |

அரைத்துத்தரவும்.

மேலும் கழற்சியிலை, வசம்பு, பூண்டு நறுக்கி எடுத்து ஒத்திட்டுக் கட்டத் தீரும்.

## தண்டுவாதம் தீர

**நோய் விளக்கம் :**

தண்டு ஊதிக்கொண்டு, பொருமி இருக்கும்.

குப்பைமேனித்தண்டு
கோவைத்தண்டு
வசம்பு
ஒருதலைப் பூண்டு
மிளகு

முதலிரண்டையும் சட்டியில் நறுக்கிப் போடவும். சுட்டுக் கொண்டு சாறு எடுக்கவும். ஏனைய சரக்குகளைச் சாற்றால் அரைத்து வடிகட்டிக் குடிக்கவும். தண்டு வாதம் போகும்

இதற்கு ஒத்தடம் கோவையை வறுத்து வீக்கத்தில் ஒற்றி வைத்துக் கட்டவும்.

## இடுப்பு வலி தீர மருந்து

| | | |
|---|---|---|
| எள்ளுப் பிண்ணாக்கு | — | $\frac{1}{4}$ படி |
| நல்லெண்ணெய் | — | $\frac{1}{4}$ படி |
| கோழிமுட்டை | — | 5 எண் |

**செய்முறை :**

பிண்ணாக்கை இடித்து, எண்ணையுடன் கலக்கவும் பின் சட்டியிலிட்டு, முட்டையை உடைத்து ஊற்றிக் கலந்து 10 நாட்கள் உண்ணவும்.

## கர்ப்பவிருப்புருதி தீர

| | | |
|---|---|---|
| பச்சரிசி மாவு | — | 3 பிடி |
| வெல்லம் | — | 1 பிடி |
| ஆத்திக் கொழுந்து முனை | — | 1 பிடி |

உரலிலிட்டு இடித்துக் கொள்ளவும். இருபங்காக ஆக்கவும் சின்னபிடி 3 — சிறுபிள்ளைகளுக்கும் பெரிய பிடி 3 இறைவனுக்கும் படைத்து உண்ணவும். பச்சரிசி, துவரம் பருப்பு சேர்க்கவும்.

**விலக்கு :**

உப்பு, புளி, கூடாது.

## கழிச்சல் தீர மருந்து

பொடுதலை
சுக்கு
மிளகு
கடுக்காய்
கறிவேப்பிலை
உப்பு

இவற்றைக் கருக வறுத்துப் பொடி செய்து மோரில் அருந்தவும்.

### இருமல் தீர மருந்து

ஆண் பிள்ளை பெற்றவரின் தாய்ப்பாலில் மிளகு ½ பலத்தை அரைத்துத்தரவும்.

### மூலக்கடுப்பு தீர மருந்து

| | | |
|---|---|---|
| மிளகு | — | 1 பலம் |
| வெங்காயம் | — | 1 பலம் |
| சதகுப்பை | — | 1 பலம் |
| சீரகம் | — | 1 பலம் |

எலுமிச்சங்காய் சாறுவிட்டரைத்து, வாழைக்கிழங்கு நீரில் காலை, மாலை, மூன்று நாட்கள் உண்ணவும். எல்லாவகையான அதிசாரங்களும் தீரும்.

### நாவறட்சி தீர மருந்து

வெந்நீரில் தேன்விட்டுக் கலக்கிக் கொப்பளிக்கவும்.

**(வேறு)**

அக்ரகாரத்தை நாவில் அடக்க தண்ணீர் ஊறும் நாவறட்சி நிற்கும், ஏழுவகை தோடத்துக்கும்.

| | |
|---|---|
| அக்ரகாரம் | சம நிறை |
| அதிமதுரம் | |

தேன் வார்த்தரைத்து மிளகளவு மருந்தைத் தேனி, உட்கொள்ளத்தர-தோடம், நாவறட்சிதீரும். தண்ணீர் ஊறும்.

**(வேறு)**

பச்சைக்கற்பூரம்
அதிமதுரம்

தாய்ப்பாலிலரைத்து நாக்கில் தடவநீர் வேட்கை நிற்கும்

### இரத்தக்கழிச்சல் தீர மருந்து

கஞ்சாப்பொடி — 3 விரலளவு

கோழிமுட்டையில் பொரித்து மூன்று வேளை குடிக்கவும். வாழைக்காய் துவரம்பருப்பு ஆகும்.

### (வேறு)

| | | |
|---|---|---|
| மிளகு | — | நிறை |
| கடுகு | — | 3 நிறை |

வெங்காயம் கூடச் சேர்த்து மூன்றையும் வறுக்கவும். வெங்காயத்தைக் கடைந்து ஏனையவற்றுடன் சேர்த்து, கருப்பட்டியுடன் கலந்து வழித்துத்தரவும். சீதம், இரத்தம் மாறும்.

### பொருமல் தீர மருந்து

எலுமிச்சங்காயளவு அரைத்து, மிளகு, வெள்ளை வெங்காயம் புளி கூட்டி மிளகு நீர் பண்ணி, ஒரு கரண்டி விளக்கெண்ணெய் விட்டுத் தாளிதம் பண்ணி உண்ணவும்.

### (வேறு)

| | |
|---|---|
| திரிகடுகு<br>ஓமம்<br>பூண்டு<br>கருஞ்சீரகம் | வகைக்கு 3 வராகன் (பொடித்தது) |

தென்னை வெல்லம் — 3 பலம்
அபின் — 1 வராகன்

| | |
|---|---|
| இரட்டைப்பேய் மிரட்டி இலை<br>கஞ்சா இலை<br>பொடுதலை இலை | எலுமிச்சங் காயளவு கற்கம் |

எருமைப்பால் — 2 படி

முதலில் கற்கத்தைப் பாலில் காய்ச்சிப் பதம் வரும் போது கடைச்சரக்குகளையும், அபினையும் சேர்க்கவும், கொட்டைப் பாக்களவு மதியாற உண்ணத்தீரும்.

### விடம் தீர மருந்து

மஞ்சள்தார் — 1 கொத்து எடுத்துக் கொள்ளவும் இதை மூன்று நாள் கள்ளிப்பாலிலும், எருக்கம் பாலில் மூன்று நாளும், துளசி, வெற்றிலை, கரிசாலை, ஆடுதின்னாப்பாளை கலந்த சாற்றில் மூன்று நாட்களும் ஊறப்போடவும். பின் உரித்து வைத்துக் கொள்ளவும். விடம் தீண்டியதற்கு இளம் வெந்நீரில் அரைத்து உள்ளுக்குத்தரவும். வெந்நீர் இல்லாவிடில் மஞ்சளைப் பொடி பண்ணி, தேனுடன் வாயில் போட்டுக் கொள்ளவும்.

## மந்தார காசம்தீர மருந்து

செம்பருத்திப்பூ, சீரகம் பொடி செய்து, காலை, மாலை 7 நாட்கள் உண்ணவும்.

## மகப்பேறு உள்ள பெண்களுக்கு மலம் சிறு நீர் அடைப்புக்கு மருந்து

| | | |
|---|---|---|
| பழம்புளி | — | எலுமிச்சங்காயளவு |
| வெங்காரம் | — | தேற்றான் கொட்டை அளவு. |

கோழி முட்டை வெண் கருவில் தரவும்.

## பைத்தியம் தீர மருந்து

| | | |
|---|---|---|
| நெல்லிக்காய்ச்சாறு | — | அரை படி |
| வசம்பு சுட்டசாம்பல் | — | 2 வராகன் |
| சீனி | — | 1 பலம் |

கலந்து குடிக்கவும்.

காமாலை, பைத்தியம், வாயு, வயிற்று எரிச்சல், வாந்தி தீரும். மலம் சுத்தியாகும். மூன்றுநாள், ஆறுநாள் பிணி யறிந்து உண்ணவும். புளி, புகை, புலால் கூடாது. மிளகுநீர்ச் சோறு உண்ணவும்.

## பால்கிராணி தீர மருந்து

நிலவேம்பு, சுக்கு சுண்டைக்காயளவு தாய்ப்பாலில் தரவும்.

## சொத்தைப்பல் நீங்க

நீர்முள்ளி இலை, உப்பு சேர்த்துக் கசக்கிக் காதில் பிழிய, சொத்தைப்பல், பூச்சி உதிர்ந்து போகும்.

## வாயுவினால் பொருமல் தீர

நல்வேளைப்பட்டை
நாய்வேளைப்பட்டை
கண்டங்கத்தரிவேர் பட்டை
சாரணைவேர்
முக்கரட்டைவேர்

## அண்ட வாதம் தீர

பூண்டு உரித்துச் சாராயத்தில் வேகவைத்து 3 நேரமும் தரவும். வலி, இசிவும் நிற்கும்.

மொந்தம் பழத்தில் சோமனாதிப் பெருங்காயத்தை வைத்துத் தரவும்.

மூஞ்சூறு சுட்டகறியை மூன்று நாட்கள் உண்ணவும். அந்திர வாயு, ஓரண்டவாதம், அண்டவாதம் தீரும்.

## ஓரண்டவாதம் தீர

குப்பைமேனிச்சாறு }
கசகசா }

கலந்து கொண்டு, கருவாட்டில் போட்டு புரட்டி எடுத்து வற்றல் போட்டு சுட்டுத் தின்னவும். புளி, உப்பு கூடாது.

| | | |
|---|---|---|
| கருங்குறுவை அரிசி | — | 2 படி |
| வெள்ளறுகுப் பொடி | — | விரலளவு (சிட்டிகை) |

அரிசியைப் பொடி செய்யவும். அதில் ஒரு சிரங்கை எடுத்து தக்க வெள்ளாட்டுப் பால்விட்டுச் சோறாக்கவும். பின் எடுத்து வெள்ளாட்டுப் பால்விட்டுப் பிசைந்து,வடிகட்டவும். சாற்றில் வெள்ளறுகுத்தூள் ஒரு விரலளவு எடுத்துப் போட்டுக் குடிக்கவும். மூன்று நேரம், ஆறு நாட்கள் குடிக்கவும். உப்பு, புளி கூடாது.

**உணவு :**

வெள்ளாட்டுப் பால் விட்டு உண்ணவும்.

**(வேறு)**

| | | |
|---|---|---|
| நல்லெண்ணெய் | — | 1 படி |
| அரிசி | — | 1 படி |

அரைத்து எருமை நெய்யில் சுட்டுத் தரவும்.

## தோடம் தீரக்குழம்பு

**சரக்குகள்:**

| | |
|---|---|
| தேற்றான் கொட்டை | வராகன் |
| திப்பிலி | வராகன் |
| பச்சைக்கற்பூரம் | ½ வராகன் |

**செய்முறை:**

கொம்புத்தேனில் மூன்றையும் அரைத்துக் குழம்பாக்கி வழித்து எடுக்கவும்.

**தீரும்பிணி:**

தோடத்துக்கு நாக்கில் தடவவும். எல்லா வகையான தோடமும் தீரும்.

## 160. கறுத்த குழம்பு

| | |
|---|---|
| இரசம் | |
| வசநாபி | |
| நீர்விடம் | |
| அரிதாரம் | |
| மனோசிலை | வகைக்கு 70 கி. (2 வராகன்) |
| பெருங்காயம் | |
| கருஞ்சீரகம் | |
| இந்துப்பு | |
| கந்தகம் | |
| நேர்வாளம் — 8.75 கி. | (.25 வராகன்) |

**செய்முறை:**

சரக்குகளைப் பொடி செய்து வேலிப்பருத்திச் சாற்றில் 2 முறை அரைக்கவும். தேங்காய்ப் பாலில் இருமுறை அரைத்து 4-ஆம் நாள் சிரட்டைக் கரித்தூள் 175 கி. (5 வராகன்) 105 கி. (3 பலம்) கருப்பட்டி கூட்டி அரைத்து எடுத்து வைக்கவும்.

**தீரும்பிணிகள்:**

எல்லாவிதக் கடி விடங்கள், காணாக்கடி, வண்டுகடி.

**கால அளவு:**

மூன்று நாட்கள்

**அளவு:**

தேற்றான்விதை

**உண்ணும்முறை:**

வேலிப்பருத்திச்சாறு.

எருக்கிலைச்சாறு — விரியன் பாம்புக் கடி.

**அளவு:**

புளியங்கொட்டை, மூவேளை

| | |
|---|---|
| வெப்பம் உள்ளவர்கள்<br>மகப்பேறு உள்ளவர்கள் | விளக்கெண்ணெயில் |

உருத்திரவாயு, மயக்கம், மார்புவலி — பூண்டுச்சாறு
கபம் — தேன்

பக்கவாதம், பாரிசவாதம் — முருங்கைப் பட்டைச் சாறு

சுரோணித வாதம் நடுக்கு வாதம் — பூண்டுத் தைலம்

வாதம் 80, சன்னி 13, வலிப்புகள் — வேலிப் பருத்திச்சாறு

**விலக்கு:**

புளி, உப்பு கூடாது. கடுப்புக் காண பச்சரிசி, பச்சைப் பயிறுக்கஞ்சி குடிக்கவும். மாட்டுக்கு[1] அடைப்பன், தெரியன் கொல்லி என்பனவற்றிற்கு வேலிப்பருத்திச் சாற்றில் தரவும், வெந்நீர் காட்டவும்.

## 161. குந்தம் கரையக் குழம்பு

நல்லெண்ணெய் — 336 மி.லி (உழக்கு)

| | |
|---|---|
| இந்துப்பு<br>துத்தம்<br>துருசு | 3.5 (வராகன்) |

பொடி செய்து எண்ணெயில் கலந்து கொள்ளவும். 2 எலுமிச்சை பழத்தை அறுத்துச் சாறு பிழிந்து கலந்து கொண்டு சூரியபுடம் வைக்கவும். தேன் வார்த்து மரக்கலம் கொண்டு அரைத்து வைக்கவும்.

1. மாட்டுக்கான மருத்துவம் கூறியுள்ளது கவனிக்கத் தக்கது.

### மாங்கிடப் படலம் தீரக்குழம்பு (வேறு)

வெல்லம் புளியங்கொட்டையளவு எடுத்து, முள்ளிப் பழச்சாறு, நல்லெண்ணெய் கலந்து குழப்பிக் கண்ணில் விடவும்.

### இழிகண் தீரக் குழம்பு (வேறு)

துத்தம், துருசு சமஅளவில் பொடி செய்து கையான் சாற்றிலரைத்து, பசு வெண்ணெய் சேர்த்துப் பரணியில் வைத்துக் கண்ணிலிடவும்.

## பூரக்குழம்பு

| | | |
|---|---|---|
| பூரம் | — | 3.5 கி. (வராகன்) |
| கந்தகம் | — | 3.5 கி. (வராகன்) |
| இந்துப்பு | — | 3.5 கி. (வராகன்) |
| கொட்டைமுத்து | — | 140 கி. (4 வராகன்) |
| நேர்வாளம் | — | 140 கி. (4 வராகன்) |

அரைத்துக் குழம்பாக்கிச் சிமிழிலடைக்கவும்

## 162. பவழக் குழம்பு

| | | |
|---|---|---|
| சாதிலிங்கம் | — | 9 கி. (¼ பலம்) |
| இந்துப்பு | — | 9 கி. (¼ பலம்) |
| வெங்காரம் | — | 9 கி. (¼ பலம்) |
| பழச்சாறு | — | 9 கி. (¼ பலம்) |
| முத்துக்கொட்டை | — | 9 கி. (¼ பலம்) |
| நேர்வாளம் | — | 35 கி. (1 பலம்) |

அரைத்துக் குழம்பாக்கவும்.

**குறிப்பு:**

பவழக் குழம்பில் பவழம் இல்லாதது வியப்பைத் தருகிறது, பவழ நிறக்குழம்பு என்றாதல் வேண்டும்.

### மேகவெட்டை தீரச்சாறு

சீந்தில் தண்டு }
வெங்காயம் }

வெள்ளாட்டுப்பால் விட்டு துவைத்து இரசம் வாங்கி, சீரகம் 1 பலம், பனைவெல்லம் 1 பலம் அரைத்துக் கரைத்து 3 நாட்கள் குடிக்கவும். ஆறு நாட்கள் உப்பு கூடாது.

### சாறு (வேறு)

அத்திப்பிஞ்சு, அதிமதுரம் பசும்பாலிலிட்டுக் காய்ச்சி தேன் சர்க்கரை கலந்து புதுச் சட்டியிலிட்டுப் பத்து நாட்கள் குடிக்கவும்.

## 163. பூப்படையச் சாறு

நெருஞ்சிவேரைப் பழச்சாற்றிலரைத்து பாலில் கலந்து குடிக்க.

## 164. நீர்க்கட்டு தீர மருந்து

கற்றாழையைக் கிழித்து நடுவில் பச்சைப்பயிற்றை வைத்து 3 நாட்கள் சென்று எடுக்க, முளை கட்டி இருக்கும். இதை, பசும் பாலிலரைத்துச் சர்க்கரை கலந்து தரவும்.

### (வேறு)

வெள்ளரிவிதையை அரைத்துப் பசும்பாலில் குடிக்கவும்.

ஆவாரம் பிஞ்சை எடுத்து இளவெந்நீரில் கொடுக்கவும்.

சுக்கான் கல்லைச் சுட்டு தண்ணீரில் கரைத்துத் தெளிய வைத்து, குடிக்க, இரண்டு காசெடை வெங்காரத்தைப் பொரித்துக் கலந்து கலக்கித் தரவும்.

### நீர்க்கடுப்புத் தீர
### (வேறு)

பசுஞ்சாணியைப் போட்டவுடன் எடுத்துக் கொள்ளவும். சாறு பிழிந்து காய்ச்சிக் குழம்பாகும். தண்ணீர் விட்டான் கிழங்கு 10 பலம் இரு நாழி நீரிலிட்டு உழக்காகக் காய்ச்சி வடித்து உழக்கு பசும்பால் கூட்டிக் காய்ச்சிக் குடிக்கவும், மூன்று தோடத்தால் வந்த நீர்க்கடுப்பு தீரும்.

**நீர்க்கட்டு தீர**

| | | |
|---|---|---|
| பொட்டிலுப்பு | — | 5 பலம் |
| தண்ணீர் | — | 1 படி |

போட்டுக்காய்ச்சி, சிறிது நீர் இருக்கச் செய்து இறுத்து வைக்க உப்பு உண்டாகும். உப்பு ஒரு வராகன் முளைக்கீரைச் சாற்றில் தர, நீர் விடும்.

## 165. கண்ணுக்கு மருந்து

| | |
|---|---|
| கீழாநெல்லி வேர்ப்பட்டை<br>சீரகம்<br>கருவேப்பிலை<br>பச்சை நெல் | 3.5 (வராகன்) |

தாய்ப்பாலில் போட்டு இரவு முழுவதும் ஊறவைக்கவும் காலையிலரைத்துப் பிழிந்து 3 வேளை தரவும்.

## 166. கண்ட மாலை தீர மருந்து

| | | |
|---|---|---|
| தாளகம் | — | 70 கி. (2 வராகன்) |
| கந்தகம் | — | 70 கி. (2 வராகன்) |

தேங்காய்ப்பால், கள்ளிப்பாலில் காய்ச்சி உட்கொள்ளவும்

## 167. வெள்ளெழுத்து தீர பாடல்

"சீர்பட திப்பிலி முக்கழஞ்சு
சேர்ந்த மிளகு ஆறு கழஞ்சு
பேராய் கடுக்காய் பருப்பும்
பெருக ஆறாய்க் கூட்டி
நேராய் நெல்லிக்காய் சாற்றில்
நெகிழ அரைத்து இமையிலிட
தீராதிருந்த வெள்ளெழுத்து
தீவிரைந்து தீர்ந்து போமே"

**உரை:**

| | | | |
|---|---|---|---|
| திப்பிலி | — | 36 கி. | (3 கழஞ்சு) |
| மிளகு | — | 72 கி. | (6 கழஞ்சு) |

கடுக்காய் — 72 கி. (6 கழஞ்சு)

நெல்லிக்காய் சாற்றிலரைத்து இமையில் பூசவும்.

## 168. பேதி தீர

மிளகை, நல்லெண்ணெயில் இளவறுப்பாக வறுத்துத் தீயால் எரித்துச் சாம்பலாக்கவும். எருமுட்டை, பீநாரிசாறு, திரிகடுகு, சீரகம், இலவங்கப் பொடி சோற்றில் வேகவைத்துக் கடைந்து கச்சக் காயளவு நெய், சர்க்கரையுடன் சேர்த்துண்ணவும்.

## வலி குன்மம் தீர

திருக்கைக் கருவாடு அரியவும். பின் துண்டுகளுக்கு நடுவில் 2 வராகன் அபின் வைக்கவும். எருக்க இலை 5 சேர்த்து அதில் கண்டத்தை வைக்கவும். இலையால் மூடவும். காட்டு வராட்டி கொண்டு புடம் போட்டுக் கருகினபின் வேளை ஒன்று தின்ன குணமாகும்.

### (வேறு)

மாவிலங்கக்காய் — 7 பலம்

காட்டுத்திப்பிலி — 7 பலம்

இடித்து, சூரணம் செய்துகொண்டு 1 கடி அளவு உண்ண, வும்.

**உண்ணும்முறை:**

துட்டெடை கோமயம் காலை, மாலை இருவேளை. பத்தியம் இல்லை.

## சூலை தீர உண்டை[1]

சுக்கு — 3.5 கி. (வராகன்)

மிளகு — (எடை)

கந்தகம் — 488 கி. (பண எடை)

---

1. மருந்துகளின் பெயர்கள் சரிவர இல்லை. எனவே செய் முறை பற்றியவைகள் நன்கு அமையவில்லை.

**செய்முறை:**

மூன்று சரக்குகளையும் நன்கரைத்து (பணஎடை) கந்தகம் கூட்டிக் கலந்து 14 உருண்டை செய்யவும்.

**காலஅளவு:**

7 நாட்கள் இருவேளை நாக்கில் படாமல் விழுங்கவும்.

**உணவு:**

வெந்நீர் சோறு மறு பத்தியம் 7நாட்கள். 15ஆம் நாள்கஞ்சி சேர்த்துக் குளித்து ஈரமுடன் பிராந்தி குடிக்கவும். இல்லாவிடில் (½ சேர் )¼ கி. வெள்வெங்காயம் அவித்த தண்ணீர் குடிக்கவும் பத்தியம் முறிக்கவும். உப்பு 1 புளியைச் சேர்க்கலாம்.

## 169. குன்மம் தீர உண்டை

| | | |
|---|---|---|
| பிரண்டை | — | 35.கி. (1 பலம்) |
| சுக்கு | — | 35.கி. (1 பலம்) |
| மிளகு | — | 35 கி (1 பலம்) |
| திப்பிலி | — | 35 கி. (1 பலம்) |
| பூண்டு | — | 35 கி. (1 பலம்) |

சதுரக்கள்ளிச்சோறு — எலுமிச்சையளவு

**செய்முறை:**

காடியிலரைத்துக் கழற்சிக் காயளவு உருண்டை செய்து நிழலில் உலர்த்திக் கொள்ளவும்.

**உண்ணும்முறை:**

காலை, மாலை. பத்தியமில்லை.

**(வேறு)**

### எரிகுன்மம்தீர மருந்து

கந்தகத்தைப் பாலில் சுத்தி செய்து பனைவெல்லத்தில் (2 பணவெடை) உட்கொள்ளவும். எரிகுன்மம் தீரும்.

**விலக்கு:**

உப்பு கூடாது.

**(வேறு) மருந்து**

| | |
|---|---|
| வெங்காயம் | — 105 கி. (3 பலம்) |
| பசும்பால் | — 1.344 லி (படி) |

எரித்து மத்தால் கடைந்து இருவேளை புன்னைக் காயளவு உண்ணவும்.

**குன்மம் தீர மருந்து**

| | |
|---|---|
| உரித்த வெண் வெங்காயம் | — 105 கி. (3 பலம்) |
| பெருங்காயம் | — 70 கி. (2 வராகன்) |

தைவேளையை எலுமிச்சை அளவு அரைத்துக் கொள்ளவும். எல்லாவற்றையும் கலந்து, சூடு படுத்தி எடுத்துக் கொள்ளவும். காலை, மாலை புன்னைக் காயளவு உண்ணவும்.

## 170. உண்ணாக்கு தீர

கையான்சாறு, கல்லுப்பு அரைத்துக் கழற்சிக்காய் அளவு உண்டை பண்ணிப் புது ஓட்டில் வைத்துப் பனிப்புடம் வைக்கவும்.

**கால அளவு:**

காலை ஓர் உருண்டை

## 171. கற்பூர உண்டை

| | |
|---|---|
| கற்பூரம் | — 3.5 கி. (வராகன்) |
| ஏலம் | — 70 கி. (2 வராகன்) |
| சாதிக்காய் | — 140 கி. (4 வராகன்) |
| கிராம்பு | — 2.428 கி. (6 பணவெடை) |
| மிளகு | — 280 கி. (8 வராகன்) |

**செய்முறை:**

பொடி செய்து கொண்டு தேனிலரைத்துக் காயவைத்து உண்டையாக்கவும்,

**தீரும்பிணி:**

சயம்,

## இடுப்பு வாதம் தீர உருண்டை

| | |
|---|---|
| பொடுதலை<br>கருப்பட்டி<br>மிளகு<br>சுக்கு<br>பூண்டு | இடித்து உருண்டை செய்து 3 நாட்கள் உண்ணவும். |

## வாந்தி தீர உருண்டை

| | | |
|---|---|---|
| இஞ்சி | — | (கழஞ்சு) |
| திப்பிலி | — | (கழஞ்சு) |
| பச்சைக் கற்பூரம் | — | 4 கு. (¼ கழஞ்சு) |

தேனிலரைத்துக் கடலை அளவு உருண்டையாக்கவும். மாத்திரை உண்ணவும்.

**தீரும்பிணி:**

காசம்

## 172. சூதக வாயு தீர உருண்டை

1) சுக்கு
2) மிளகு
3) திப்பிலி
4) திப்பிலிமூலம்
5) ஓமம்
6) வசம்பு
7) செல்லியம்
8) சித்திர மூலம்

9) வாய் விளங்கம்
10) வால்மிளகு
11) பூண்டு
12) பெருங்காயம்
13) சிறு நாகப்பூ
14) பெருநாகப்பூ
15) கொத்தமல்லி வகைக்கு 140 கி, (4 பலம்)
16) வாலுளுவை அரிசி
17) சீரகம்
18) கருஞ்சீரகம்
19) இந்துப்பு
20) பொட்டிலுப்பு
21) வளையலுப்பு
22) கல்லுப்பு
23) மண்ணுப்பு
24) நவச்சாரம்
25) எவச்சாரம்
26) மாத்திலாடாச்சாரம்[1]
27) சவுக்காரம்
28) வெங்காரம்
29) முட்காவேளை
30) வெள்ளைச்சாரணைவேர்
31) மருட்கிழங்கு

**செய்முறை:**

தனித்தனியே வறுத்து 30 எலுமிச்சம்பழச் சாற்றில் அரைத்துக் கழற்சிக் காயளவு உருண்டை செய்யவும்.

**காலஅளவு:**

காலை, மாலை உண்ண.

---

1. **குறிப்பு:**

இன்னதென்று விளங்கவில்லை.

**தீரும்பிணிகள்:**

வாதம் 84, பித்தவாயு, பைத்திய வாயு, பைத்தியவிகாரம், குன்மவலி, பலநோவுகள் தீரும்.

**குறிப்பு:**

சூதகவாயு என்று தலைப்பில் குறிப்பிட்டுவிட்டு ஏனைய வாயுக்களைப்பற்றிக் கூறுகின்றார்.

## 173. மேகநாத உருண்டை

| | | |
|---|---|---|
| கடுக்காய் | — | 1 பங்கு |
| சாதிலிங்கம் | — | 2 பங்கு |
| நேர்வாளம் | — | 8 பங்கு |

அரைத்துக் குன்றியளவு ( 4.4 கி) மாத்திரை செய்து தேன், வெல்லம், நெய்யில் உண்ணவும்.

**அளவு:**

1 மாத்திரை, பேதியாகும். அதிகமாகப் பேதியாகத் தண்ணீரும் பேதி நிற்க வெந்நீரும் குடிக்கவும்.

## 174. தம்பன உருண்டை

சாதிக்காயைக் குடைந்து அபினை அதில் வைத்துத் தூளால் மூடவும். எள்ளிலைச்சாறு பிழிந்து துணியை நனைக்கவும். மூன்று சீலை சுற்றி, களிமண் கொண்டு மூடிக் குப்பி புடம் வைத்து எரித்து எடுக்கவும். இவ்வாறு மூன்று முறை செய்யவும். பின் சாதிக்காயைத் தேனில் அரைத்து 4.4. மி.கி. (குன்றியளவு) உருண்டை செய்யவும்.

**அளவு;**

1 மாத்திரை மாலையில் உண்ணவும்

**உணவு:**

சாமம் கழித்து பால்சோறு உண்டு பின் பெண்ணிடம் சேரவும். விந்து வெளியாகாது.

**மாற்று:**

சுக்கு. பழம்புளி, எலுமிச்சம்பழச் சாறிட்டரைத்துக் கொட்டைப்பாக்களவு விழுங்கவும். விந்து வெளியாகும்.

## 175. காமாலை தீர

| | |
|---|---|
| சுக்கு<br>மிளகு<br>பூண்டு<br>ஓமம்<br>இரும்புச்சிட்டம் | சம எடை |

கையான் சாறு விட்டரைத்துச் சுண்டைக்காயளவு உண்டை பண்ணவும் மாலையில் உண்ணவும்.

**காலஅளவு:**

40 நாட்கள்

**உணவு:**

கைப்பு, புளிப்பு கூடாது, உப்பு ½ பங்காகக் கூட்டவும்

## 176. அண்டவாதம் தீர

இலுப்பைப் பிண்ணாக்கை நன்றாக அரைத்து 1 பாக்களவு, உருண்டை பண்ணவும், வாழைப்பழத்தின் நடுவில் கட்டமாய்க் குழித்துப் பொதித்து விழுங்கவும்.

**காலஅளவு:**

காலை, மாலை 3 நாட்கள்

**உணவு:**

உப்பு கூடாது. வெந்நீர் சோறு

**(வேறு)**

| | | |
|---|---|---|
| மாவிலங்கன் இலை கற்கம் | — | விளாங்காயளவு |
| மிளகு | — | 35. கி. 1 பலம் |
| பூண்டு | — | 35. கி. 1 பலம் |

அக்னியம் பண்ணி பிறகு மூன்றையும் ஒன்றாக அரைத்துப் பாக்களவு உருண்டை பண்ணவும். ஒருவேளைக்கு மூன்று உருண்டை வீதம் இருவேளை உண்ணவும். இருநேரமும் வெந்நீரில் உட்கொள்ளவும். உப்பு, புளி கூடாது. துவரைப்பருப்பு, மிளகுநீர், பசும்பால், பசுநெய் உண்ணலாம்.

## 177. இரத்தக் கழிச்சல் (சீதக்கழிச்சல் தீர)

**சரக்குகள்:**

| | | |
|---|---|---|
| சாதிக்காய் | — | 4 எண் |
| அபின் | — | 9. கி. ¼ வராகன் |

**செய்முறை:**

சாதிக்காயைத்தூள் செய்து அபினை அதில் அடைக்கவும். பச்சரிசிமாவை நெய்யில் பிசைந்து மூடவும். கரண்டியில் நெய் விட்டு வதக்கிப் பொடி செய்து உருண்டை பண்ணவும். தினை மாவில் வைக்கவும்.

## 178. மேகம் தீர உருண்டை

பசுந்தயிரை வடிகட்டவும். வெண்ணெய், திப்பிலி இஞ்சிக் கிழங்கு, கோட்டம், மிளகு, இந்துப்பு சமஎடை எடுத்துப் பொடி செய்து சூரணமாக்கி கலந்து மிளகளவு உருண்டை செய்து உட்கொள்ளவும்

**தீரும்பிணிகள்:**

காது நோவு, மேகம், மேகச் சூடு, மேகசுரம், மேகம் விடுதல் என்பன

**(வேறு)**

சீர் கொண்ட துத்தம் வெங்காரம்[1]
    கோரோசனை திகழ் வகைக்குள்
கழஞ்சு கவிமல விடுக்குரோகனி
    முக்கழஞ்சி சேர விட்டுவே

---

பாடல் தெளிவாகவும், சரியானதாகவும் இல்லை.

வேர் கொண்ட துத்தியிலை
நீர் விட்டரைத்து மேள அரைத்து
மெள்ள ஒரு சாமம்நன்றாய் பிசைகொண்ட மாறிகை
சேரு பயிறுபோல வெண்மை உருண்டை செய்து
கார் கொண்ட குழல் எண்ணமிது
காந்த நீர் அனுபானத்திலும்

## 179. விரணம் தீர உருண்டை (புகை போட)

| | |
|---|---|
| இரசம் | — 17½ கி. (½பலம்) |
| அரிதாரம் | — 105 கி. (3 வராகன்) |
| கறுப்புக் குங்கிலியம் | — 105 கி. (3 வராகன்) |
| மிளகு | — 140 கி. (4 வராகன்) |
| கடுகு | — 17.5 கி. (½ பலம்) |

**செய்முறை:**

செம்பருத்திச் சாற்றில் அரைத்து உருண்டை செய்து வைக்கவும்.

**குறிப்பு:**

புகைபோடப் பயன்படுத்தவும். 7 நாட்கள் புகைபோடவும் புகை போட்டவுடன் குளிக்கவும்.

## 180. மேகக் குலாந்தக மாத்திரை

**சரக்குகள்:**

| | |
|---|---|
| காரீயம் | — 700 கி (20 வராகன்) |
| இரசம் | — 350 கி (10 வராகன்) |
| காந்தம் | — 350 கி (10 வராகன்) |
| கந்தகம் | — 350 கி (10 வராகன்) |

**செய்முறை:**

ஈயத்தைத்தட்டி மெல்லிய தூளாக்கவும். பின் இரசம் விட்டரைக்கவும். பின்லர் இரு சரக்குகளையும் எருமை மோர் விட்டு அரைத்துக் கடலை அளவு உருட்டிக் கொள்ளவும்.

**உண்ணும் முறை:**

எருமை மோரில் உரைத்துக் குடிக்கவும்.

**அளவு:**

காலை மாலை ஓர் உருண்டை — 7 நாட்கள்

**விலக்கு:**

உப்பு கூடாது

**தீரும்பிணிகள்:**

வெள்ளை, பெரும்பாடு, மேகம்

## இரத்தக் கடுப்பு தீர உருண்டை

அழிஞ்சில் பட்டையைக் கோழி இரத்தம் விட்டரைத்துக் கொண்டு சுண்டைக்காயளவு உருண்டை செய்து நிழல்புடத்தில் வைக்கவும்.

**கால அளவு:**

3 முதல் 5 நாட்கள் வரை இருவேளை

**உண்ணும்முறை:**

தேன்

## 181. கட்டுவாதி மாத்திரை

| | |
|---|---|
| 1) குரோசானி ஓமம் | சம அளவு |
| 2) அதிவிடையம் | |
| 3) சாதிக்காய் | |
| 4) சாதிபத்திரி | |
| 5) கிராம்பு | |
| 6) திப்பிலி | |
| 7) அபின் | |

குப்பை மேனிச்சாற்றிலரைத்து மிளகு அளவு உருட்டிக் கொள்ளவும். நிழல்புடம் வைக்கவும்.

**உண்ணும்முறை:**

பொன் முசுட்டை வேர்க்கியாழம்

(வேறு)

பிரண்டைப்பொடி — (குருணி) 4.4 மி.கி பொன் நிறமாய் வறுத்து மோரில் போட்டு வைக்கவும். வாரத்திற்கு 2,3 தடவை காலையில் குடிக்கவும்.

## 182. சுரம் தீர மாத்திரை (சந்திரகாளாத்திரி மாத்திரை)

பச்சை நாபி — 35 கி. (வராகன்)

மிளகு — 350 கி. (10 வராகன்) 4 சாமம்

தண்ணீரிலரைத்துக் கொள்ளவும் முள்ளியளவு மாத்திரை செய்து, நிழல்படம் வைத்து தக்கபடி கியாழத்தில் உட்கொள்ளவும்.

### மன்மதசிந்தாமணி உருண்டை

சரக்குகள்:

1. மிளகு
2. செங்கழுநீர்ப்பூ
3. கோட்டம்
4. அமுக்கிராவேர்
5. அமிர்தவல்லிக்கிழங்கு
6. நெருஞ்சில் வேர்
7. வெந்தயம்
8. இலவம்பிஞ்சு விரை
9. பாலைக்கிழங்கு
10. நிலப்பனைக்கிழங்கு
11. முள்ளிவேர்
12. நீர்முள்ளிவேர்
13. வாழைக்கிழங்கு
14. தண்ணீர்விட்டான்கிழங்கு
15. குரோசானி ஓமம்

16. உளுந்து
17. எள்
18. கொத்தமல்லி
19. அதிமதுரம்
20. ஆவாரம்பட்டை வேர்ப் பட்டை
21. கச்சோலம்
22. கிராம்பு
23. சாதிக்காய்
24. இந்துப்பு
25. சிறுதேக்கு
26. கற்கடகசிங்கி
27. சுக்கு
28. திப்பிலி
29. சீரகம்
30. கருஞ்சீரகம்
31. ஓமம் (அசுமதாகம்)
32. ஏலம்
33. இலவங்கப்பட்டை
34. இலவங்கப் பத்திரி
35. சாரணைவேர்
36. மதனகாமப்பூ
37. திப்பிலி
38. முந்திரிகைப் பழம்
39. வசம்பு
40. சிறுகாஞ்சோரிவேர்
41. கடுக்காய்த்தோல்
42. நெல்லிமுள்ளி
43. தான்றிக்காய்
44. இலுப்பைப்பூ
45. அத்தி

**செய்முறை:**

கடைச் சரக்குகளைக் கூட்டி இடித்துச் சலித்துக் கொள்ளவும். இந்தப் பொடி 1 பங்கும் கஞ்சாப் பொடி இடித்த தூள்

1 பங்கும் இரண்டு பங்கு சர்க்கரையும் சேர்த்துத் தேன், பசுநெய் கலந்து உருண்டை (1½ கழஞ்சு) செய்து காலையில் உண்ணவும்.

**விலக்கு:**

பால், சர்க்கரை, முருங்கைக்காய், வாழைக்காய்.

**தீரும்பிணி:**

லேபனம் இல்லாதவன் இராச பெண்களுடன் வெல்லும் ஆண்மை வரும். நலமுண்டாகும். தீராத இன்னல்கள் தீரும். முகம் கவர்ச்சியுடையதாகும். வணிகம் தழைக்கும். இளைத்த உடல் பெருக்கும். கவலைகள் தீரும். எல்லாவிதப் பிணிகளும் தீரும். காய்ச்சும் வாதம் தீரும். அதிசாரம், மந்தம் அக்னி, கிராணி, பிரமியம், இரத்தப் பிரமியம், க்ஷயம் தாதுரசம் மற்றும் தீரும். சொல்வன்மை உண்டாகும்.

**காலஅளவு:**

40 நாட்கள். தாது எழுந்திருக்கும். மிகவும் அறிவு உள்ளவனாவான். பெண்களுக்கு உதவி செய்வான் கை கண்ட மருந்து இது.

**(வேறு)**

மாலையில் மிளகுச் சாம்பல் சீரகம் வெடிக்க விட்டு எடுத்துத் தண்ணீர்விட்டுக் காய்ச்சித்தரவும்.

# உண்டை, மாத்திரை வகுப்பு
## (Pills & Tablets)

### சூலை தீர உருண்டை

**சேரும் சரக்குகள்:**

| | |
|---|---|
| சேங்கொட்டை | (8 துட்டளவு) |
| ஓமம் | (16 துட்டளவு) |
| ஆளிவிதை | (4 துட்டளவு) |
| பொடி இலவங்கப்பட்டை | (4 துட்டளவு) |
| பனை வெல்லம் | (1 துட்டளவு) |

**செய்முறை:**

முதல் 3 சரக்குகளை இடித்துப் பொடி செய்யவும். சலித்து. இலவங்கப்பட்டை, பனைவெல்லத்துடன் சேர்த்துக் கலந்து மீண்டும் இடித்து 14 உருண்டை பண்ணவும்.

**காலஅளவு:**

7 நாட்கள் காலை, மாலை.

**விலக்கு:**

நெய் பருப்பு உப்பு கூடாது.

**குறிப்பு:**

வயிற்றுக் கடுப்பு இதனால் ஏற்பட்டால் மிளகு, ஈர வெங்காயம், கருவேப்பிலை மோரில்

### பேதிக்கு உருண்டை

**சரக்குகள்:**

| | | |
|---|---|---|
| நேர்வாளக்கொட்டை | — | 80 எண்ணிக்கை |
| கடுக்காய் | — | 40 எண்ணிக்கை |
| சுக்கு | — | 20 எண்ணிக்கை |

**செய்முறை:**

நேர்வாளத்தைச் சட்டியிலிட்டு வறுக்கவும். வெடித்த நிலையில் எடுத்து முளையைக் களைந்து கொள்ளவும். பின் மூன்றையும் எலுமிச்சம்பழச் சாற்றிலரைத்துக் கொண்டு கடுக்காயளவு உண்டை செய்யவும். நிழலில் உலர்த்தவும்.

**உண்ணும்முறை:**

இள வெந்நீர்.

**உணவு:**

கோழி, மிளகுநீர், ஆட்டுக்கறி சேர்க்கவும்.

## கணமாந்தம் தீர

**சரக்குகள்:**

| | | |
|---|---|---|
| திரிகடுகு | — | 8.75 கி. |
| கடுகுரோகணி | — | 8.75 கி. |
| பொன் முசுட்டை | — | 8.75 கி. |
| கடுக்காய் | — | 8.75 கி. |

**செய்முறை:**

கடைச்சரக்குகளை முதலில் சூரணம் செய்து, ஆடாதோடை இலையைப் பிட்டு இட்டு. அதன் சாற்றில் அரைக்கவும். கடலை அளவு உருண்டை செய்யவும்.

**உண்ணும்முறை:**

சோறு தின்னும் குழந்தைகளுக்கு—வெந்நீரில் 1 உருண்டை பால் உண்ணும் குழந்தைகளுக்கு—தாய்ப் பாலில் 1 உருண்டை வீதம் தரவும்.

## கிராணிதீர உருண்டை

**சரக்குகள்:**

சாதிக்காய் — 4 எண்ணிக்கை
அபின் —
இலவங்கம் — வராகன்

**செய்முறை:**

சாதிக்காயைக் குடைந்து, அபினை அடைத்து மூடி, சீலை மண் செய்து, குப்பித் தீயில் போட்டு வேக வைக்கவும். காய்ந்து நிறம் மாறியவுடன் எடுத்துக் கொள்ளவும். இலவங்கத்தைப் பொரித்துப் போட்டு எலுமிச்சம் பழச்சாறு விட்டு அரைக்கவும்.

**அளவு:**

கடலையளவு காலை, மாலை.

**உண்ணும் முறை:**

வெந்நீரில்

**தீரும்பிணிகள்:**

மூலக்கிராணி, வயிற்றுக் கடுப்பு, இரத்தக்கழிச்சல், அக்கினிமாந்தம்

## பேதியானந்தபைரவம்

**சரக்குகள்:**

| | |
|---|---|
| சாதிலிங்கம் | 2 வராகன் |
| நாபி | |
| மிளகு | |
| திப்பிலி | |
| வெங்காரம் | |
| கந்தகம் | |
| நேர்வாளம் — 5 வராகன் | |
| கடுகுரோகணி — 3 வராகன் | |

**செய்முறை:**

கடைச்சரக்குகளைப் பொடி செய்து சலித்துக் கொண்டு ஏனையவற்றுடன் கலந்து பழச்சாற்றில் 2 சாமம், அரைத்து குன்றியளவு மாத்திரை செய்யவும். உலர்த்திக் கொள்ளவும்.

**தீரும்பிணிகள்:**

சன்னிவாதசுரம், புதுசுரம், பழஞ்சுரம் — இஞ்சிச்சாறு
சுவாசகாசம் — ஆடாதோடைசாறு, மேலும் ஆவாரம் பூவை

அரைத்து உள்ளே வைத்துத் தரவும். பசுவின் வெண்ணெயிலும் தரலாம். சர்வவிடங்களுக்கும் அலரிச் சாற்றில் இடவும்.

## அண்ட வாதம் தீர

**செய்முறை:**

இலுப்பைப் பிண்ணாக்கை அரைத்துக் கொட்டைப் பாக்களவு உருண்டை பண்ணவும்.

**உண்ணும்முறை:**

வாழைப்பழத்தில் குழிபண்ணி, நடுவில் வைத்து விழுங்கவும்.

**அளவு:**

3 வேளை

**விலக்கு:**

ஆறுநாள் உப்பு கூடாது.

**உணவு:**

வெந்நீர் சோறு

## கற்பூர உருண்டை

**சரக்குகள்:**

| | |
|---|---|
| கற்பூரம் | — வராகன் |
| ஏலம் | — 2 வராகன் |
| சாதிக்காய் | — 4 வராகன் |
| கிராம்பு | — 6 வராகன் |
| மிளகு | — 8 வராகன் |

**செய்முறை:**

பொடிசெய்து கொள்ளவும். தேன்விட்டரைத்துக் காயவைக்கவும்.

**அளவு:**

ஒரு உருண்டை

**தீரும் பிணிகள்:**

சயம்

## மூலக்கடுப்பு தீர உருண்டை

**சரக்குகள்:**

| | |
|---|---|
| நீர் முள்ளிவேர் | — சிரங்கை |
| சுக்கு | — 6 எண் |
| மஞ்சள் | — 3 எண் |
| சிறு கடுக்காய் | — 2 எண் |
| களிப்பாக்கு | — 2 எண் |
| அரப்பொடி | |

**செய்முறை:**

நீர் முள்ளி வேரை வறுத்துப்பொடி செய்யவும். எல்லாச் சரக்குகளையும் கலந்தரைத்து 3 உருண்டைகள் செய்யவும்.

## சூலை தீர உருண்டை

**சரக்குகள் :**

| | | |
|---|---|---|
| இந்துப்பு | ½ பலம் | |
| கரியுப்பு | | |
| வளையலுப்பு | | |
| பொட்டிலுப்பு | | |
| அமரிஉப்பு | | |
| மூங்கிலுப்பு | | |
| கல்லுப்பு | வீரம் | — ½ பலம் |
| பறையுப்பு | பூரம் | — ½ பலம் |
| பூனிருப்பு | நேர்வாளம் | — ½ பலம் |

**செய்முறை:**

உப்புகளைப் பொடி செய்து சட்டியிலிட்டு, குமட்டிச்சாறு விட்டு துத்திவேரால் துழாவ வேண்டும். பின்பு எடுத்து, கல்வத்தில் போட்டு ஏனைய சரக்குகளையும் இட்டுத் திரிகடுகு கியாழத்தில் அரைத்துக் குன்றியளவு உருண்டை செய்யவும்.

**உண்ணும்முறை;**

பனை வெல்லம்

**தீரும்பிணிகள்:**

சூலை, வலி குன்மம், நீர்க்கோவை, உதிரவாயு, பல வாதம் அண்டவாதம், கிரந்தி, மேகம்.

## (அர்த்த நாரி) சுரமாத்திரை

**சரக்குகள்:**

| | |
|---|---|
| சூதம்<br>நாபி<br>கந்தகம் | சம அளவு |

**செய்முறை:**

இதைக் கல்வத்திலிட்டு இரு சாமம் நொச்சிச் சாற்றிலாட்டி குளிகை செய்யவும். ஒரு சட்டியில் உப்பைக் கொட்டவும். சீலைமண்செய்து, குளிகையை உப்புமேல் வைத்து, மூடி அடுப் பேற்றி 4 சாமம் எரித்து எடுக்கவும். ஆறியபின் கல்வத்திலிட்டு செங்கழுநீர் சாற்றில் 4 சாமம், நொச்சி சாற்றில் 4 சாமம், ஆட்டவும். பின் சூரியபுடம் வைத்து எடுக்கவும், பசலைச் சாற்றில் 4 சாமம் ஆட்டி எடுத்து சூரியபுடம் வைத்துக், காய வைக்கவும்.

**உண்ணும்முறை:**

நொச்சிச் சாறு

**அளவு:**

பணவெடை

**தீரும்பிணி:**

சுரங்கள்

**குறிப்பு:**

சுரம் பாதி உடலில் இருக்க, நொச்சிச்சாற்றில் நசியமிட வும். உடலின் இருபுறமும் சுரம் இருக்க, இருபக்கமும் நாசியி டவும்.

**உணவு :**

ஆட்டுப் பாலில் கஞ்சி காய்ச்சிக் குடிக்கவும்.

## அனந்த பைரவம்

**சரக்குகள்:**

| | |
|---|---|
| நாபி<br>இலிங்கம்<br>திரிகடுகு<br>நல்லவிடையம் | சம அளவு |

**செய்முறை:**

பழச்சாற்றிலரைக்கவும்.

**அளவு:**

பயறு அளவு உருண்டை

**உண்ணும்முறை:**

இஞ்சிச்சாறு 2 உருண்டை

**தீரும்பிணிகள்:**

தாபசுரம், குளிர்சுரம்

பித்தம் தீர — தாய்ப்பாலில் ஓர் உருண்டை

அனைத்துக் கிராணி — அதிவிடையம், சாதிக்காயை அரைத்துத் தயிரில் குழப்பி, தேனுடன் உண்ணவும்.

## மூலக்கடுப்பு தீர

**உண்ணும்முறை :**

பசுவின் நீர் 1 உருண்டை விதம் 3 நாட்கள் உண்ணவும்.

**உணவு :**

பாற்சோறு

**குறிப்பு :**

இந்த மருந்தை எண்ணெயில் எரித்து உண்ணவும்.

# 183. கவிசை தீர உருண்டை

**விளக்கம் :**

இது நடுவயிற்றில் திரண்டு இருக்கும். வயிறு உப்பி இருக்கும்.

**சரக்குகள் :**

1. நொச்சி இலை
2. தும்பை இலை
3. துளசி இலை
4. கஞ்சா இலை
5. குப்பைமேனி
6. செருப்படி
7. கையான்
8. பொடுதலை
9. கொழுஞ்சிவேர்
10. சாரணை
11. வசம்பு
12. சுக்கு
13. கடுக்காய்
14. மிளகு
15. பூண்டு
16. திப்பிலி
17. இந்துப்பு
18. பெருங்காயம்
19. தகரை
20. வெள்ளறுகு

**செய்முறை :**

மேற்குறித்தவற்றைக் கலந்து கொண்டு அரைத்துக் காய்ச்ச வேண்டும், கழஞ்சு அளவு உருண்டை செய்ய வேண்டும்.

**அளவு :**

1 உருண்டை, ஒருமண்டலம் உண்ணவும்.

## சுரம் தீரமாத்திரை

**சரக்குகள்:**

| | | |
|---|---|---|
| பாடாணம் | | |
| வெங்காரம் | | |
| திப்பிலி | | |
| மனோசிலை | | |
| அக்ரகாரம் | — | 3.5. கி (வராகன்) |
| மிளகு | — | 35 கி. (1 பலம்) |

**செய்முறை:**

வெற்றிலை சாறுவிட்டரைத்துக் கடுக்காய் கியாழத்தில் அரைத்து இஞ்சி சாறுவிட்டரைத்துக் கொள்ளவும். மூன்று சாமம் மொத்தமாக அரைத்து கொத்தமல்லியளவு மாத்திரை களாகச் செய்யவும்.

**தீரும்பிணிகள்:**

சூலை, சன்னி, சுரதோடம் போகும்.

**உண்ணும்முறை:**

தேன், இஞ்சி, தாய்ப்பால் 1 மாத்திரை தரவும்.

**விலக்கு:**

புளி, புகையிலை கூடாது.

**(வேறு)**

| | | |
|---|---|---|
| இரசம் | — | 3.5 கி. (வராகன்) |
| கந்தகம் | — | 3.5 கி. (வராகன்) |
| வீரம் | — | 3.5 கி. (வராகன்) |
| இலிங்கம் | — | 3.5 கி. (வராகன்) |
| தாளகம் | — | 3.5 கி. (வராகன்) |
| வெங்காரம் | — | 3.5 கி. (வராகன்) |
| மனோசிலை | — | 3.5 கி. (வராகன்) |

**செய்முறை:**

பழச்சாற்றிலரைத்துக் கொண்டு 1 சாமம், வெற்றிலைச் சாற்றில் 1 சாமமும் அரைத்துக் கொள்ளவும். மாத்திரையாக உருட்டிக்கொள்ளவும்.

## நெஞ்சடைப்புத்தீர உருண்டை

10 மிளகை இடித்து உருண்டயையாக்கி உண்ணவும்

## 184 ஏலாதி மாத்திரை

| | |
|---|---|
| 1) ஏலம் | 70 கி. (2 வராகன்) |
| 2) பொடி இலவங்கப்பட்டை | |
| 3) சீரகம் | |
| 4) கோட்டம் | |
| 5) அதிமதுரம் | |
| 6) சந்தனம் | |
| 7) முந்திரிப்பழம் | |
| 8) கிராம்பு | |
| 9) சாதிக்காய் | |
| 10) சாதிபத்திரி | |
| 11) ஓரிலைத்தாமரை | |
| 12) நன்னாரிவேர் | |
| 13) பற்பாடகம் | |
| 14) கோரோசனை | |

இளநீரில் 1 சாமம் அரைக்கவும். பின்னர் (குன்றிமணி) அளவு (4.4 மி.கி. மாத்திரையாக்கவும்)

**உண்ணும்முறை:**

சீரகக்கிழயாழம், தாய்ப்பால் இளநீரில் குடிக்கவும்

**தீரும்பிணிகள்:**

தாபசுரம், இரத்தக்கழிச்சல், பித்தம், தலைவலி, அத்திசுரம், பிரமேகம் என்பன

## 185. பஞ்சாமிர்த மாத்திரை

**சரக்குகள்:**

| | | |
|---|---|---|
| இரச செந்தூரம் | — | 70 கி. (2 வராகன்) |
| திப்பிலி | — | 70 கி. |
| ஏலம் | — | 70 கி. |
| பச்சை கற்பூரம் | — | 38 கி. (½ வராகன்) |

| | | |
|---|---|---|
| குங்குமப்பூ | — | 38 கி. (½ வராகன்) |
| கோரோசனை | — | 38 கி. |
| அரப்பொடி | — | 38 கி. |
| சந்தனக்கட்டை (மலாக்காய்கட்டை) | — | 70 கி. (2 வராகன்) |

**செய்முறை:**

பொடிசெய்து கொள்ளவும். பின் விலாமிச்ச வேரை இடித்து ½ படி தண்ணீர் சேர்த்து ¼ படியாக்கவும். கியாழத்தில் 2 சாமம் பொடியைத் தூவி அரைத்து (வராகன்) 35 கி. மாத்திரையாகச் செய்யவும்.

**உண்ணும்முறை:**

சுரத்தால் ஏற்பட்ட நீர் வேட்கைக்கு சீரகம், திப்பிலி, வெந்நீரில் தரவும்.

**சுவாசகாசம்:**

தேன், திப்பிலி

**மேகம்:**

சீரகம், ஏலம், திப்பிலி, கழுநீர்

**நீரடைப்பு, எரிவு:**

திப்பிலி, சீரகம், இளநீர், தயிர், அடைநீர், தாழைவிழுதுச் சாறு, (பணவெடை) 244 கி. சர்க்கரையுடன்.

## 186. பிரமானந்த பைரவம்

| | |
|---|---|
| சாதிலிங்கம்<br>வெங்காரம்<br>மிளகு<br>நாபி | சம எடை |

பழச்சாற்றிலரைத்து (குன்றியளவு) 130 மி.கி. மாத்திரைகள் செய்யவும்.

**உண்ணும்முறை:**

இஞ்சிச்சாறு, தேன்.

**தீரும்பிணிகள்:**

சுரம், சன்னி, பித்தம், விட பேதி என்பன.

## அமிர்த மாத்திரை

**சரக்குகள்:**

1. இரசம்
2. கந்தகம்
3. அரிதாரம்
4. மனோசிலை
5. சுத்தியான நாபீ
6. வெங்காரம்
7. திரிகடுகு
(சுக்கு, மிளகு, திப்பிலி)
8. திரிபலை
(நெல்லிக்காய் தான்றிக்காய்
கடுக்காய்)
9. சீரகம்
10. கருஞ்சீரகம்
11. சந்தனம்
12. பெருமரத்துப் பட்டை — 3-5 கி. (வராகன்)
13. முத்தக்காசு
14. முருங்கைப்பிசின்
15. வாய் விளங்கம்
16. கண்டங்கத்திரிவேர்
17. கொடிவேலி வேர்
18. அதிமதுரம்
19. கோட்டம்
20. சீந்தில் கொடி
21. நேர்வாளம் — (48 வராகன்) 1680 கி.

**செய்முறை:**

கையான் சாற்றில் 15 நாட்கள் அம்மியில் அரைத்து, அம்மாவாசையன்று 4.4 மி.கி. (குன்றி) மாத்திரை செய்யவும். நிழல்புடம் வைத்து எடுக்கவும்.

**அளவு:**

1 மாத்திரை

**தீரும்பிணி:**

சுரம் சர்க்கரை

சூதகவாயு போக — அனிருசியிலை
சூதகவெட்டை — புளியிலைச்சாறு
அபானன் பிரிய — இஞ்சிச்சாறு
பிரமேகம், தாதுநட்டம், சுக்கிலவிருத்தி —
இரத்தக்கிராணி — (வெள்ளாட்டுப்பால் எருமைத்தயிர்)
கிராணி தீர — புடல் இலைச்சாறு
வாயுக்கள் தீர — சிறுநீர், கோமியம்.

**(வேறு)**

பயித்திய வாயு — பேய்ப்புடல், கொத்தமல்லி, சீந்தில்
பாரிச வாயு — இஞ்சிச்சாறு கியாழம்
எல்லாவிதவிடம், சூதகமயக்கம் — பச்சைத்தண்ணீர்
துர்மாமிச அடைப்பு, நீரடைப்பு — கோவைத்தண்டு கியாழம்
விளக்கெண்ணெயுடன்

மென்மையான உடல் உள்ளவர்கள், முழுமையான கர்ப்பம் உள்ளவர்கள் விளக்கெண்ணெயில் உண்ணவும்.

## 187. வாயு தீர உருண்டை

நல்லிக்கறுக்கு — 1 பிடி
மிளகு — 7
வெள்ளை வெங்காயம் — 35 கி. (பலம்)

அரைத்து மூன்று உருண்டை செய்து புழுங்கலரிசி தவிட்டில் கலந்து மூன்று முறை உண்ணவும். 4,5 நாட்களுக்குத் தொடர்ந்து உண்ணவும்.

**விலக்கு:**

புளி, புகையிலை கரப்பான் உணவு கூடாது.

**(வேறு)**

| | | |
|---|---|---|
| சாதிலிங்கம் | — 70 கி. | (2 வராகன்) |
| வெங்காரம் | — 70 கி. | (2 வராகன்) |
| காரீயம் | — 3.5 கி. | (2 வராகன்) |

பழச்சாற்றில் அரைத்து கடலை அளவு உருண்டை செய்து சுக்கு நீர் அல்லது இஞ்சிச் சாற்றில் உட்கொள்ளவும்.

**(வேறு)**

| | |
|---|---|
| உடைத்த திரி கடுகு<br>சீரகம்<br>கருஞ்சீரகம்<br>நாய்க்கடுகு<br>இந்துப்பு<br>பெருங்காயம் | 2 பங்கு |
| கடுகுரோகணி | — 1 பங்கு |

வறுத்து இடித்துக் கொண்டு பழச்சாறு விட்டரைத்து, தேற்றான் கொட்டைப் பாக்களவு உருண்டை பண்ணி 12 தேச காலம் உண்ணவும்.

## 188. கோடாழி மாத்திரை

**சரக்குகள்:**

| | |
|---|---|
| 1) கந்தகம்<br>2) அரிதாரம்<br>3) பச்சை நாபி | சம எடை |
| 4) இருவி<br>5) வெங்காரம்<br>திரிகடுகு<br>திரிபலை<br>6) அக்ராகாரம்<br>7) முள்ளி | சம எடை |

**அளவு:**

மிளகளவு

**உண்ணும்முறை:**

சுரம், நீர்வேட்கை — நெல்லிக்காய்ச்சாறு
சுரம் —பழம்புளி

**(வேறு)**

**செய்முறை:**

சூரணம் மொத்தம் 20 கழஞ்சு எடுத்துக்கொண்டு கையான் சாற்றில் திங்கட்கிழமை முதல் 1 சாமம் வீதம் 21 நாட்கள் அரைத்து மிளகு அளவு மாத்திரை உருட்டிக்கொள்ளவும்.

**(வேறு)**

| | |
|---|---|
| பச்சரிசி<br>சீரகம்<br>இலவங்கம்<br>அதிமதுரம்<br>சர்க்கரை<br>மெருகன்வேர் | சம எடை |

அரைத்து உண்டை செய்து, முன் கூறிய மாத்திரையும் சேர்த்துத்தர ஒரு நாளையில் சுரம் விலகும்.

**உண்ணும்முறை:**

| | |
|---|---|
| கையான்சாறு<br>பசும்பால் | குளிர்சுரம் |
| சீரகம்<br>சர்க்கரை | சுரம் |
| பசுநெய் — | கைகால் முடக்கம் தீரும் |

சுக்கு, மிளகு, கடுக்காய், தான்றிக்காய் நெல்லிமுள்ளிப் பொடி — மேல் சுவாசம் விலகும்

**(வேறு)**

| | |
|---|---|
| கோட்டம்<br>வசம்பு<br>பெருங்காயம்<br>இந்துப்பு<br>ஓமம் | சம எடை |

எருக்குப்பாலிலரைத்து உண்டை செய்து பழைய மாத்திரையுடன் கலந்து பூச சர்வாங்க வாதம் தீரும்.

| | | |
|---|---|---|
| திரிபலை பொடி | — | சந்துவாதம் |
| ஓமம் | — | வாதம் 20 நாளில் தீரும் |
| தேன் | — | 64 வகை வாதம் தீரும் |

திரிபலை
திரிகடுகு } வாதம் போகும்.
ஓமம்

சீனி, வெற்றிலை, கையான் சாறு — பித்தம் தீரும்

காடியில் அரைத்து, 7 நாட்கள் பூசி, 20 நாட்கள் உண்ண வாதம் தீரும்.

எலுமிச்சைப்பழச்சாறு — தலையில் உண்டைப் பாய்ச்சி. போட — சன்னி தீரும்

ஊமத்தையிலைச்சாறு — சன்னி, வாதம்

எலுமிச்சைச்சாறு — உள்ளுக்கு, வெளியில் பூச பிள்ளை பிறக்கும். சன்னி தீரும்.

நெற்றியில் பற்று, பல்லடியில் வைக்க — முகச்சன்னி தீரும்

ஓமம், வசம்பு சேர்த்து — முது கரப்பான் தீரும்,

| | | |
|---|---|---|
| தயிர் | — | செரியாமை, இருமல் தீர |
| வாயு | — | வெல்லம், வசம்பு |
| சூலை | — | முருங்கைப்பட்டைச்சாறு, பசு நெய் |
| வயிற்றுவலி | — | திரிகடுகு, ஏலம் (½ படி) 672கி வீதம் தீரும். |
| வெப்புப்பார்வை | — | கருப்பட்டி |
| மூலம் | — | சாதிக்காய், ஆமணக் கெண்ணெய் |
| பேதி | — | புளிச்சாறு, களிப்பாக்கு, வெந்நீர் |
| பசுமோர் | — | இளநீர், கிரிப்பூச்சி |
| சந்தனம் | — | வேரடைப்பு |

| | | |
|---|---|---|
| கருங்காலி வைரம் தேன் | — | நீரிழிவு |
| தண்ணீர்விட்டான்கிழங்கு | — | நீர்க்கடுப்பு |
| பாக்கு, பால் | — | கல்லெரிவு |
| தண்ணீர் | — | படைத்தாமரை |
| கோமியம் | — | புண், விடம் |
| முருங்கைப்பட்டைச்சாறு, நெய், தேன் | — | வயிற்றுவலி |
| கையான்சாறு | — | பசி ஏற்படும் |
| பசுநெய் | — | வயிற்றுச் சூலை |
| எலுமிச்சைச் சாறு | — | தேள்கடி |
| பருத்தியிலை | — | குன்மம் |
| எள்ளிலை | — | கண்ணோவு |
| சிறுகீரை | — | பெருச்சாளிக்கடி |
| செண்பகப்பூ | — | வாயில் நாற்றம் |
| கொத்தமல்லி | — | கடிவிடம் |

## குழம்பு வகை 190. தோடம் தீர

| | |
|---|---|
| கம்பு<br>தேற்றான் கொட்டை<br>திப்பிலி | வகைக்கு 17.5கி (அரை வராகன்) |

# இதர வகைகள்

# களி, அடை, வகுப்பு

## 191. வாதம் தீரக்களி

1. விழுதி இலையை அரிசியிலிடித்துக் களி கிண்டித் தின்னவும்.

(வேறு)

கழுதை தும்பை இலை
புழுங்கல் அரிசி

அரைத்து எலுமிச்சையளவு எடுத்து பசு நெய் சேர்த்து களி கிண்டி உண்ணவும். இரத்த சூலை, ஆசனத்தில் இரத்தம் சீதம் விழுதல் தீரும்.

பசுநெய், முருங்கைப்பிஞ்சு, இலை, வாழைப் பிஞ்சு உண்ணவும்.

## 192. பவுத்திரம் தீர அடை

| | | |
|---|---|---|
| நல்லெண்ணெய் | — | 1.344 மிலி (படி). |
| அரிசி | — | 1.344 கி (படி). |

அரைத்து நெய்யில் அடை சுட்டுத்தின்னவும்.

## 193. வாயு தீரக் களி

பருத்திக்கொட்டை 1.344 கி (படி) இடித்து உளுந்தமாவு 1 344 லி (படி) போட்டுப் பிடித்துக் கொள்ளவும் நல்லெண்ணெயில் போட்டு வெல்லம் 17.5 கி சேர்த்துக் களியாகக் கிண்ட

வும் (பலம்) பாக்களவு உட்கொள்ளவும். இடுப்பு நோவு தீரும் புண்ணுடன் சேர்ந்த நோய் விலகும். வாயு விலகும். 9ம் நாள் நெய் வார்த்துக் குளிக்கவும்.

## 194. வாயு தீர அடை

கொத்த மல்லியை அரைத்து அடை தட்டிக் காய வைக்கவும். அடையைச் சட்டியிலிட்டுத் தண்ணீர் 336 மி. (உழக்கு) விட்டுக்காய்ச்சவும். 1.3 லி (ஆழாக்கு) சுண்டியபின் நெல்லிக் காயைக் கடித்துக் கொண்டு காலையில் மட்டும் உண்ணவும். தொடர்ந்து 5 நாட்கள் உண்ணவும். கண்ணெரிச்சல், கை எரிச்சல் தீரும்.

## 195. கற்றாழைச் சாறு

கற்றாழைச் சாற்றிலரைத்து மூன்று சாமம் வீதம் — எடுத்துக் கொள்ளவும். மெழுகு பதமாய் வரும் இதைவிடதை வேர் சூரணத்தில் தரவும்.

## 196. வீரமெழுகு

வீரம் — ஒ. கி. (கால் பலம்)

குப்பைமேனிச்சாறு

சட்டியில் மணலைக் கொட்டி ஒரு கிளிஞ்சலை மணல் மேல் வைக்கவும். வீரத்தைக் கிளிஞ்சல் மேல் வைத்து குப்பை மேனி சாறு விடவும். அடுப்பேற்றி எரிக்கவும். குச்சியால் வீரத்தைக் கிண்ட மெழுகாய் வரும்.

## 197. காதுக்குச் சொட்டு

பேய்ச்சுரைவிதை

இந்துப்பு

நல்லெண்ணெயில் கொதிக்க வைத்து ஆறியபின் காதில் விடவும்.

(வேறு)

நெய்சட்டி வேரை நல்லெண்ணெயில் எரித்து வடிகட்டிக் காதில் சொட்டாக விடவும்.

## 198. பொடி வகுப்பு

### அதிசாரம் தீர

சுட்ட கடுக்காய்சாம்பல்
சீலைச் சாம்பல்
இலவம் பிஞ்சு
காய்ச்சுக்கட்டி
அதிவிடையம்

அரைத்து வெள்ளாட்டுத் தயிரில் குடிக்கவும்.

(வேறு)

| | | |
|---|---|---|
| ஓமம் | — | 10.5 கி. (3 வராகன்) |
| குரோசானி ஓமம் | — | 10.5 கி. (3 வராகன்) |
| சாதிக்காய் | — | ஒன்று |
| கிராம்பு | — | 3.5 கி. (வராகன்) |
| ஏலம் | — | 3.5 கி. (வராகன்) |
| பூண்டு[1] | — | 280 கி. (சேர்) |

பொடி செய்து 3.5 கி எருமைத் தயிரில் 5 நாட்கள் குடிக்கவும்.

## 199. கர்ப்பசூலை தீர

### புண்தீரப் பொடி

வாழைக்காய்க் கச்சலை காயப்போட்டுச் சுட்ட சாம்பலை விளக்கெண்ணெயுடன் கலந்து போடவும்.

---

1. இம்முறையில் 6 வகை என்பதால் பூண்டு இடம் பெற்றுள்ளது. மூலத்தில் பூண்டு குறிக்கப்படவில்லை. மறை பொருளாக எண்ணிக்கை மூலம் உணர்த்தப்பட்டது.

## 200. சுரம் தீரப் பொடி

| | | |
|---|---|---|
| இலிங்கம் | — | 35 கி. (பலம்) |
| இரசசெந்தூரம் | — | 17.5 கி. (½ பலம்) |
| வீரம் | — | 9 கி. (¼ பலம்) |

அரைத்து அரிசி எடை உட்கொள்ளச் சன்னி, சுரம், சீதளம் தீரும்.

**ஆசிரியர்குறிப்பு :**

இதைக் கவனமுடன் செய்யாவிடில் விரும்பாத விளைவுகள் உண்டாகும்.

**முற்றும்**

# எண்ணெய்கள், தைலவகைகள் வகுப்பு.

## 201. கிரந்தி எண்ணெய்

**சேரும் சரக்குகள்:**

| | |
|---|---|
| கழுதை லத்திச்சாறு | 1.344 லி (படி) |
| கரு நொச்சிச்சாறு | |
| மிளகு தக்காளிச்சாறு | |
| ஈண்டந் தழைச்சாறு | |
| கழற்சிச்சாறு | |
| ஈரவெங்காயச்சாறு | |
| விளக்கெண்ணெய் | — 472 லி (½ படி) |

**செய்முறை:**

சாறுகளை விளக்கெண்ணெயில் கலந்து கொண்டு அடுப்பேற்றி எரித்து எடுத்துக் கொண்டு, வடிகட்டவும்.

**அளவு:**

2 கரண்டி - சிறுவர்களுக்கு

1 கரண்டி - குழந்தைகளுக்கு

**தீரும்பிணிகள்:**

கிரந்தி வகைகளான கருங் கிரந்தி, செங்கிரந்தி, கணை, மாந்தம்.

**(வேறு)**

**சரக்குகள்:**

| | |
|---|---|
| புங்கம் வேர்ப்பட்டை | — 255 கி. 3 (பலம்) |
| சுடுதுருத்தி வேர்ப்பட்டை | — 85 கி. (பலம்) |
| கன்[1] வேர்ப்பட்டை | — 255 கி. (3 பலம்) |

---

1 இன்னதென்று விளங்கவில்லை

**செய்முறை:**

அடுப்பிலேற்றிக் காய்ச்சிப் பதத்தில் எடுத்துக்கொண்டு. வடிகட்டவும்.

**அளவு:**

8.8 கி (2 காசெடை) உட்கொள்ளவும்.

**விலக்கு:**

இச்சாபத்தியம்.

**தீரும்பிணிகள்:**

கிரந்தி மட்டுமல்லாமல் பெரியவர்களுக்கு உண்டாகும் வெப்பம், பித்த காசம் போகும். 1 கரண்டி வீதம் 7 நாட்கள் கொள்ளவும். வெந்நீர் உட் கொள்ளவும்.

## 202. கீரிப்பூச்சி தீர

**சரக்குகள்:**

| | | |
|---|---|---|
| விளக்கெண்ணெய் | — | 1.344 லி (படி) |
| சாணிப்பால் | — | 21.5 லி (நாழி) |
| வாழைக்கட்டைச் சாறு | — | 21.5 லி (நாழி) |
| தயிர் | — | 1.344 லி (படி) |
| கோவையிலை | — | 1.344 லி (படி) |
| ஈரவெங்காயம் | — | 1.344 லி (படி) |

**செய்முறை:**

இவைகளைக் கூட்டி, அடுப்பேற்றி எரித்து, பதத்தில் வடிகட்டி எடுக்கவும்.

**தீரும்பிணிகள்:**

கீரிப்பூச்சி விழும். பெரியவர்களுக்கு, சிறுவர்களுக்கும் சிறுவர்களுக்கும் பயன்படும்.

**(வேறு) நெய்**

தேங்காயைத் திருகிப் பால் 1.3 லிட். (படி) எடுக்கவும். கடுகு ரோகனி 7.0 கி (2 வராகன்) கருஞ்சீரகம் 7.0 கி

(2 வராகன்) பொடி செய்து கொண்டு பாலில் போட்டுக் காய்ச்சவும். நெய்யானபின் கரண்டி அளவு குடிக்கவும். மேகவெட்டை, மருந்தீடு, கிரிப்பூச்சி போகும். பேதியாகும்.

## 203. மேக வெட்டை தீர

**சரக்குகள்:**

விளக்கெண்ணெய் — *1.9 லி (1½ படி)*

காட்டுக் சிறுமல்லிகைச்சாறு — *1.3 லி (1 படி)*

(எருமைக் கடாவின் கோசலம் விட்டுத் துவைத்து சாறு.

ஈரவெங்காயச் சாறு — *4 லி (¼ படி)*

கடுக்காய் — *35. கி (பலம்)*

**செய்முறை:**

அனைத்தையும் கலந்து கொண்டு, அடுப்பிலேற்றி எரித்துப் பதத்தில் எடுக்கவும். கடுக்காயைப் பொடிசெய்து போட்டு, கலந்து கொண்டு வடிக்கட்டவும்.

**தீரும்பிணிகள்:**

மலக்கட்டு, மேக வெட்டை, வெள்ளை

**அளவு:**

கரண்டி

**உணவு:**

(சாமத்திற்கு) 3 மணி நேரம் சென்ற பின் முருங்கைக்கீரை அவித்த தண்ணீர், சோறு உண்ணவும்.

**(வேறு)**

மிளகு — *17½ கி. (½ பலம்)*

சர்க்கரை — *17½ கி. (½ பலம்)*

எண்ணெய் — *4½ கி. (அரைக்கால் பலம்)*

**செய்முறை:**

எண்ணெயில் மிளகுப்பொடி செய்து போட்டு சர்க்கரை யுடன் கலந்துண்ணவும்

**குறிப்பு:**

எரிச்சலெடுத்தால் முருங்கை இலையைக் கலந்து $4\frac{1}{2}$ லி. தண்ணீர் கொடுக்கவும். கைகண்ட மருந்து. கரட்டைப் பற்றிய சூலை கிரந்திப்புண். தீரும்.

**அளவு:**

5 நாட்கள்

**தீரும்பிணி:**

கணமாந்தம்

**(வேறு)[1]**

சாதிக்காய்
சாதிப்பத்திரி
கிராம்பு
ஏலம்
கோட்டம்
அதிமதுரம்
அதிவிடையம்
குங்குமப்பூ — 700 கி. (2வராகன்)
பஞ்சமூலம்
கடுக்காய்
தான்றிக்காய்
குரோசானி ஓமம்
மாசிக்காய்
செங்கோட்டம்
சதைகுலி
சித்திரமூலம்
ஓமம் — 175 கி. (5 வராகன்)
வசம்பு — 210 கி. (6 வராகன்)
வசம்பைச் சுட்டுச் சூரணமாக்கவும்.

1 குறையுடன் அமைந்துள்ளது.

| | |
|---|---|
| குழி விட்டான்<br>நந்தியாவட்டவேர்<br>காட்டுமல்லிகை வேர் | புன்னைக் காயளவுக்கு கற்கம் |
| கோழி அவரை இலை<br>கண்டங்கத்தரி<br>தூதுவளை<br>மணித்தக்காளி<br>விட்ணுகிரந்தி<br>சின்னிஇலை<br>குப்பைமேனி | .650 லிட் (அரை படி) |
| ஆமணக்கெண்ணெய் — | 1.3 லிட். (படி) |

கற்கத்தைச் சாற்றில் கலந்து கொள்ளவும் பின் எண்ணெயுடன் சேர்த்து, அடுப்பிலேற்றிக் காய்ச்சிப் பதத்தில வடித்துக் கொள்ளவும்.

**அளவு:**

(துட்டைடை)

**தீரும்பிணிகள்:**

சுழிக்கணம், தொண்டைக் கட்டு

**உணவு:**

பத்தியம்

### (வேறு) இரத்த கணத்துக்கு நெய்

அதிமதுரம்
செங்கழனிப்பூ
கோட்டம்
நன்னாரிவேர்
சீரகம்
செண்பகப்பூ
தூதுவளைவேர்

இவைகளைப்பாலிலரைத்து நெய்யில் கலந்துண்ணவும்.

சட்டியில் வெண்ணெயை இட்டு உருகும்போது மணித்தக்காளி இலையைப் பாக்களவு போடவும். விழுதை இளம் பதத்திலெடுத்து குழந்தைகளுக்குத் துட்டெடை தரவும்.

## 204. கற்றாழை எண்ணெய்

| | | |
|---|---|---|
| கற்றாழைச்சாறு | — | 1.3 லி. (படி) |
| பசுப்பால் | — | 1.3 லி. (படி) |
| இளநீர் | — | 1.3 லி. (படி) |
| சிற்றாமணக்கெண்ணெய் | — | 3.9 லி. (3 படி) |
| சந்தனம்<br>கணப்பூண்டு<br>மான் கொம்பு<br>ஆமை ஓடு | — | 35 கி (பலம்) |
| செண்பகப்பூ | — | ¼ பலம் |
| சாதிக்காய் | — | 1 பலம் |
| சாதிபத்திரி | — | 1/8 பலம் |
| கொத்தமல்லி | — | ½ பலம் |
| மதுரம் | — | ¼ பலம் |
| கோட்டம் | — | ¼ பலம் |
| கடுகுரோகணி | — | ¼ பலம் |
| கிராம்பு | — | ¼ பலம் |
| கோரைக்கிழங்கு | — | ¼ பலம் |
| சன்னலவங்கப்பட்டை | — | ¼ பலம் |
| கருஞ்சீரகம் | — | ¼ பலம் |

சூரணம் செய்து எண்ணெயுடன் தரவும்.

கடைச்சரக்குகளை இளநீரிலரைத்துச் சாறுகளில் கலந்து வடிகட்டவும்.

## 205. கந்தக எண்ணெய்

| | | |
|---|---|---|
| நெல்லிக்காய் கந்தகம் | — | 3.5 கி. (வராகன்) |
| எருமை வெண்ணெய் | — | எலுமிச்சையளவு |

கந்தகத்தைப் பொடி செய்யவும். எருமை வெண்ணெயைச் சீலையில் தடவி அதில் பொடியைத் தூவித் திரித்து விளக்கில் கொளுத்தவும். அடியில் கலத்தை வைத்துப் பிடித்து சேகரிக்கவும். தைலம் விழும் விரலில் நனைத்து மூக்கில் தடவ, இரத்த பீனசம், நீர்ப் பீனசம் என்பன தீரும்.

**(வேறு)**

நெல்லிக்காய் கந்தகம் — 35 கி. (பலம்)
பசும்பால்
குப்பைமேனிச்சாறு — 1.3 லிட். (படி)

நெல்லிக்காய்க் கந்தகத்தைத் தேவையான அளவு எடுத்துக் கொண்டு 30 நாழிகை பசும் பாலில் ஊறவைத்துக் கொள்ளவும். குப்பைமேனிச் சாற்றில் கந்தகத்தைப் போட்டு (35 கி.) அடுப்பில் காய்ச்சி இறக்க விளக்கெண்ணெயைப் போல் தைலம் கிடைக்கும். வடிகட்டவும்.

குப்பைமேனிச் சக்கையில் கந்தகத்தைச் கலந்து எரிக்கத் தைலம் கிடைக்கும்.

இரண்டு முறை உள்ள கற்கத்தைத் தைலத்திலிட்டுக் கலந்து கொண்டு காய்ச்சவும். தண்ணீர் இல்லாத ;பதத்தில் இறக்கிக் கொள்ளவும்.

**அளவு:**

488 மி.கி. (பணவிடை)

**உட்கொள்ளும் முறை:**

புழுங்கலரிசி மாவில் காலை, மாலை சலந்து உட்கொள்ளவும்.

**கால அளவு:**

40 நாட்கள்.

**தீரும்பிணிகள்:**

18 வகையான குட்டங்கள், கிரந்திப்புண், சிரங்கு, சொறி, குட்டம், வெண் குட்டம், கருங்குட்டம். வண்டுகடி வாதம் 84 என்பன தீரும்.

## 206. கண்நோய் தீர நெய்

வெள்ளைச் சாரணை வேர் }
இந்துப்பு

இரண்டையும் பசு வெண்ணெயில் கலக்கவும். பின் காசி செம்பிலே அதைவைத்து இழைத்துக் கண்ணுக்குப் போடவும்.

(வேறு)

| | |
|---|---|
| பசு நெய் | — 1.3 லி. (நாழி) |
| தாழைச்சாறு | — 1.3 லி. (நாழி) |
| ஈரவெங்காயச் சாறு | — 1.3 லி. (நாழி) |
| கோவைத்தண்டுச் சாறு[1] | — 1.3 லி. (நாழி) |

இவைகளைக்கலந்து, நீர் வற்றக்காய்ச்சிப், பதத்தில் எடுத்துக் கொள்ளவும்.

**அளவு:**

உள்ளங்கை

**உட்கொள்ளும்முறை:**

சீனி

**தீரும்பிணிகள்:**

கெட்ட சதை வளர்ச்சி

(வேறு)

| | |
|---|---|
| சவுக்காரம் | — 4.4 கி. (கழஞ்சு) |
| அஞ்சுப்பு | — 4.4 கி. (கழஞ்சு) |
| கோழிக்காரம் | — 4.4 கி. (கழஞ்சு) |

## 207. ஆடுதின்னாப் பாளை குழித்தைலம்

ஆடுதின்னாப் பாளை சமூலத்தை நிழலில் உலர்த்திப் பெரிய பானையிலடைக்கவும். பின் குழித்தைலம் எடுக்கவும்.

**உட்கொள்ளும்முறை:**

பொரி மாவில் 4.2. கி (வராகன்) விதம் கலந்து உட்கொள்ளவும்.

---

1. மூலத்தில் கோவைத்தண்டுச் சாறு மட்டுமே குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால் எண்ணிக்கை 5 எனபதால் கோவைச் சாறு என நுணுக்கமாக அறிய வேண்டி உள்ளது.

**தீரும்பிணிகள்:**

உள்மூலம், புறமூலம், சீழ்மூலம், அட்ட குன்மம், மேகம் 20 வகைகள், மேகவாயு, கண்ட மாலை, பக்க பவுத்திரம், ஆசனபவுத்திரம், குட்டம், சன்னி, விரைவாதம், தாரை வாதம் என்பன தீரும்.

**கால அளவு:**

20 நாட்கள்.

**குறிப்பு:**

உப்பு வறுத்துக் கூட்டவும்.

## 208. இரத்தக் கழிச்சல்தீர எண்ணெய்

நாவல்பட்டை
இலந்தைப் பட்டை
மாம்பட்டை
கருவேப்பிலைப்பட்டை
இண்டன்பட்டை

இவற்றை விளக்கெண்ணெயில் போட்டு எரித்து வடிகட்டி உட்கொள்ளவும்.

**நெய்**

அதிமதுரம்
நெய்தல் கிழங்கு மாவு

எடுத்துக் கொண்டு நெய்யில் கலந்து குடிக்கவும். கர்ப்ப மேல் வீக்கம், மேல் குடல் புரட்டு என்பனவும் தீரும்.

## 209. இருமல் தீர

மிளகு — (½ பலம்) 9 கிராம்

இதைப் பெண் மகவு உள்ளவளின் தாய்ப்பாலில் அரைத்து வில்லை செய்து பசு நெய்யில் போட்டுக் காய்ச்சிப் பதத்தில் எடுத்து உண்ணவும், 5 நாட்கள் உண்ணவும், கடுகு நெய்யும்

உண்ணவும் வெட்டையால் ஏற்பட்ட இருமல் தீரும். இதை ஆண்களுக்கு மட்டுமே பயன்படுத்தவும். பெண்களுக்கு, ஆண் பிள்ளை பெற்ற பெண்ணின் தாய்ப்பாலில் அரைத்துத் தரவும்.

## 210 இரத்த சீதம் நிற்க வெண்ணெய்

*மிளகு — 18 கி. (½ பலம்)*
*பசுவெண்ணெய் — மாங்காயளவு*

**செய்முறை:**

சட்டியில் காயவைத்து, மிளகாய் போட்டுக் கொண்டு கொட்டை பாக்களவு வெண்ணெய் தெரித்து வறுத்து அரைக்கவும். இப்படி 7 தடவை சுருக்குப் பண்ணவும். பின் வெல்லத்துடன் தர இரத்த சீதம் நிற்கும்.

## 211. உள்ளித் தைலம்[1]

தான் கழஞ்சு மிகுந்த செந்தூரம் பணவெடை கொள்
உள்ள கவிசை அதுவையுடன் உகந்தநீராணம் (நீர்முலை)
மெள்ள சத்திகுணமுடன் மிகுந்த குன்மம் எரி குன்மமுடன்
கொள்ள வியாதி தான் தீரும் குருதியன்ன சொல்வோமே

ஈரவெங்காயம் வெள்ளரிக்காய்
பிசைந்த தண்ணீர் முக்கழஞ்சப்பா
செந்தூரம் பணவெடை கொள்
பருத்த சதையுடன் நீரடைப்பான்
ஆரத்தீரும் கல்லடைப்பான்
அதுக்கு இந்த அனுபானம் தீரச் சொன்னோம்
லோகமென்று திருந்த
செந்தூரம் இதுவாமே.

---

1. இப்பாடல் செந்தூரம் பற்றிக் கூறுகின்றது. ஆயின் தலைப்பு உள்ளித் தைலம் என்பதாக உள்ளது.

## 212. கரப்பான் தீர எண்ணெய்

எருக்கிலை சமூலச் சாம்பல்
நெல்லிக்காய் கந்தகம்
அரிதாரம்

அரைத்துக் கொண்டு எண்ணெயில் (நாழிகை நேரம்) காய்ச்சவும். பின் நாழிகை சென்ற பின் புதுச்சட்டியில் நீர் விட்டு எண்ணெயை ஊற்றி நாள்தோறும் பூசிப்பயன் படுத்தவும்.

**தீரும்பிணிகள் :**

வாத கரப்பான்

### கரப்பான் தீர (வேறு) எண்ணெய்

கழுதைலத்தியை எடுத்து, (நாழி) விளக்கெண்ணெயுடன் கூட்டி, பூண்டு, வசம்பு (¼ படி) *300* மி, லி. சேர்த்துச்சூரிய புடம் வைக்கவும் இதை வடிகட்டி உள்ளுக்குத்தந்து, மேலுக்குப் பூசவும்.

### கரப்பான் தீர (வேறு)

| | | |
|---|---|---|
| பூவரசம்பட்டைச்சாறு | — | *350* கி. (*10* பலம்) |
| ஙசங்கதாரிப்பட்டைச்சாறு | — | 350 கி. (10 பலம்) |
| கண்டங்காலி | — | 350 கி (*10* பலம்) |
| நிலவாகை இலை | — | 350 கி. (*10* பலம்) |
| நீர் | — | *21.5* லிட் (தூணி). |
| விளக்கெண்ணெய் | — | படி |

இவற்றைக் கலந்து கொண்டு காய்ச்சி *1/8* பங்காகக் குறுக்கவும், ஆமணக்கெண்ணெய் *1. 3* லி (படி) வெள்ளாட்டுப் பால் *1.3* லி. (படி) மிளகு, கருஞ்சீரகம், கார்கோல் விதை, வசம்பு, பூண்டு, சதகுப்பை, வலம்புரிகாய், பரங்கிப்பட்டை *10.2* (*2* கழஞ்சு) எடுக்கவும். தாய்ப்பாலலிரைத்துக் கற்கமாக்கி, எண்ணெயில் கலந்து, மெழுகுபதமாய்க் காய்ச்சி, இறக்கி வடி கட்டவும், *1* கரண்டி வீதம் உட் கொள்ளவும்.

(வேறு)

நுணாப்பட்டையை அரைத்து விளாங்காயளவு எடுத்துக் கொள்ளவும் (அரை ஆழாக்கு) நல்லெண்ணெயில் போட்டுக் காய்ச்சி முறுகலாக வடிகட்டவும். கோழி இறகால் 3 நாட்கள் தடவப் பொறிந்து உதிரும்

(வேறு)

சரக்குகள்:

| | |
|---|---|
| மிளகு | — 8.4 கி (2 வராகன்) |
| பூண்டு | — 8.4 கி (2 வராகன்) |
| வெங்காயம் | — 18.5 கி (அரை பலம்) |
| நெருஞ்சில் | — 525 கி (15 பலம்) |
| முள்ளி | — 525 கி (15 பலம்) |
| பூவரசம்பூ சுட்ட சாம்பல் | — 1 படி |
| விளக்கெண்ணெய் | — 150 மி லி (அரைக்கால் படி) |

அனைத்தையும் ஆடு தின்னாப் பாளைச் சாற்றிலரைத்து விளக்கெண்ணெயில் கலந்து எரித்து பதத்தில் இறக்கவும். கோழி இறகால் காதில் தடவக் கரப்பான் தீரும். மேல் தடவவும்.

## 213 கழுத்து வலி தீர எண்ணெய்

| | |
|---|---|
| நல்லெண்ணெய் | — 1.3 லி. (படி) |
| கீழா நெல்லிச்சாறு | — 1.3 லி. (படி) |

கலந்து கொண்டு எரித்துப்பதத்தில் வடித்துக் கொண்டு குளிக்கவும். தைலம் பண்ணி நெய் தலைக்கு தேய்த்துக் கொண்டு மருக்காரை வேர்ப்பட்டை அரைத்துத் தேய்த்து மூழ்கவும்

வேறு)

| | |
|---|---|
| பூண்டு | — 35 கி. (பலம்) |
| காயம் | — 9 கி. (¼பலம்) |
| பளிங்கு சாம்பிராணி | — 9 கி, (¼ பலம்) |

உத்தாமணிச்சாறு
எருக்கம்பழுப்புச்சாறு
நல்லெண்ணெய் — 6.5 மிலி. (½ படி)
வாதநாராயண இலைச்சாறு 6.5 மிலி. (½ படி)
குங்குமப்பூ — 4 2 கி (வராகன்)
கலந்து கொண்டு எரித்து எடுத்துத் தைலம் செய்யவும்.

## 214. கக்குவான் தீர எண்ணெய்

விளக்கெண்ணெய்
வேப்பெண்ணெய்
இலுப்பெண்ணெய்
பெருங் கொன்றைப் பட்டை
} 300 மி. லி ( ¼ படி)
நல்லெண்ணெய்
வவ்வால் — ஒன்று

இவைகளைக் கலந்து கொண்டு காய்ச்சி எரித்து வடி கட்டவும். நாக்கில் தடவவும். 165 மி கி. (165 மி.கி (காசு) மூன்று நாட்கள் தடவ 7 நாட்களில் குணமாகும்.

## 215. கணம் தீர

சாதிக்காய்
சாதிப்பத்திரி
கிராம்பு
ஏலம்
வெந்தயம்
| 150 கி. (2½ வராகன்)
ஆத்திப்பூ — 3 5 கி. (வராகன்)

**செய்முறை:**

வறுத்துப் பொடி செய்யவும். துத்திவேர், துத்திவேர்ப் பட்டையைத் தட்டவும். 1,3 லி (நாழி) விளக்கெண்ணெயில் போட்டுக் கலந்து கொள்ளவும். சூரிய புடமிட்டு, பதத்தில் எடுத்து வடிகட்டி 1 கரண்டி தரவும்.

(வேறு)

**கணம் தீர:**

விளக்கெண்ணெய் — 1,3 லி. (படி)
கையான் சாறு — 1,3 லி. (படி)

| | |
|---|---|
| பொன்னாங்கண்ணிசாறு | — 450 மி.லி. (½ படி) |
| கோவைச்சாறு | — 450 மி.லி. (½ படி) |
| புளியாரைச்சாறு | — 450 மி.லி (½ படி) |
| கற்பூரவல்லிச்சாறு | — 450 மி.லி. (½ படி) |
| சாதிக்காய் | — |
| சாதிப்பத்திரி | |
| கற்கடகசிங்கி | |
| கோட்டம் | |
| அக்ரகாரம் | 4.4 கி (கழஞ்சு) |
| சீரகம் | |
| வெந்தயம் | |
| இலவங்கப்பத்திரி | |
| இலவங்கப்பட்டை | |
| பூண்டு | |

**செய்முறை:**

பசும்பாலிலரைத்து எண்ணெயில் கலந்து அடிப்பிலேற்றிக் காய்ச்சிப் பதத்தில் இறக்கவும், குங்குமப்பூ, சாதிக்காயைப் பொடி செய்து, எண்ணெயிலிடவும்

**அளவு:**

ஒரு கரண்டி விதம் உட்கொள்ளவும்

**பிணிகள்:**

வரக்கணம், கணைவீக்கம், விகர்ப்ப சூடு, கணசுரங்கள் கணைவெட்டை, வெளுப்பு

**(வேறு)**

விளக்கெண்ணெய் — 1.3 லி. (படி)

உசிலைப்பட்டை
அரக்கு
மஞ்சள்
பூண்டு
வேப்பங்காய்
குமட்டிக்காய்

**செய்முறை:**

குமட்டிக்காய் தவிர ஏனைய சரக்குகளை எண்ணெயில் கலந்து கொண்டு அடுப்பிலேற்றிச் சூடுபடுத்தவும். குமட்டிக்

காயை அறுத்துப் பாதியாக்கிக் கொண்டு போடவும். சிவப்பு நிறமானவுடன் பழம் என அறிந்து கொண்டு வடிகட்டவும்.

**அளவு:**

3 நாட்கள் ½ கரண்டி வீதம் உட்கொள்ளவும்.

**தீரும்பிணிகள்:**

மாந்தம், இசிவு, பேய்மாந்தம் என்பன

(வேறு)

தகரை விதை
உள்ளி
வசம்பு

இவைகளை நறுக்கி இடித்துப் பிழிந்து வடிகட்டிக் கொண்டு உட்கொண்டும் வெளியே துவாலை இடவும்.

## 216. புண் தீர எண்ணெய்

| | | | |
|---|---|---|---|
| துருசு | — | 3.5 கி | (வராகன்) |
| பால் துத்தம் | — | 3.5 கி | (வராகன்) |
| சாதிலிங்கம் | — | 3.5 கி | (வராகன்) |
| வசம்பு | — | 3.5 கி. | (வராகன்) |
| கருஞ்சீரகம் | — | 3.5 கி. | (வராகன்) |
| செந்தூரப்பட்டை | — | 3.5 கி | (வராகன்) |
| விளக்கெண்ணெய் | — | 650 மி.லி | (1½ படி) |
| ஆடுதின்னாப்பாளைச் சாறு | — | (650 மி.லி. | ½ படி) |
| புங்கன்பால் | — | (650 மி.லி. | (½ படி) |

**செய்முறை:**

சரக்குகளைப் பொடி செய்து விளக்கெண்ணெயிலிட்டுச் சாறுகளையும் கலக்கவும். பின் எரித்து எடுக்கவும்.

**பயன்:**

வெளித்தடவப் புண்கள் ஆறும். காய்ந்து சதை வளர்ந்த புண்கள் ஆறும்.

**குறிப்பு:**

விளக்கெண்ணெய்க்குப் பதிலாக தேங்காய் எண்ணெயைப் பயன் படுத்தலாம். துத்தம், சாதிலிங்கம் நீக்கியும் செய்யலாம்.

மூலத்தில் ''அந்த மருந்தில்லாமல்'' என குறிப்பிட்டது துத்தம். சாதிலிங்கமாகலாம்.

**மர்த்ததயிலம் (வேறு)**

மண்டையோட்டை நறுக்கிப் பானையிலிடவும். நீலிச்சாறு 2.6 லிட். (2 படி) விட்டு ஊறவிடவும். பின் குழிவெட்டிப் பானையை வைத்து, மேல்வாயைச் சீலைமண்ணால் மூடவும், கசபுடம் வைக்கவும். குழித்தைலம் இறங்கும்.

**தீரும்பிணிகள்:**

வெட்டுக் காயங்கள், விரணங்கள், சூலை வெடிப்புகள், பழம்புண் என்பன.

## 217. புழுவெட்டுத் தீர எண்ணெய்

பேய்ப்பீர்க்கன் விதையை ஒரு சிரங்கையளவு எடுத்துக் கொள்ளவும். வெள்ளைக் காக்கணவேர் 1 விரலளவு, வசம்பு ஒன்று. இவற்றை அரைத்து வேப்பெண்ணெயில் காய்ச்சி மாலையில் தடவி, உசிலைத் தழை தேய்த்துக் குளிக்கவும்.

**புழுவெட்டுத் தீர (வேறு)**

| | | |
|---|---|---|
| நல்லெண்ணெய் | — | 336 மி.லி. (உழக்கு) |
| கட்டுக்கொடி | — | 70 கி. (2 பலம்) |
| பூண்டு | — | 17.5 கி. (½ பலம்) |
| வசம்பு | — | 17.5 கி. (அரைப் பலம்) |

இவைகளை நறுக்கி சூரிய புடத்தில் வைத்து, எடுத்துக் கொள்ளவும். பூச, புழுவெட்டு தீரும் வண்டுகடி. இரணங்கள் கரப்பான், சிரங்கு என்பன மேல் தடவத் தீரும்.

## 218. பூவரசு தைலம்

பூவரசங்காயைக் கொண்டு வந்து மூடுதைலம்[1] இறக்கவும். பனங்கற்கண்டு போட்டு 3.5 கி (வராகன்) உட்கொள்ளத்தரவும் மேகம் 20 வகை, மேகவாயு, அக்னிமந்தம், நீர்க்கடுப்பு என்பன தீரும். வீரியவிருத்து இது.

---

1. இது குழித்தைலமாகலாம்.

**விலக்கு:**

புளி. புகை, பச்சைப்புலால்

## 219. பொன்னாங்காணித் தைலம்

| | |
|---|---|
| பொன்னாங்காணிச்சாறு | — 2.6 லி. (2 படி) |
| கரிசாலை | — 1.3 லி. (படி) |
| நெல்லிக்காய்ச் சாறு | — 1.3 லி. (படி) |
| பசும்பால் | — 2.6 லி. (2 படி) |
| நல்லெண்ணெய் | — 2.6 லி. (2 படி) |
| அதிமதுரம் | — |

**செய்முறை:**

அதிமதுரத்தைப் பாலிலரைத்துக் கொண்டு சாற்றுடன் கலக்கவும். அடுப்பிலேற்றி எரித்து மெழுகு பதத்திலிறக்கவும். குளிக்கவும்

**தீரும்பிணிகள்:**

கண்நோய், 96, காசபித்தம், வெப்பம்

## 220. மாந்தம் தீர எண்ணெய்

| | |
|---|---|
| நல்லெண்ணெய் | — 650 மி.லி. (அரைப்படி) |
| விழுதியிலை | — 375 மி லி. (கால் படி) |
| கருஞ்சீரகம் | — 336 கி. (உழக்கு) |
| உள்ளி | — 17.5 கி. (அரைப்பலம்) |
| வசம்பு | — 17.5 கி. (அரைப்பலம்) |

பொடி செய்து எண்ணெயில் போட்டுச் சாறு விட்டுக் காய்ச்சிப் பதத்தில் இறக்கவும்.

**அளவு:**

காலை, மாலை 1 கரண்டி வீதம் உட்கொள்ளவும்.

**பிணிகள்:**

மேலுக்கு துவாலையும், உட்கொள்ள மாந்தக் கழிச்சலும் தீரும்.

பொடிசெய்து, 336.மி.லி. (உழக்கு) பசு நெய்யில் வேசு வைத்து 5 நாட்கள் உட்கொள்ளவும்.

தேற்றான் வேர் பழம் சோற்றுடன் கலந்தரைத்துத் தொப்பிள் மேல் பூசி வரவும்.

**விலக்கு:**

உப்பு, புளி என்பன.

**(வேறு)**

| | | |
|---|---|---|
| நெருஞ்சிவேர்ப் பொடி | — | 336 மி.லி. (உழக்கு) |
| ஊசிக்காந்தம் | — | |

இவற்றை 2.6 லி. (2 நாழி) பசு நெய்யில் வேசு வைத்து உண்ணவும்.

**அளவு:**

உள்ளங்கை

## 221. கபால சூலை தீர எண்ணெய்

| | | |
|---|---|---|
| நல்லெண்ணெய் | — | 1.3.லி. (படி) |
| பழச்சாறு | — | 1.3 லி. (படி) |
| மிளகு | — | 1.3 லி. (படி) |
| கோரைக்கிழங்குத்தூள் | — | 1.3 லி. (படி) |

சட்டியிலிட்டு சூடு செய்து மிளகு பொரியும் போது வடிக் கட்டிக் கொள்ளவும். தலைக்குத் தேய்த்துக் குளிக்கவும். 3நாட்களுக்கு ஒருமுறை செய்யவும்.

**தீரும்பிணிகள்:**

கபாலசூலை, கபாலத்தில் குத்தல், கபாலரணங்கள், தலையிடிப்பு, பித்தம், வாயு காரணமாக உறக்கம் வராமலிருத்தல்

## 222. காமாலை தீர நெய்

| | | |
|---|---|---|
| கரிசாலைச்சாறு | — | 1.3 லிட் (படி) |
| மிளகு | — | 47.5 கி. (1½ பலம்) |
| பூண்டு | — | 47.5 கி. (1½ பலம்) |
| இலுப்பைக் கட்டி | — | 70 கி. ( 2 பலம்) |
| காட்டுமல்லிகை இலை | — | 1 பிடி |

கையான் சாற்றிலரைத்துக் கொண்டு பசுநெய் 1.3 லிட் (படி) கலந்து அடுப்பிலேற்றிக் காய்ச்சிப் பதத்தி லிறக்கவும் காலை, மாலை உண்ணவும்.

### (வேறு) நெய்

| | | |
|---|---|---|
| கடுக்காய் | — | 35 கி. (பலம்) |
| மூக்கரட்டைவேர் | — | 35 கி. ,, |
| சாரணைவேர் | — | 35 கி. ,, |
| கீழாநெல்லி வேர் | — | 35 கி. ,, |
| குழி மஞ்சள் நீர் | — | 5 3 லி (குறுணி) |
| எருமைப்பால் | — | 78.0 லி. (60 நாழி) |
| எருமை நெய் | — | 2.6 லி. (2 நாழி) |

கடைச் சரக்குகளை இடித்து நீரிலிட்டு 1/8 பங்காகவும் பின் சூரணத்தைப் பால், பசு நெய்யிலரைத்துக் கற்கமாக்கி அடுப்பிலேற்றிச் சூடு பண்ணவும். பதத்தில் எடுத்துண்ணவும்:

### (வேறு)

**சரக்குகள்:**

| | |
|---|---|
| பஞ்சதிரவியம்<br>பூசணிக்காய்ச்சாறு<br>தேற்றான் கொட்டை<br>சந்தனம் | வகைக்கு 2பலம் |

கலைமான் கொம்பு

நெய் நாழி

**செய்முறை :**

அரைத்து நாழி நெய்யைக் கலந்து வடித்து உள்ளுக்கும் மேலுக்கும் பூசவும். காமாலை தீரும்.

## 223. கீழாநெல்லித் தைலம்

**சரக்குகள் :**

| | | |
|---|---|---|
| கீழாநெல்லி | — | (தூக்கு) |
| தண்ணீர் | — | 21.5 லிட். (தூணி) |
| நல்லெண்ணெய் | — | 2.6 லிட். (2 படி) |
| பசும்பால் | — | 2.6 லிட். (2 படி) |
| சீரகம் | — | 3.5 கி (பலம்) |

**செய்முறை:**

கீழாநெல்லியை நீரிவிட்டுக் காய்ச்சி அரைக்கால் பங்காக மாற்றவும். சீரகத்தைப் பாலிலரைத்துப் பின் எண்ணெயுடன் கலந்து கொள்ளவும், மெழுகு பதம் வரும் வரை அடுப்பிலேற்றி எரிக்கவும். பின் பயன்படுத்தவும்.

**தீரும்பிணிகள்:**

பித்தவெட்டை, மயக்கம், வாயூறல், உட்காய்ச்சல், நடுக்கம் தீரும்.

**(வேறு)**

கீழாநெல்லி சமூலத்தை வெய்யிலில் உலர்த்தவும். பின் தூள் செய்து பானையில் கொட்டு. 10.4 லிட் (8 படி) நீரில் விட்டு கியாழமாக்கவும். 1.3 லிட்டர் அளவு எடுத்துக் கொள்ளவும்.

| | | |
|---|---|---|
| பசும்பால் | — | 1.3 லிட் (படி) |
| நல்லெண்ணெய் | — | 1.3 லிட் (படி) |
| சீரகம் | — | 35. கி (பலம்) |

சீரகத்தை பாலில் அரைத்து எண்ணெயில் கலந்து, கியாழத்துடன் சேர்க்கவும். பின் எரித்துப்பதத்தில் இறக்கவும்.

**தீரும்பிணிகள் :**

உட்சுரம், காமாலை, நடுக்கம், தலை சுற்றல், வெப்பம் கை கால் எரிச்சல், உழலை, மேகம், வாந்தி

## 224. குட்டம் தீர எண்ணெய்

**சரக்குகள் :**

| | | |
|---|---|---|
| இரசம் | — | 35 கி. (பலம்) |
| கந்தகம் | — | 190 கி. (6 பலம்) |
| வெங்காரம் | — | 43.8 கி. (பலம், 2 கழஞ்சு) |
| காந்தம் | — | 4.4 கி. (கழஞ்சு) |
| நல்லெண்ணெய் | — | 1.3 லி. (நாழி) |

**செய்முறை :**

கடைச்சரக்குகளைக் குழி அம்மியில் சிறு கீரை சாற்றில் அரைத்துக் கொண்டு நல்லெண்ணெயுடன் கலக்கவும். எரித்து பதத்தில் எடுக்கவும்.

**குறிப்பு :**

கிண்ணத்தில் தண்ணீர்விட்டு, எண்ணெயின் ஒரு துளியை விட்டுப் பார்க்க, மிதக்குமானால் சரியான பதமல்ல. உட்சென்றால் நல்ல பதம் என அறியவும்.

**பயன் :**

புண், விரணம் போக்க வெளித்தடவும். (துண்டு) உள்ளுக்கு தரவும். நாக்குப் பூச்சிக்கு எண்ணெயைப் பூசி வெய்யிலில் நிற்கவும்.

**வேறு**

**சரக்குகள் :**

| | | |
|---|---|---|
| நல்லெண்ணெய் | — | 650 மி.லி. (அரை படி) |
| நெய் | — | 650 மி.லி. (அரை படி) |
| பழச்சாறு | — | 650 மி.லி. (அரை படி) |
| தயிர் | — | 650 மி.லி. (அரை படி) |
| பூண்டுச்சாறு | — | 650 மி.லி. (அரை படி) |

**செய்முறை :**

அனைத்தையும் கலந்துகொண்டு பதத்தில் எரித்துக் கொள்ளவும். பின்னர் எடுத்து பூநாகம், புனுகு சேர்த்துக்

கொண்டு வடிக்கட்டவும். குளிக்கப் பயன்படுத்தவும். குட்டம் கரப்பன் என்பன தீரும்.

## 225 குண்டலாதித் தைலம்

சங்கன் வேர் — 1.3 லி (நாழி)
நல்லெண்ணெய் — 1.3 லி (நாழி)

பழம் பாசி
உள்ளி
செம்பு
விளக்கெண்ணெய்

விளக்கெண்ணெயில் பிசைந்து சூரியபுடம் வைத்து உள்ளுக்குத் தந்து மேலே பூசவும்.

### கணம் தீர (வேறு)

| | | |
|---|---|---|
| விளக்கெண்ணெய் | — | 450 மி.லி. (½ படி) |
| அவுரிவேர் | — | 35 கி. (பலம்) |
| பண்டன்வேர் | — | 35 கி. (பலம்) |
| வெங்காயச்சாறு | — | 250 மிலி (கால்படி) |
| சீரகம் | — | 3.5 கி. (வராகன்) |
| செண்பகப்பூ | — | 3.5 கி. (வராகன்) |

கடைச் சரக்குகளை இடித்து எண்ணெயிலிடவும். காய்ச்சிப் பதத்தில் எடுத்து வடிகட்டி, வேளைக்கு 1 கரண்டி வீதம் உட்கொள்ளவும். இச்சாபத்தியம்.

### இரத்த கணம் தீர நெய்

**சரக்குகள்:**

அதிமதுரம்
செங்கழுநீர்
கோட்டம்
நன்னாரிவேர்
சீரகம்
செண்பகப்பூ
தூதுவளைவேர்

**செய்முறை:**

பாலில் அரைத்து, நெய்யில் குழைத்துக் கொள்ளவும்.

**தீரும்பிணிகள்:**

இரத்தகணம்.

### சிதகணம் தீர நெய்

மணத்தக்காளி இலைவிழுது — கொட்டைப்பாக்கு அளவு

வெண்ணெய்

வெண்ணெயை உருக்கவும் உருகி வரும்போது கொட்டைப் பாக்களவு விழுதைப்போடவும். பதத்தில் இறக்கவும்.

**அளவு:**

துட்டெடை — பிள்ளைகளுக்கு

பாதியளவு — சிறு குழந்தைகளுக்குத் தரவும்.

### வீக்க கணம்தீர

### (வேறு)

உள்ளி
வசம்பு
ஓமம்
கோட்டம்
அதிமதுரம்
கிராம்பு
ஏலம்
சுக்கு
மிளகு } 3.5 கி (வராகன்)

\+ கூத்தன் குதம்பைவேர் 3.5 கி. (வராகன்)

பொடி செய்து கொள்ளவும். 168 மி,லி (ஆழாக்கு) விளக்கெண்ணெயில் போட்டுக் கலந்து கொண்டு சூரிய புடம்

---

\+ இன்ன தாவரம் என்பது விளங்கவில்லை.

இரண்டு சாமம் வைத்து வடிகட்டித்தரவும் 1 கரண்டி அளவு.

**தீரும்பிணிகள்:**

கணம், வீக்கம் தீரும். வன்மையறிந்து தரவும்.

**(வேறு)**

| | | |
|---|---|---|
| விளக்கெண்ணெய் | — | 1.3 லிட் (படி) |
| இளநீர் | — | .650 மி லி (அரைப் படி) |
| பசும்பால் | — | 2.6 லிட் (2 படி) |
| கற்றாழைச்சாறு | — | .650 மி.லி (அரைப் படி) |
| சீரகம் | | |
| மாசிக்காய் | | |
| கோட்டம் | | |
| அதிமதுரம் | | 8.75 கி. (¼ பலம்) |
| கிராம்பு | | |
| ஏலம் | | |
| சுக்கு | | |

வெந்தயம் — 18 கி (அரை பலம்)

கடைச் சரக்குகளை வறுத்திடித்து எண்ணெயில் கலந்து வடிகட்டவும்

## 226. வாதம் தீர நெய்

**சரக்குகள்:**

நெய் — 1 3 லிட் (படி)
நவச்சாரம் —

பொடி செய்து கொண்டு கலந்து சூரியபுடம் வைக்கவும்.

**தீரும்பிணிகள்:**

கைகால் முடக்கினது, குதத்தில் வலி எடுக்கும். நரம்பு முடங்கள் தீரும்.

**எண்ணெய் (வேறு)**

திருகு கள்ளிவேர்
வசம்பு
மிளகு
பூண்டு

இவைகளைக் கொதிக்க வைத்து எண்ணெயிலிட்டு உடலில் போட்டு நனைக்கவும்.

## எண்ணெய் (வேறு)

**அறிகுறி**

கைகால் சுருங்கி வலிக்கும்.

**சரக்குகள்:**

அவுரிவேர்
செங்கதாரிவேர்
வசம்பு
பூண்டு
நல்லெண்ணெய்
விளக்கெண்ணெய்

**செய்முறை:**

நறுக்கி, எண்ணெயுடன் கலந்து காய்ச்சி, உடலில் தடவவும்.

## வாதம் தீர (வேறு)

| | | |
|---|---|---|
| விளக்கெண்ணெய் | — | 650 மி.லி. (½ படி) |
| வெள்ளை வெங்காயம் | | |
| வெந்தயம் | | |
| சுக்கு | | |
| வசம்பு | | |
| பருத்திக்கொட்டைப்பருப்பு | — | 17.5 கி. (½ பலம்) |

இவைகளை எண்ணெயுடன் கலந்து கொண்டு எரிக்கவும் மெழுகு பதத்தில் வடித்துக் கொள்ளவும்.

**பயன் ;**

இடுப்புப் பிடிப்புக்குத்தைலத்தைப் போட்டு ஆமணக்கிலை. யை வாட்டிக்கட்டவும். 5 நாட்கள் செய்யவும்,

**விலக்கு :**

பாகல், கத்திரி, மோர், கொள் முதலியன,

## 227. விரணம் தீர எண்ணெய்

வறுத்த உப்பு
எருமைத்தயிர்
புங்கு பால் — 70 கி. (கால் சேர்)
தேங்காய் எண்ணெய் — 70 கி. (கால் சேர்)
கருஞ்சீரகம் — 4.4 கி. (1 அரை வராகன்
செம்பிராயட்டை — 4.4 கி. (ஒன்றரை வராகன்)
நீரடிமுத்து — 4.4 கி. ( ,, )

எரித்து வடிகட்டி, இரணத்தில் வெளித்தடவவும்

**சுடர்த்தைலம்**

**(வேறு)**

**சரக்குகள்:**

| | |
|---|---|
| கந்தகம் | — 7.0 கி (2 வராகன்) |
| கௌரிபாடாணம் | — 7.0 கி (2 வராகன்) |
| மனோ சிலை | — 7 0 கி (2 வராகன்) |

**செய்முறை:**

சுத்தி செய்யாமல் கல்வத்தில் பசுநெய்விட்டு அரைத்து மெல்லிய சீலையில் தடவித் திரித்து நெய்யில் தோய்த்துக் கொளுத்தவும். இது சுடர்த் தைலம் ஆகும். திரியின் மேல் சொட்டு சொட்டாக நெய் விட்டுக் கொண்டு வரவும் கீழே சட்டியில் திரட்டி, எடுத்துக் கொள்ளவும் மேல் (தடவி பண விடை) 488 மி கி வெற்றிலையில் வைத்து உட்கொள்ளவும்.

**தீரும்பிணிகள்:**

மேக இரணங்கள், கண்ட மாலை, இரணங்கள், கபால சூலை, பக்கப் பிளவை, சன்னக்கிரந்தி, கிரந்திப்புண், புண் என்பன. பூச்சிகள் இறந்துவிடும்.

---

**குறிப்பு:**

சுடர் தைலம் என்பதற்கு பதிலாக நெய் என்றே கொள்ளவும்.

## 228. விட முட்டித்தைலம்

**சரக்குகள் :**

| | |
|---|---|
| கருஞ்சீரகம் | — 70 கி. (2 பலம்) |
| பழச்சாறு | — 1.3 லி. (படி) |
| நல்லெண்ணெய் | — 1.3 லி. (படி) |
| சீரகம் | — 70 கி. (2 பலம்) |
| வசம்பு | — 52.5 கி. (1 அரை பலம்) |
| வெள்ளை வெங்காயம் பூண்டு | — 175 கி (5 பலம்) |

வசம்பை முதலிலும் பிறகு கருஞ்சீரகத்தையும் இறுதியாக பூண்டையும் நசுக்கிக் கொள்ளவும் பூண்டின் மேல் தோலை நீக்கவும்.

பிறகு எல்லாவற்றையும் கலந்து கொண்டு சூரியபுடம் வைக்கவும், நீர்வற்றியவுடன் எடுத்துக் கொள்ளவும்.

**பயன்**

வெளியில் துவாலை இட வாதங்கள், சன்னிகள் நீங்கும்.

## 229. பெருவயிறு, வெப்பம் தீர நெய்

| | |
|---|---|
| பூசணிக்காய்ச்சாறு | — 1.3 லி. (படி) |
| பசும்பால் | — 1.3 லி. (படி) |
| நெய் | — 1.3 லி. (படி) |
| அதிமதுரம் | — 35 கி. (பலம்) |
| சீரகம் | — 35 கி. (பலம்) |
| மிளகு | — 17.5 கி. (½ பலம்) |
| திப்பிலி | — 35 கி. (பலம்) |

இவைகளை அரைத்துக் கலந்து வடிகட்டி, காய்ச்சிப்பதத்தில் எடுத்து (2 காசெடை) உட்கொள்ளவும்.

**விலக்கு:**

புளி, புகையிலை நீக்கவும்.

## 230. பாண்டு தீர எண்ணெய்

| | | |
|---|---|---|
| வெள்ளாட்டுக் கோமியம் | — | 2.6 லிட்டர் (2 படி) |
| பசுகோமியம் | — | 2.6 லிட்டர் (2 படி) |
| தண்ணீர் | — | 2 6 லிட்டர் (2 படி) |
| பிடங்கநாரி | — | (தூக்கு) |
| கொழுக்கட்டை இலை | — | (தூக்கு) |
| கடுக்காய் | — | 15 எண்ணிக்கை |

முதல் 4 சரக்குகளையும் ஒன்றாகக் காய்ச்சவும். கடுக்காயைத்தட்டி விரை நீக்கியபின், கியாழத்துள் கலந்து குடிக்கவும். 5 நாட்கள் குடிக்கவும். பேதியாகும் நீர் இறங்கும்.

**உணவு :**

உப்பு கூடாது, வெந்நீர் சோறு.

**குறிப்பு :**

எண்ணெய் என்று தலைப்பில் கூறப்பட்டாலும் செய்முறையானது கியாழத்தை பற்றியே உள்ளது.

## 231. பிரமியம் தீர எண்ணெய்

**சரக்குகள் :**

| | | |
|---|---|---|
| கண்டங்கத்திரி | — | 2.6 லி. (2 படி) |
| கடுக்காய் | — | 6 எண்ணிக்கை |
| கருஞ்சீரகம் | — | 7.0 கி. (2 வராகன்) |
| கார்கோலரிசி | — | 10.5 கி. (3 வராகன்) |
| கஸ்தூரி மஞ்சள் | — | 3 எண்ணிக்கை |
| களிபாக்கு | — | 1 எண்ணிக்கை |
| விளக்கெண்ணெய் | — | 1.3 லி. (படி) |

**செய்முறை :**

கடைச் சரக்குகளைப் பொடி செய்து, எண்ணெயில் கலக்கவும். அடுப்பிலேற்றிக் கொண்டு எரித்து பதத்தில் வடிக்கவும்.

## 232. குளுத்தி எண்ணெய்

| | | |
|---|---|---|
| விளக்கெண்ணெய் | — | 2.6 லி. (2 படி) |
| வெங்காயச்சாறு | — | 1.3 லி. (படி) |
| கற்றாழைச்சாறு | — | 1.3 லி. (படி) |
| கோட்டம் | — | 70 கி. (2 பலம்) |
| அதிமதுரம் | — | 35 கி (பலம்) |
| சன்னலவங்கப்பட்டை | — | 9 கி. (கால் பலம்) |

**செய்முறை**

கடைச்சரக்குகளை வறுத்துப் பொடி செய்து எண்ணெயில் கலந்து எரித்துப் பதத்தில் எடுத்து இறக்கி வெந்தயம் 70 கி. (2 பலம்) சண்பகப்பூ 17.5 கி (அரை பலம்) ஏலம் 17.5 கி. (அரை பலம்) இவற்றை பொன் வறுவலாக வறுத்திடித்த பொடியைத் தூவி வடிகட்டவும்

**தீரும்பிணிகள்:**

உடல் எரிச்சல், மேகங்கள், சூடு.

## 233. பீனசம் தீர தைலம்

பன்றி நெய்யை தலைக்குத் தேய்ந்துக்கொண்டு மருக்காரை வேர்ப் பட்டையை அரைத்துத் தேய்த்து முழுகவும். 4 தடவை செய்யவும்.

### (வேறு) பீசைம் தீர சிற்றாமுட்டித் தைலம்

| | | |
|---|---|---|
| சிற்றாமுட்டி | — | 3500 கி. (100 பலம்) |
| தண்ணீர் | — | (16 மரக்கால்) |
| பால் | — | (6 மரக்கால்) |
| நல்லெண்ணெய் | — | 5.3 லி. (குறுணி) |
| சிற்றாமுட்டிவேர் | — | 350 கி. (10 பலம்) |

இவைகளை அரைத்து,க் கரைத்து எண்ணெயில் கலந்து எரித்துப் பதத்தில் எடுக்கவும். குளிக்கவும். இரத்த பித்தம் பீனசம் மாறும்.

### பீனசம் தீர எண்ணெய் (வேறு)

தேற்றான்கொட்டை பிஞ்சு — வ எடை

இதைப் பொடி செய்து பசுநெய்யில் போட்டுச் சூரிய புடத்தில் எடுக்கவும்.

**பயன்:**

நசியம்பண்ண, தலைநோவு, தலைபாரம், கழுத்து, இசிவு என்பன தீரும்.

### நசியம் (வேறு)

| | |
|---|---|
| அதிமதுரம் | — 35 கி. (பலம்) |
| சந்தனம் | — 35 கி. (பலம்) |
| பொன்னாங்காணி | — 70 கி. (2 பலம்) |
| எலுமிச்சைச்சாறு | — 1.3 லிட் (நாழி) |
| நல்லெண்ணெய் | — 1.3 லிட் (நாழி) |
| பசும்பால் | — 1 3 லிட் (நாழி) |

இவைகளைக் கலந்து கொண்டு காய்ச்சவும். பதத்தில் வடி கட்டவும். குளிக்க எல்லாவிதமான பீனசமும் தீரும்.

### (வேறு)

| | |
|---|---|
| தேங்காய்ப்பால் | — 1.3 லி. (நாழி) |
| தயிர் | — 1.3 லி. (நாழி) |
| கோமயம் | — 1.3 லி. (நாழி) |
| பழச்சாறு | — 1.3 லி. (நாழி) |
| கொடுப்பைச்சாறு | — 1.3 லி. (படி) |
| முசுமுசுக்கைச்சாறு | — 1.3 லிட். (படி) |
| மிளகு | — |
| தேன் | — |
| நல்லெண்ணெய் | — 5.2 லிட் (4 படி) |

மிளகை அமுரியிலரைத்துக் கொள்ளவும். ஏனைய சாறுகளைக் கலந்து கொண்டு, பானையில் வைக்கவும். பொடியைத் தூவி சூடு பண்ணவும். கற்கத்தில் அண்டச் சுண்ணம், தாமிர பற்பம் போட்டு 35 கி. (பலம்) கஸ்தூரி கூட்டி, எண்ணெயை

கற்கத்திலிட்டு கொதிக்க விட்டு பதத்தில் எடுத்து வடிகட்டிக் குளிக்கவும் பயன்படுத்தவும். குளிக்கவும் கோழியாவாரை இலை தும்பை, துளசி தவசு முருங்கை, வல்லாரை, பொடுதலை, வரப்பூ இலை, நல்வேளை, ஆடாதோடை சமஅளவு எடுத்து உப்பிலிவேர், பூதகரப்பன் பட்டை, வாத கரப்பன் பட்டை பெருங்கிழங்கு திருநீற்றுப்பச்சை வேர், கருவேப்பிலை 9 கி (கால் பலம்) சூரணம் செய்யவும். சாறுகளில் கலந்து 1.3 லிட். (படி) நல்லெண்ணெய் கூட்டி, தாய்ப்பால் 168 மி.லி· (ஆழாக்கு) விட்டுக்காய்ச்சி எடுத்துப் பதத்தில வைக்கவும்.

**அளவு:**

*1* கரண்டிவீதம் 5 நாட்கள் குடிக்கவும் பெரியவர்களுக்கு 8 நாட்கள் காலை, மாலை *2* கரண்டி வீதம் குடித்து பத்தியம் இருக்கவும்.

**பீசைம் தீர (வேறு)**

மிளகு ½ பலம். இதை தகரைச் சாற்றிலரைத்துத் தலைக்குத் தேய்த்து முழுகவும். நான்கு நாளைக்கு ஒருதரம் செய்யவும். இவ்விதம் 10 முறை குளிக்க எல்லாவிதமான பீனசமும் தீரும். ஒரே வகையான நீரில் குளிக்கவும்.

**நசியம் (வேறு)**

**சரக்குகள்:**

| | | |
|---|---|---|
| நல்லெண்ணெய் | — | ½ படி |
| மிளகு | | 1 வராகன் |
| பொன்முசுட்டைவேர் | — | 4 வராகன் |
| சுக்கு | — | 4 வராகன் |

**செய்முறை:**

மூன்று சரக்குகளையும் பொடி செய்து எண்ணெயில் போட்டு மெழுகுப் பதமாகக் காய்ச்சி இறக்கவும்.

**அளவு:**

நாசியில் மூன்று துளிகள் விடவும்.

## 234. தலைப்புற்றுத்தீர எண்ணெய்

| | | |
|---|---|---|
| நல்லெண்ணெய் | — | 1.3 லிட். (நாழி) |
| கோழிக்காரம் | — | நாரத்தை அளவு |
| குப்பைமேனி | — | நாரத்தை அளவு |

கலந்து கொண்டு மெழுகுபதத்தில் எடுத்துக் குளிக்கவும்.

## 235. தம்பனத்தைலம்

| | | |
|---|---|---|
| வெண்குன்றிமணி பருப்பு | — | 5.2 கி. (4 படி) |
| வெள்ளாட்டுப்பால் | — | சமஎடை |

கலந்து, சூரிய புடம் வைக்கவும். வற்றியவுடன் மீண்டும் பால் விடவும். 7 முறைசெய்யவும். பின் குடத்திலிட்டு குழித் தைலம் வைக்கவும்.

**அளவு :**

காசெடை

**உண்ணும்முறை :**

வெற்றிலையில் வைத்துண்ணவும். காலை, மாலை

**காலஅளவு :**

3 நாட்கள், கரு உண்டாகும்.

**விலக்கு :**

புலால், புளிப்பு, என்பன.

**குறிப்பு :**

தம்பனம் என தலைப்பிடப்பட்டது. ஆனால் பெண்களுக்கான தைலமுறையாக கரு உண்டாகும். என கூறப்பட்டுள்ளது கரு உண்டாக்கும்.எனகூறுவதற்குப் பதிலாகப் பிழையாக கூறப் பட்டது.போலும்

### தம்பனத் தைலம் (வேறு)

**செய்முறை:**

ஊமத்தை விரை எடுத்து உலர்த்தி, குடத்திலிட்டு குழித் தைலம் எடுக்கவும். கழிப்பாக்கு அல்லது கொட்டைப்பாக்கு

எடுத்துச் சீவி, தைலத்தில் போட்டு வறுத்து எடுத்துக் கொள்ளவும், வெற்றிலையில் வைத்து சுண்ணாம்பு தடவி போட்டுக் கொள்ளவும். சாற்றை விழுங்கவும். ஒருசாமம் சென்று பால் சோறு உண்டு, பெண்ணுடன் சேரவும்.

**பலன்:**

சுக்கிலம் வெளியேறாது. தண்டும்வாடாது. சுக்கிலம்வெளியேற எலுமிச்சைப்பழம் தின்னவும்.

**குறிப்பு:**

ஊமத்தையானது மனதை மயக்கும் பொருள். விழிப்புடன் இதைக் கையாளுவது நன்று.

## 236. கணம்தீரதாய்ப்பால் எண்ணெய்

| | | |
|---|---|---|
| தாய்ப்பால் | — | 650 மி.லி. (1/8 படி) |
| அரசம்பட்டை | | |
| விழுதியிலை | — | எலுமிச்சையளவு |
| கருங்கற்றாழை | | |
| செம்முள்ளி | — | 162.5 மி.லி. (1/8 படி) |
| சீரகம் | — | 7.0 கி. (2 வராகன்) |
| கடுக்காய் | — | 3 எண்ணிக்கை |
| வெங்காயச்சாறு | — | 162.5 மி.லி. (1/8 படி) |
| விளக்கெண்ணெய் | — | 650 மி.லி. (½ படி) |

**செய்முறை :**

சூரணம் செய்து எண்ணெயில் கலந்து கொண்டு, எரித்து பதத்தில் எடுக்கவும் உள்ளுக்கும். வெளித்தடவவும். பயன்படும்

5 நாட்கள் தொடர்ந்து பயன்படுத்தவும்.

## 237. தீப்புண் தீர எண்ணெய்

சிலை சுட்ட சாம்பலை எடுத்து நல்லெண்ணெயில் போட்டுக் காய்ச்சி ஆறினபின் புண்மேல் போடவும்.

## 238. தொண்டைத்தாருக்கு நெய்

தேற்றான் பழத்தோல் — 4.4 கி. (கழற்சி)

அரைத்து வெண்ணெயில் சேர்த்து, சூடுபண்ணி எடுத்துக் குடிக்கவும்.

## 239. சன்னி தீர தைலம்

| | |
|---|---|
| பூண்டுத் தைலம்<br>இஞ்சிச்சாறு<br>தேன் | } துட்டெடை |

திரிகடுகு — 4.4 கி. (வராகன்)

சேர்த்து உட்கொள்ளவும்.

### சுகசன்னி தீர (வேறு)

சுக சன்னிக்குக் கொட்டைப் பாக்கைச் சீவி வெற்றிலையில் சுண்ணாம்பு தடவி எருக்கன் வேர்ப்பட்டையை உரித்து நெருப்புக் குப்பியில் வைக்கவும். பால் வற்றவும் வெற்றிலையில் வைத்துத் தரவும்.

**குறிப்பு:**

கவனமுடன் செய்யாவிடில் பக்க விளைவுகள், எதிர் விளைவுகள் உண்டாகும்.

### (வேறு)

30 முட்டைகளை அவித்து மஞ்சட் கருவை எடுத்து சட்டியிலிட்டு எரிக்கவும்.

| | | |
|---|---|---|
| வசம்பு | — | 35 கி. (பலம்) |
| சன்னிநாயகம் | — | 17.5 கி. (அரை பலம்) |
| பூண்டு | — | 35 கி. (பலம்) |

அரைத்துச் சட்டியில் போட்டு பதத்தில் எடுக்கவும் வடிகட்டிப் பயன்படுத்தவும்.

**பயன்:**

நாக்கு, பல், கால்மடக்கு என்ற உறுப்புகளில் தடவவும் உள்ளுக்குக் காசெடை தரவும்.

### பிரவாத சன்னிதீர (வேறு)

| | | |
|---|---|---|
| ஆளிப்பட்டை | — | 35. கி (1 பலம்) |
| பரங்கிப்பட்டை | — | 35 கி. (1 பலம்) |
| கஸ்தூரிமஞ்சள் | — | 35 கி. (1 பலம்) |
| கிச்சிலிக்கிழங்கு | — | 35 கி. (1 பலம்) |
| கொம்பரக்கு | — | 35 கி. (1 பலம்) |
| பளிங்குசாம்பிராணி | — | 35 கி. (1 பலம்) |
| சுக்கு | — | 35 கி. (1 பலம்) |
| பச்சைக் கற்பூரம் | — | 35 கி. (1 பலம்) |
| பெருமரப்பட்டை | — | 35 கி. (1 பலம்) |

**குறிப்பு:**

செய்முறை கூறப்படவில்லை. குறையாக உள்ளது

### சன்னி 18ம் தீர (அண்டத் தைலம்)

**சரக்குகள் :**

| | | |
|---|---|---|
| முட்டை | — | 30 எண் |
| வசம்பு | — | 1 பலம் |
| சன்னிநாயகம் | — | ½ பலம் |
| பூண்டு | — | 1 பலம் |

**செய்முறை :**

கடைச் சரக்குகளைப் பொடித்துக்கொள்ளவும். முட்டையின் மஞ்சள் கருவுடன் சேர்த்து அரைத்து அடுப்பிலேற்றிக் காய்ச்சிப் பதத்தில் எடுக்கவும்.

**பயன் :**

நாக்கு, பல்லில் தடவி, காசெடை உள்ளுக்குத்தரவும். 18 சன்னிகளும திரும்.

## 240. சந்தனாதித் தைலம்

அதிமதுரம்
அகில்

நாகப்பூ
முத்தக்காசு
சுரபுன்னைப்பூ
நெய்க்காது
திப்பிலிமூலம்
பச்சிலை
சுச்சோலம்
செல்லியம்
அரத்தை
பேரீச்சம்பழம்
கஸ்தூரி
கற்பூரம்

| | | |
|---|---|---|
| கடுகு ரோகணி<br>சாதிக்காய்<br>இஞ்சி | } | 3.5 கி. (வராகன்) |
| நல்லெண்ணெய் | — | 1.3 லி. (நாழி) |

அடுப்பிலேற்றி எரித்துப் பதத்தில் எடுத்து, வடிகட்டவும்.

**பயன்:**

குளிக்க, தலைவலி தீரும்.

## 241. சம்பீரத் தைலம்

| | | |
|---|---|---|
| எலுமிச்சை பழச்சாறு<br>அவுரிச்சாறு<br>புளியிலைச்சாறு<br>கீழாயிலைச்சாறு<br>சங்கன் பழச்சாறு | | சம எடை |
| நல்லெண்ணெய் | — | சாறுகளின் எடைக்குச் சம எடை |
| அதிமதுரம்<br>கோட்டம்<br>சாதிக்காய<br>கோரைக்கிழங்கு<br>தக்கோலம்<br>கடுக்காய்<br>நெல்லிமுள்ளி<br>தன்றிக்காய் | | 35 கி. (பலம்) |

| | | |
|---|---|---|
| சந்தனம் | | |
| குங்குமப்பூ | | 35கி. (பலம்) |
| புனுகு | | |

கடைச்சரக்குகளை 1. 3 லிட்டருக்கு வீதம் (நாழி) சேர்க்கவும். சூரணித்துக் கொண்டு எண்ணெயில் கலந்து காய்ச்சி, பதத்தில் வடிக்கட்டவும்,

**பயன்:**

குளிக்க, தலைமயிர் உதிர்தல், தலைவலி உடல் நாற்றம் தீரும்.

## 242. கண் சதைவளர்ச்சி தீர வெண்ணெய்

தேற்றான் கொட்டையை சுட்டு வெண்ணெயில் போட்டு குப்புறக் கவிழ்த்து, வெண்ணெயை எடுக்கவும். வெற்றிலையில் வைத்து, தண்ணீர் பானையில் போட்டு, மூன்று நாட்கள் சென்றபின் எடுக்கவும். கண்ணில் பூச கெட்டசதை வளர்ச்சி, பூப்பட்டது தீரும்.

## 243. சயம் தீரத்தைலம்

| | | |
|---|---|---|
| தேங்காய்ப் பால் | — | 1.3 லி. (நாழி) |
| தயிர் | — | 1.3 லி. |
| கோமயம் | — | 1.3 லி. |
| பழச்சாறு | — | 1.3 லி. |
| கொடுப்பைச்சாறு | — | 1.3 லி. (நாழி) |
| முசுமுசுக்கைச்சாறு | — | 1.3 லி. |
| மிளகு | — | 1.3 லி. |
| தேன் | — | 1.3 லி. |
| நல்லெண்ணெய் | — | 5.2 லி. (4 படி) |

மிளகை அமிரியிலரைத்துக் கொள்ளவும். பின் ஏனைய சாறுகளைக் கலந்து கொள்ளவும். பானையிலிட்டு, மிளகு, பொடியைத் தூவி எரிக்கவும். அண்ட சுன்னம் தாமிரபற்பம் கஸ்தூரி 35.(பலம்) போட்டுப் பதத்தில் எடுத்துவடிக் கட்டவும்.

**பயன் :**

குளிக்க, சயம் தீரும்.

**சயம் தீர (வேறு)**

| | | |
|---|---|---|
| நல்லெண்ணெய் | — | 4 படி |
| மிளகு | — | 1 படி |
| ஏலம் | — | ½ படி |

**செய்முறை:**

ஏலம், மிளகை அரைத்துப் பொட்டணம் கட்டி முப்பு சேர்த்து எண்ணெயிலிட்டுச் சூரிய புடம் வைக்கவும். பின் பொட்டணத்தை எடுத்து எண்ணெயை எடுத்துக் குளிக்கவும். சீயக்காய் தேய்த்துக் கொள்ளவும்.

**தீரும்பிணிகள்:**

வாயு, வெப்பம், கால்மேல் அசதி, வாயு, தலையில்நீர் பித்தநீர், மேகம், மேகத்தால் எழுந்த குற்றங்கள் பித்தவாயு தாகம், வாதம், அசதி, பீனசங்கள் பலநோய்கள் தீரும்.

## 244. சிரங்கு தீர

**சரக்குகள்:**

| | | |
|---|---|---|
| சிற்றாமணக்குநெய் | — | 1.3 லிட். (படி) |
| வசம்பு | — | 650 மிலி. (½ படி) |
| ஒருதலைவெண்பூண்டு | — | 17.5 கி. (½ பலம்) |
| அவுரியிலை | — | (4 பலம்) 140 கி. |
| குப்பைமேனி | — | 35 கி. (பலம்) |
| கோரோசனம் | — | 6 கி. (½ ரூ எடை) |

வசம்பைச் சுத்திசெய்து கொள்ளவும். அனைத்தையும் அம்மியில் 1 சாமம் அரைக்கவும் சிறுவடையாக தட்டிக் கொண்டு எண்ணெயுடன் கலந்து வேடுகட்டி 15 நாட்கள்சூரிய புடம் வைக்கவும். பின் வடிக்கட்டவும். எண்ணெயின் நிறம் நீலமாய் இருக்கும், பின் கோரோசனையைப் பொடி செய்து எண்ணெயில் போட்டுக் கலக்கவும்.

**அளவு:**

1 கரண்டி உட்கொள்ள

**உணவு:**

கடும்பத்தியம் 7 நாட்களுக்கு உப்பு வறுத்து 3 நாட்களுக்குப் போடவும். 11-ஆம் நாள் தலைக்குக் குளிக்கவும்.

**தீரும்பிணிகள்:**

மேகக் கிரந்தி, சொறி சிரங்கு, மேக சூலை கடிகள்.

**(வேறு)**

எருக்குப்பால் — 1 சிரங்கை

பேய்ப்பீர்க்கன் சாறு — சிரங்கை

விளக்கெண்ணெய் — சிரங்கை

மூன்றையும் ஒன்றாக்கி

சூரிய புடம் வைக்கவும். வெளித் தடவவும். இலுப்பைப் பிண்ணாக்கைத் தேய்த்துக் குளிக்கவும்.

## சிரங்கு தீர எண்ணெய்

**சரக்குகள்:**

நல்லெண்ணெய்
நெய்
பழச்சாறு
தயிர்
பூண்டுச்சாறு



வகைக்கு ½ படி

**செய்முறை:**

காய்ச்சி எடுத்து புனுகு, பூகம்[1] சேர்க்கவும்.

**தீரும்பிணிகள்:**

கரப்பான், குட்டம் முதலியன குளிக்கவும்.

---

1. இன்னதென்று தெரியவில்லை.

**சிரங்கு தீர எண்ணெய்**

**சரக்குகள் :**

| | | |
|---|---|---|
| தேங்காய்ப்பால் | — | 1 படி |
| துருசு | — | 2 கழஞ்சு |
| அரிதாரம் | — | 2 கழஞ்சு |

**செய்முறை :**

பாலில் சரக்குகளை அரைத்துக் கலக்கவும். எரித்து பதத்தில் இறக்கவும்.

**பயன் :**

மாலையில் தடவிக் குளிக்கவும், அரப்புப் போடவும்.

**தீரும்பிணிகள் :**

சிரங்கு, பரங்கிப்புனல், குட்டம் மேல் பத்து வெள்ளை வண்டு கடிகள் தீரும்.

**உணவு :**

மோர் சோறு

**அளவு :**

காசு எடை உள்ளுக்கு.

## 245. தேள் கடி தீர எண்ணெய்

பூண்டுத் தைலத்தை கடிவாயில் தடவ கொட்டுவாய் எரிச்சல் நிற்கும்.

**குறிப்பு:**

வெள்ளை வெங்காயத் தைலம் என்று மூலத்தில் உள்ளது.

## 246. சீழ் தீர எண்ணெய்

காஞ்சிரப்பட்டைவேர்
ஊமத்தைக்காய்
பசு வெண்ணெய் }

காய்ச்சி எடுத்து, ஆறியபின் காதில் விட்டு தலையில் தேய்த்துக் கொள்ளவும்.

## 247. சுக்கு நெய்

சுண்ணாம்புக் கலயத்தில் சுக்கைப் போட்டு சுக்கின் மேல் சுண்ணாம்புக் கல்லைப்போடவும். தண்ணீர்விட, சுக்குவேகும் மேல் தோல் நீக்கிப் பொடி செய்யவும் சட்டியைக் காய வைத்து, தேன் விட்டு சுக்குப் பொடியைப் போட்டுக் கிண்டவும்

சுண்டையளவு உண்ணவும் கருப்புக்கழிச்சல் தீரும்.

| | | |
|---|---|---|
| மிளகு | — | 4.4 கி. (கழஞ்சு) |
| அழிஞ்சி விதை | — | 4 4 கி. (கழஞ்சு) |
| கோட்டம் | — | 4.4 கி. (கழஞ்சு) |

**செய்முறை :**

இவைகளை அரைத்து, நல்லெண்ணெயில் கலந்து, எரிக்கவும். பதத்தில் எடுக்கவும்.

**பயன் :**

7 நாட்கள் தாணிய பாகம் பண்ணி தேய்த்துக்குளிக்கவும்.

**தீரும்பிணிகள் :**

தலைமயிர் உதிர்தல், பொடுகு, செம்பட்டை, புழுவெட்டு, கடி விடம் என்பன.

## 248 குன்மம் தீர நெய்

| | | |
|---|---|---|
| அகத்தி நெய் | — | 672 மி.லி. (உரி) |
| அகத்தி இலைச் சாறு | — | 672 மி.லி. (உரி) |
| பசுநெய் | — | 168 மி.லி. (ஆழாக்கு) |

கலந்து கொண்டு அடுப்பிலேற்றிக் காய்ச்சவும். கடுகு திரண்டு வரும்போது இறக்கி, வடிக்கட்டவும்.

**அளவு :**

காலை 3.5 கி. (வராகன்) கடுகு தின்று, 1 கரண்டி நெய் எட்டு நாட்களுக்கு குடிக்கவும். ½ நாழிகை சென்ற பின் வெந்நீர் குடிக்கவும்.

உணவு :

பகலில் பழஞ்சோறு, மோர்

## 249. குளிப்புத் தைலம்

| | | |
|---|---|---|
| நல்லெண்ணெய் | — | 336 மி.லி. (உழக்கு) |
| தாய்ப்பால் | — | 336 மி.லி. (உழக்கு) |
| கம்மாறு வெற்றிலைச்சாறு | — | 336 மி.லி. (உழக்கு) |
| மிளகு | — | 18 கி. (அரை பலம்) |
| தான்றிக்காய்த்தோல் | — | 18. கி. (அரை பலம்) |
| கடுக்காய் தோல் | — | 18. கி. (அரை பலம்) |
| மஞ்சள் | — | 3.5 கி. (வராகன்) |
| அபின் | — | 3.5 கி. வராகன்) |

செய்முறை:

இவைகளை அரைத்து எண்ணெயில் கலந்து களரத்தும் காய்ச்சவும். மெழுகு யதத்தில் எடுக்கவும். வடிகட்டிக் கொண்டு அபினைப் போட்டு, மூடி, நெல் புடம் வைத்து எடுக்கவும்.

பயன்:

3 நாட்களுக்கு ஒரு முறை குளிக்கவும். கண்நோய்கள் தீரும்.

## 250. குங்குமப்பூ தைலம்

சரக்குகள்:

| | | |
|---|---|---|
| குங்குமப்பூ | — | |
| கோரோசனை | — | |
| உத்தாமணக் கெண்ணை | — | 650 மி.லி. (¾படி) |
| வெங்காயச்சாறு | — | 325 மி.லி. (¼படி) |

இவற்றைக் கலந்து கொண்டு பதமாகக் காய்ச்சி வடிக் கட்டவும். 1 கரண்டி வீதம் உட்கொள்ளவும். மேல் தடவிக் குளிக்கவும்.

**தீரும்பிணிகள்:**

குண்டி அட்சரம், மஞ்சட்காமாலை, சுரங்கள், என்புருக்கி உட்காய்ச்சல், கணாங்கள்.

| | | |
|---|---|---|
| பிரப்பங் கிழங்கு | — | 175 கி. (5 பலம்) |
| பசும்பால் | — | 210 கி. (6 பலம்) |
| சேங்கொட்டை | — | 175 கி. (5 பலம்) |
| கருப்பட்டி | — | 350 கி. (10 பலம்) |
| நெய் | — | 1.950 மிலி. (1½ படி) |
| எள் | — | 1.3 கி. (படி) |

**சுத்தி:**

சேங்கொட்டையை சாணிப்பாலில் 60 நாழிகை ஊற வைத்து மறுபடி எடுத்து, மூக்கை வெட்டி பசுவின் சாணியில் போட்டுக் கழுவி (நான்குபடி) 5.2 லிட்டர் பசும்பாலில் போட்டு 3 படியாகும்படி காய்ச்சி எடுத்துக் கொள்ளவும்.

**செய்முறை:**

இதையும் எள் பொடியையும் காய்ந்த பாலில் போட்டு, கருப்பட்டி சூரணப்பொடிகளைச் சேர்க்கவும். நாழி நேரம் சென்ற பின் நீர் சுண்டிய பின் நெய்விட்டு கிளறிப் பதத்தில் இறக்கி வைக்கவும்.

**கால அளவு:**

2 வேளை

**தீரும்பிணிகள்:**

7 வகை கிரந்தி, 18 வகை குட்டங்கள், வண்டு கடி என்பன.

**உணவு:**

பால், நெய், பாசிப்பயிறு, வர்ணப்பருப்பு, வெள்ளாட்டுப் பால், முருங்கைக்காய், கீரை முதலியன உண்ணலாம்.

## மாந்த எண்ணெய் (வேறு)

**சரக்குகள்:**

| | | |
|---|---|---|
| விளக்கெண்ணெய் | — | 1.3 லிட். (படி) |
| பூண்டு | — | |
| உசிலைப் பட்டை | — | |
| அருகன் புல் | — | |
| மஞ்சள் | — | |
| வெள்ளரண்டுச்சாறு | — | 1.3 லிட் (படி) |

அரைத்துக் கற்கமாக்கி எண்ணெயில் கலந்து கொள்ளவும் பேய்க் குமட்டிக்காய் 1ஐ நறுக்கிப் போட்டு எரித்துப் பத்திதில் எடுக்கவும் மாந்தம் தீரும்.

### மாந்தம் தீர

### (வேறு)

விளக்கெண்ணெயைக் கொதிக்க வைத்து ஈரவெங்காயம் நறுக்கிப் போட்டு முறுகலாக வரும்போது மணலின் பதடி போட்டுக் கொடுத்து இறக்கி உள்ளுக்குத் தரவும். வயிறுவிடும். வெப்பந்தரிக்க தண்ணீர் விட்டான் கிழங்குச் சாறு விட்டு, நெய்யில் காய்ச்சித் தரவும்.

### (வேறு)

| | | |
|---|---|---|
| ஓமம் | — | 17.5 கி. (½ பலம்) |
| சாதிக்காய் | — | 35 கி. (பலம்) |
| விளக்கெண்ணெய் | — | 1.3 லி. (படி) |

இடித்து விளக்கெண்ணெயிலிட்டுக் காய்ச்சிப் பதத்தில் வடிகட்டிக் கொள்ளவும்.

**அளவு :**

| | | |
|---|---|---|
| சிறுவர்களுக்கு | — | 1 கரண்டி |
| பெரியவர்களுக்கு | — | 2 கரண்டி |

5 ம் நாள், 7ம் நாள் குணமாகும். எல்லா மாந்தமும், கருங்கிரந்தி, அட்சரமும் தீரும்.

1. இன்னதென்று விளங்கவில்லை.

## 251. பேதி எண்ணெய்

| | | |
|---|---|---|
| விளக்கெண்ணெய் | — | 1.3 லிட். (படி) |
| சேங்கொட்டை | — | 4 எண் |
| கருஞ்சீரகம் | — | 17.5 கி. (அரை பலம்) |
| மஞ்சட்கொம்பு | — | 1 |

கருஞ்சீரகத்தை அரைத்து எண்ணெயில் கலந்து கொள்ளவும். சேங்கொட்டை மூக்கை வெட்டி பின் கொட்டையை இரண்டாய்ப் பிளந்து கொள்ளவும். எண்ணெயில் போட்டு சூடு பண்ணவும். கொட்டை மிதந்து வரும்போது கொட்டையை கிளிஞ்சல் ஓட்டால் முடுக்கி, ஓடுவது போலிருந்தால் ஓடாமல் செய்யவும். பதத்தில் எடுத்து வடிக்கட்டவும்.

**அளவு:**

தாய் குழந்தைகளுக்கு சிறு கரண்டி வீதம் தரவும் 6 நாட்கள். மேகப்புண்கள் தீர 10 நாட்கள் தரவும்

**தீரும்பிணிகள்:**

மேகப்பிணிகள்

**விலக்கு:**

இச்சாபத்தியம் கரப்பான், முதல் மற்ற இரணங்களுக்கு.

## 252. மூலம் தீர எண்ணெய்

| | | |
|---|---|---|
| விளக்கெண்ணெய் | — | 1.3 லி. (படி) |
| முடக்கொத்தான் சாறு | — | 325 மி.லி. (¼ படி) |
| வயது வந்த நாயுருவி இலைச்சாறு | — | 162. 5 (1/8 படி) |
| ஈரவெங்காயச் சாறு | — | 650 மிலி. (½ படி) |

**செய்முறை:**

கலந்து கொண்டு அடுப்பிலேற்றி சூடு பண்ணவும். வெங்காயத்தின் நீர் வற்றிய பிறகு பதத்திலிறக்கிக்கொள்ளவும்.

**கால அளவு:**

3 நாள், 5 நாள் உள்ளுக்குக் குடிக்கவும்.

**அளவு:**

2 பெரிய கரண்டி.

**உணவு:**

வெந்நீர்சோறு.

**(வேறு)**

| | | |
|---|---|---|
| நல்லெண்ணெய் | — | 336 மிலி. (உழக்கு) |
| கொடிவேலி வேர் | — | 8.8 கி. (2 கழஞ்சு) |
| பூண்டு | — | 8.8 கி. (2 கழஞ்சு) |
| வசம்பு | — | 8.8 கி. (2 கழஞ்சு) |

பசும்பால் வார்த்தரைத்து கலந்து கொள்ளவும். கரைத்துக் காய்ச்சி பதத்தில் வரும்போது கம்பிபிசின் உளுந்தெடை பொடி செய்து போட்டு இறக்கி வைக்கவும். கரைத்து மூல கிரணத்தில் தடவவும். கிரணம் ஊதின வீக்கம், தலை வீக்கம் வற்றி உலர்ந்து போகும்.

**(வேறு)**

| | | |
|---|---|---|
| பசு நெய் | — | 1008 கி. (3 ஆழாக்கு) |
| பழைய ஈரவெங்காயச்சாறு | — | 336 கி. (ஆழாக்கு) |
| முருங்கைப்பட்டைச்சாறு | — | 336 கி. |

சட்டியிலிட்டுக் காய்ச்சவும் சீரகம் 17.5 கி. (½ பலம்) பொடி செய்து காயும் நெய்யில் போடவும். பதத்தில் இறக்கிக் கொள்ளவும்.

**அளவு:**

இருவேளை, 1 கரண்டி வீதம்.

**விலக்கு:**

புளி, உப்பு புகையிலை கூடாது.

விளக்கெண்ணெய் — 325 மிலி. (½ படி)

| | |
|---|---|
| பூண்டு | 1 பிடி |
| வசம்பு | |
| விழுதிலை | |
| சிறுபுள்ளடி | |
| மிளகு | |

சட்டியில் பொன்னிறமாக வறுத்து நறுக்கிய மருந்தைப் போட்டு மெழுகு பதத்தில் எடுத்து வடிகட்டவும். 3 வேளை தர குதம் உள்ளே செல்லும்.

## மூலம் தீர வேறு

| | |
|---|---|
| நாயுருவி | — 3.5 கி. கி. (துலாம்) |
| பசுநெய் | — 1.3 லிட் (நாழி) |
| அதிமதுரம் | — 13.2 கி (3 கழஞ்சு) |
| கடுகுரோகணி | — 13 2 கி. (3 கழஞ்சு) |
| இலுப்பைப்பூ | — 13.2 கி (3 கழஞ்சு) |
| செங்கழுநீர் | — 13.2 கி. (3 கழஞ்சு) |
| கோட்டம் | — 13.2 கி. (3 கழஞ்சு) |
| சதகுப்பை | — 13.2 கி. (3 கழஞ்சு) |
| பச்சோலம் | — 13 2 கி. (3 கழஞ்சு) |
| சிறுதேக்கு | — 13.2 கி. (3 கழஞ்சு) |
| வாய்விளங்கம் | — 13 2 கி. (3 கழஞ்சு) |
| சுக்கு | — 13.2 கி. (3 கழஞ்சு) |
| திப்பிலி | — 13 2 கி. (3 கழஞ்சு) |
| திப்பிலிமூலம் | — 13.2 கி. (3 கழஞ்சு) |

**செய்முறை:**

கடைச் சரக்குகளைப் பொடிசெய்து நாயுருவியை கத்தரித்துக் கொள்ளவும் 10.30 லிட் தண்ணீர் (10 படி) விட்டு 2.6 லிட்டர் (2 நாழி) குறுக்கவும் சூரணத்தைப் பசும்பாலி லரைத்துக் கொள்ளவும். நெய்யில் கரைத்து சூடு செய்து மெழுகுபதத்தில் வடி கட்டிக்கொள்ளவும்.

**அளவு:**

3 காசெடையும் குடித்து வெந்நீர் அருந்தவும்

**விலக்கு:**

கசப்பு, புளிப்பு உணவுகள்

**குறிப்பு:**

நெய் குடித்தபின் வெந்நீர் குடிக்கவும். பசுநெய், முட்டை, முன் கூட்டிய 5 யும்[1] பயன் படுத்த ஆறுவகையான மூலமும் உறுதியாகத் தீரும்.

## 253. முறிவு எண்ணெய்

| | |
|---|---|
| சிற்றாமணக்கு எண்ணெய் | — 280 கி. (சேர்) |
| பசும்பால் | — 280 கி. (சேர்) |
| சாதிக்காய் | — 3 எண்ணிக்கை |
| சீரகம் | — சாதிக்காய் பொடி எடை |
| ரஸ்தாளி வாழைப்பழம் | — 15 எண்ணிக்கை |

**செய்முறை:**

சிற்றாமணக்கு எண்ணெயுடன் பசும்பாலைக் கலக்கவும். சாதிக்காய், சீரகத் தூளைப்போட்டுக் காய்ச்சவும் 15 ரஸ்தாலி வாழைப்பழத்தையும் ஒரேடியாகப் போட்டு மெழுகு பதத்தில் இறக்கவும். சாதிப்பபன்னீரை பின் கலக்கவும்.

**கால அளவு:**

காலை, மாலை 40 நாட்கள் 1 கரண்டி வீதம் குடிக்கவும்

**குறிப்பு:**

பன்னீரை இறக்கியபின் கலங்காவிடில் தெரிக்கும்.

## 254. முகசன்னித்திர எண்ணெய்

கடுகு — சிரங்கை
நொச்சிப்பட்டை இலை
ஆமணக்கிலை
மருக்கொழுந்து
தூபம்[1]
நல்லெண்ணெய் — 650 மிலி. (½ படி)

---

1. கடை சரக்குகளில் உள்ள முதல் 5ஐ குறிப்பிடுவதாகலாம்.

1 தூபம் என்பது சாம்பிராணியாகலாம்.

இவற்றைப் பதமாகக் காய்ச்சி முகத்தில் தடவவும். 10 முதல் 15 நாட்கள் செய்யவும்.

**குறிப்பு:**

நொச்சி இலையைத் தண்ணீரில் போட்டு, நீர்வேட்கையின் போது குடிக்கவும்.

## 255. மேகம் தீர எண்ணெய்

விளக்கெண்ணெய் — 1,950 லிட். (1½ படி)
காட்டு சிறு மல்லிகைச்சாறு — 1.3 லிட். (படி)
(இதை எருமைக்கடாவின் கோசலம் விட்டுத் துவைக்கவும்.)
ஈரவெங்காயச் சாறு — 325 மிலி. (¼ படி)
கடுக்காய் — 350 கிராம் (பலம்)

**செய்முறை:**

கலந்து கொண்டு காய்ச்சி எரித்துப் பதத்தில் எடுத்து கடுக்காயைப் பொடி செய்து போடவும். பின் வடிகட்டிக் கொள்ளவும்.

**தீரும்பிணிகள்:**

மலக்கட்டு, மேகவெட்டை, வெள்ளைபடுதல் என்பன.

**அளவு:**

ஒரு கரண்டி

**உணவு:**

சாமத்திற்கு மேல் முருங்கைக்கீரை அவித்ததண்ணீர், சோறும் உண்ணவும்.

### மேகம் தீர (வேறு)

மிளகு — 17.5 கி. (அரை பலம்)
சர்க்கரை — 17.5 கி. (அரை பலம்)
எண்ணெய் — 45 மி.லி. (அரைகால் படி)

**செய்முறை:**

எண்ணெயில் மிளகைத்தூள் செய்து போட்டு சர்க்கரையும் கலந்து தரவும்.

**குறிப்பு:**

எரிச்சல் எடுத்தால் முருங்கை இலையை கலந்து அரைக் கால்படி 45 மி லி. நீரில் தரவும். கைகண்ட மருந்து.

**தீரும்பிணிகள்:**

கரட்டைபற்றிய சூலை, கிரந்திப்புண்.

**(வேறு)**

சதாப்பு மூலத்தை விளக்கெண்ணெயில் ஊற வைத்து ஒரு துட்டெடை எண்ணெய் காலை, மாலை உட்கொள்ளவும்.

**(வேறு)**

**மேகம் தீர:**

வில்வ இலைச்சாறு — 1.3 லி. (படி)
விளக்கெண்ணெய் — 1.3 லி. (படி)

அடுப்பிலேற்றிக்காய்ச்சி, சீரகம் 140 கி. (4 பலம்) பொடி செய்து தூவி, மெழுகு பதத்தில் எடுக்கவும். 1 கரண்டி வீதம் உட்கொள்ளவும்.

## 256. மணத்தக்காளித் தைலம் (குழித்)

**செய்முறை:**

மணத்தக்காளி சமூலத்தைச் சிறிய துண்டுகளாக்கிப் போடவும். பின் ½ பங்கு பதத்தில் எடுத்து பானையில் இட்டு, சீலை மண் செய்து, தைலம் எடுக்கவும்.

**அளவு:**

காசெண்ட உள்ளுக்குத்தரவும்.

**தீரும்பிணிகள்:**

அசீரணம், சுரம், சன்னி இரணங்களுக்கு உள்ளுக்குத் தந்து, மேல் தடவி வரவும்,

கண்டமாலை, கிரணங்கள் தீரும்.

## மேகம் தீர மணத்தக்காளித்தைலம்

**சரக்குகள்:**

| | |
|---|---|
| மணத்தக்காளி | வகைக்கு 1 படி சாறு |
| துளசி | |
| பிரமி இலை | |
| வல்லாரை | |
| பொடுதலை | |
| கையான் | |
| சங்கஇலை | |
| நுணா இலை | |
| ஆமை ஓடு | அரை பலம் |
| அரத்தை | |
| சுக்கு | |
| தான்றிக்காய் | |
| கடுக்காய் | |
| கத்தூரி மஞ்சள் | |
| திப்பிலி | |
| வசம்பு | |
| ஓமம் | |
| சாதிக்காய் | — ஒன்று |
| விளக்கெண்ணெய் | — 1 படி |

**செய்முறை:**

தழைகளை இடித்து 1 படி எடுத்துக்கொள்ளவும். பின் கடைச்சரக்குகளை இடித்துப் பொடி செய்து சலித்துக்கொள்ளவும். எண்ணெயுடன் கலந்துக் காய்ச்சவும். பதத்தில் இறக்கி வடிக்கட்டவும்.

**தீரும்பிணிகள்:**

மாந்தம், கருங்கிரந்தி, கிரந்தி, நீரடைப்பு.

**அளவு:**

சிறுவர்களுக்கு ஒரு கரண்டி பெரியவர்களுக்கு இரு கரண்டி 5 நாட்கள், 7 நாட்களில் தீரும்

**உணவு:**

பச்சைப் பயிறு, வெங்காயம் போட்டுண்ணவும். மோர் விட்டுக்கொள்ளவும்.

(வேறு)

ஆவாரையிலையை அரைத்து வாழையிலையில் வைத்துச் சுட்டு தேனில் பாக்களவு உட்கொள்ளவும்

### மேகம் தீர (வேறு)

| | |
|---|---|
| கும்மட்டிக்காய்ச் சாறு | — 560 கி. (2 சேர்) |
| விளக்கெண்ணெய் | — 560 கி. (2 சேர்) |
| வெங்காயச் சாறு | — 280 கி. (2 சேர்) |
| வெள்ளறுகுச் சாறு | — 280 கி. (2 சேர்) |
| கொடிவேலிப்பட்டை | — 175 கி. (5 பலம்) |

மெழுகு பதமாய்க் காய்ச்சி எடுத்துக்கொள்ளவும்.

**உணவு**

மொச்சை, கத்தரிக்காய், முருங்கைப் பிஞ்சு, துவரை உண்ணலாம்.

**குறிப்பு**

யாலையில் மிளகு சாம்பலாக்கி, பரங்கிப்பட்டை, கொத்து மல்லி இடித்துப்போட்டு, சீரகத்தை வெடிக்கவிட்டு கலந்து கொண்டு நீர் விட்டு கியாழமிட்டுத் தரவும். அக்கரம் தீரும். இச்சாபத்தியம் சிற்றரத்தை, கிராம்பு, நொச்சி, முருங்கைப் பட்டை, மாவிலிங்கப்பட்டை, பூண்டு வெந்நரிலரைத்து சாறு எடுத்துத் கர திப்பிலை நெஞ்சில் பூசவும்.

| | |
|---|---|
| வெற்றிலை காம்பு | — 20 எண்ணிக்கை |
| மிளகு | — 10 எண்ணிக்கை |

தேனிலரைத்துக் கயிறாகப் பண்ணி, கண்ணத்திலடிக்கவும்

(வேறு)

வாலி, வட்டத்திப்பியிலை, கழக்கொடியிலை, சங்கிலை, பச்சோந்தி, பேய்ப் பச்சோந்தியிலை, சடைச்சியிலை, செரு

## மேக வெட்டை தீர் நெய்

**சரக்குகள்**

| | |
|---|---|
| தேங்காய்ப் பால் | — படி |
| கடுகுரோகிணி | — 2 வராகன் |
| சீரகம் | — 2 வராகன் |

**செய்முறை:**

பொடி செய்து கொண்டு, பாலில் போடவும். பின் காய்ச்சவும் பிறகு இறக்கவும்.

**அளவு :**

ஒரு கரண்டி உண்ணவும்.

**தீரும் பணிகள்**

பேதியாகும், மேகவெட்டை, மருந்தீடு, வயிற்றில் உள்ள (நாகப்பாம்பு) நாக்குப்பூச்சி விழும். கை கண்ட முறையாகும். படை, கண்டு கிரந்தி

## 257 சன்னி தீர திரி

| | |
|---|---|
| அமுக்ராய்பழம் | 2 எண்ணிக்கை |
| சாதிலிங்கம் | |
| அரிதாரம் | சரியளவு |
| கந்தகம் | |
| துத்தம் | |
| துருசு | |
| சீனாக்காரம் | |
| சித்திரமூலம் | |

அமுக்ராய்பழத்தில் சீராகச் சதுரக்கள்ளிப்பாலைப் பூசவும், காய்ந்தவுடன் சுடுத்திக் கொண்டும், கடைச் சரக்குகளைப் பொடி செய்து கொண்டு பழச்சாற்றில் அரைக்கவும். பாலில் ஊட்டி இருக்கின்ற திட்டில் சீராகப்பூசி நிழலில் உலர்த்தவும், வெற்றிலையில் இரண்டாகச் சுருட்டி புகை பிடிக்கவும்.

**தீரும் பிணிகள்:**

எல்லா வகை சன்னிகள், குன்ம, கபால நோய்கள் பீனசம், காசம், உப்பிசம் , அசீரணம் என்பன.

## 258. மெழுகு

| | |
|---|---|
| துருசு | — 7. கி. (2 வராகன்) |
| கந்தகம் | — 3.5 கி. (1 வராகன்) |
| வங்கம் | — 7.0 கி. (2 வராகன்) |
| வெடியுப்பு | — 4.200 கி. (12 வராகன்) |
| சீனி 4.20 கி | — ( 12 வராகன்) |
| கோவைவேர் | — 70 கி. (2 பலம்) |
| சமுத்திராபழம் | — 210 கி. ( 6 வராகன்) |
| அமுக்கிராக்கிழங்கு | — 70 கி. (2 பலம்) |

சூரணம் செய்து கொள்ளவும். 2 பங்கு சீனி கலந்து லேகியம் செய்யவும்.

**கால அளவு:**

மாலை மட்டும் உண்ண

**விலக்கு:**

புளி, புகையிலை கூடாது.

## 259. மேக வெள்ளைதீர லேகியம்

பருத்திக் கொட்டையை ஊறவைத்து இடித்த பாலில் சம அளவு சர்க்கரை இட்டு எரித்து லேகியபதத்தில் இறக்கி உண்ணவும்.

## 260. மேகம்தீர மெழுகு

திரிகடுகு
ஓமம்
பனங்கருப்பட்டி

முதலிரண்டைப்பொடி செய்து கொள்ளவும். கருப்பட்டியை சூடுபண்ணி பாகுபதத்தில், மெழுகு பதத்தில் இறக்கவும்.

காலையில் உண்ண, உதிர்ஞாயிறு மேக வெட்டை போகும்.

**குறிப்பு:**

நெய் என்று தலைப்பிடப் பட்டிருந்தாலும் சுக்கு, தேன் என்பதே பொருத்தமானது ஆகும். ஒருவேளை நெய்

என்பதற்குப் பதிலாக தேன் என்று பிழையாக பிரதி செய்யப் பட்டிருக்கவும் கூடும்.

## 261. சூலை தீர எண்ணெய்

| | |
|---|---|
| களைகொட்டியிலை<br>கிலந்திநாயகம்<br>செருபடை<br>சிறுசெருபடை<br>கொட்டகிரந்தி<br>தூதுவளை<br>கரிசலை<br>கருநொச்சி<br>பெண்நொச்சி<br>சங்குப்பி<br>சங்கயிலை<br>சங்கன் பட்டை<br>அவுரியிலை<br>அமுக்ரா கிழங்கு<br>அமுக்ராயிலை<br>ஈண்டங்கொழுந்து<br>கோழியவரை<br>துளசி<br>கரிப்பான்கிழங்கு<br>முள்ளியிலை<br>கழுதைவெட்டைச்சாறு<br>பசுவின் கோமயம்<br>பெருங்கிழங்கு<br>வெங்காயம்<br>எலுமிச்சைச்சாறு<br>முள்ளங்கி<br>தேன்கொடுக்கிலை<br>நீர்முள்ளி | தலா. 2.6 லி.<br>(2 படி) |

பூவரசன்பட்டை
பழுபாகல்
சிறுசின்னியிலைச்சாறு
பிரப்பன்பட்டை
முடக்கொத்தான்
பூவரசன்பட்டைச்சாறு
ஆதண்ட இலை
பாதாளமூலி
கண்டங்கத்திரி
சிற்றாவரை
சாறு எடுக்கவும்.

தலா 2.6 லி. (2 படி

நல்லெண்ணெய் 1.3 லி. (படி)
காட்டுச் சீரகம் (படி)
கருஞ்சீரகம் 35 கி. (பலம்)
சதைகுப்பி - 35 கி.
மரமஞ்சள் - 35 கி.

| | |
|---|---|
| பூதகரப்பான் பட்டை | — 35 கி. (பலம்) |
| கார்போக அரிசி | -- 35 கி. (பலம்) |
| பரங்கிப்பட்டை | — 35 கி. (பலம்) |
| நேர்வாளம் | — 35 கி. (பலம்) |
| பூண்டு | — 35 கி. (பலம்) |
| வசம்பு | — 35 கி. (பலம்) |

இவைகளை அரைத்து, சாற்றில் கரைத்து, கலந்து அடுப்பேற்றி எரித்து மெழுகு பதத்தில் இறக்கி வடிகட்டிக் கொள்ளவும் குளிக்கவும்,

**பயன்:**

18 வகையான கரப்பன் சூலைக்கட்டு கிரந்திகள் தீரும்.

## 262. நமட்டுப் பூச்சி தீர எண்ணெய்

| | |
|---|---|
| குமட்டி எண்ணெய் | — ½ படி |
| விளக்கெண்ணெய் | — ¼ படி |
| வாழைப்பழம் | — 3 எண்ணிக்கை |
| ஏலம் | — துட்டெடை |

வெதுப்பிப் பொடி செய்து சூரியபுடம் வைத்து வடிகட்டிக் காலையில் உண்ணவும்.

## 263. நாவரட்சி நீங்க நெய்

பூசணிக்காயைக் குடைந்து அதில் நெய்யை விடவும். அதன் வாயை மூடிப் பனிப்புடம் வைக்கவும். காலையில் பிசைந்து, சர்க்கரை சேர்த்து 325 மி. (½ படி) உண்ணவும்.

## 264. நீரிழிவுதீரத் தைலம்

| | |
|---|---|
| நல்லெண்ணெய் | |
| பசுநெய் | |
| வேப்பெண்ணெய் | |
| சந்தனம் | — 35 கி. (பலம்) |
| கோணிக்கிழங்குச்சாறு | — 1.3 லி. (படி) |
| இளநீர் | — 2.6 லி. (2 படி) |
| சாதிக்காய் | சம எடை |
| சாதிப்பத்திரி | சம எடை |
| சீரகம் | சம எடை |

முதலில் உள்ள நெய், எண்ணெய்ச் சாறுகளை பாண்டத்திலிடவும். ஏனைய கடைச் சரக்குகளைப் பழச்சாற்றிலரைத்துக் கொள்ளவும். பாக்குடன் சேர்த்து அடுப்பிலேற்றிக் கலந்து எரித்துக்கொள்ளவும். மெழுகு பதத்தில் எடுத்துக் கஸ்தூரி 17.5 கி. (அரை பலம்) போடவும். பின் வடிகட்டவும்.

**பயன்:**

குளிக்க

**தீரும்பிணிகள்:**

நீரிழிவு, சலங்கள், செவிடு நோய்கள் தீரும்.

## 265. நீர்க்கோவை தீர எண்ணெய்

| | | |
|---|---|---|
| எலுமிச்சைப் பழச்சாறு | — | 1.3 லி, (நாழி) |
| இஞ்சிச்சாறு | — | 1.3 லி. |
| வெங்காயச்சாறு | — | 1.3 லி. |
| நல்லெண்ணெய் | — | 1.3 லி |
| அஞ்சிக்கொட்டை | — | விளாங்காயளவு |
| மிளகு | — | 35. கி. (பலம்) |

**செய்முறை:**

சாறுகளை ஒன்றாக்கி அரைத்துக் கொள்ளவும். அஞ்சிக் கொட்டையை அவித்து அரைத்து விளாங்காயளவு எடுத்துக் கொள்ளவும். கலந்து கொண்டு எரித்து மணல் பதத்தில் இறக்கவும். குளிக்கப் பயன் படுத்தவும்.

## 266. நெருஞ்சில் எண்ணெய்

| | | |
|---|---|---|
| கோவைச்சாறு | — | 225 மிலி. (¼ படி) |
| பொன்னாங்காணிச்சாறு | — | 225 மிலி. |
| செருப்படைச்சாறு | — | 225 மிலி. |
| சீந்தில்தண்டுச்சாறு | — | 225 மிலி, |
| அரசன்பட்டைச் சாறு | — | 225 மிலி. |
| அத்திதோல்பட்டைச்சாறு | — | 225 மி,லி |
| ஆமணக்கு எண்ணெய் | — | 1.3 லிட். (படி) |

சாதிக்காய்
சாதிப்பத்திரி
மாசிக்காய்
கற்கடகசிங்கி
செண்பகப்பூ — 8.8 கி. (2 கழஞ்சு)
காட்டாத்திப்பூ
சிறுநாகப்பூ
ஏலம்
குரோசானி ஓமம்

பசும்பாலிலரைத்து எண்ணெயில் கலக்கி, சித்திரமூலப் பட்டை 35 கி. (பலம்) போட்டுக் காய்ச்சி எரித்துப் பதத்தில் எடுக்கவும். வடிகட்டிச் சீனா கல்கண்டு 70 கி. (2பலம்) பொடி செய்து போடவும்,

**அளவு:**

1 கரண்டி வீதம் உட்கொள்ளவும்.

**கால அளவு:**

40 நாட்கள் பத்தியம் வைக்கவும்.

## தலை முழுகத்தைலம்

**சரக்குகள்:**

| | |
|---|---|
| நல்வெண்ணெய் | } வகைக்கு உழக்கு |
| முலைப்பால் | |
| கம்மாறு வெற்றிலைச் சாறு | |
| மிளகு | — ¼ பலம் |
| தான்றிக்காய்த் தோல் | — ½ பலம் |
| கடுக்காய்த் தோல் | — ½ பலம் |
| மஞ்சள் | — 1 வராகன் |
| அபின் | — 1 வராகன் |

**செய்முறை:**

அரைத்து வெண்ணெயில் கரைத்துக் காய்ச்சி வடிகட்டவும். பின் அபின் சேர்த்து நெற்புடம் வைக்கவும்.

**உண்ணும் முறை:**

மூன்று நாட்களுக்கு ஒரு முறை தலைக்குக் குளிக்கவும்.

**தீரும் பிணி:**

கண்நோய்கள்

## ஆடாதோடை நெய்

**சேரும் சரக்குகள்:**

| | |
|---|---|
| ஆடாதோடை இலைச்சாறு | } வகைக்கு 1 படி |
| சங்க இலைச்சாறு | |
| தூதுவளை இலைச்சாறு | |
| கையாந்தகரை இலைச்சாறு | |
| நெய் | — 1 பலம் |
| திப்பிலி | — 1 பலம் |

| | |
|---|---|
| மிளகு<br>இம்பூராவேர்<br>கற்கடக சிங்கி கோட்டம்<br>சாதி பத்திரி<br>வேர்க்கொம்பு<br>இந்துப்பு<br>அதிவிடையம்<br>கிராம்பு<br>தேன்<br>திப்பிலி | வகைக்கு 1 பலம் |
| அதிமதுரம்<br>கச்சோலம்<br>திரிபலை | கழஞ்சு |

**செய்முறை:**

பொடி செய்து போட்டு நெய் கலக்கவும்.

**உண்ணும் அளவு:**

½ கழஞ்சு வீதம்

**தீரும் பிணிகள்:**

இருமல், இரத்த பித்தம், சுவாச காசம், சய ரோகம்.

## சிற்றாமுட்டித் தைலம்

**சரக்குகள்:**

| | |
|---|---|
| சிற்றாமுட்டி | — 100 பலம் |
| பால் | — 8 மரக்கால் |
| நல்லெண்ணெய் | — குறுணி |

**செய்முறை;**

சிற்றாமுட்டியை இடித்துப் 16 மரக்கால் தண்ணீர்விட்டுப் பதமாய்க்காய்ச்சவும், 8 மரக்கால் பாலை விட்டு, நல்லெண்ணெய் கூட்டவும். சிற்றாமுட்டி வேர் 10 பலத்தை அரைத்துக் கரைத்துக் கலந்து எரிக்கவும்.

**பயன் :**

உடலில் தடவிக் குளிக்கவும்.

**தீரும் பிணிகள்:**

இரத்த பித்தம், இரத்த பீனிசம் என்பன மாறும்

## தலைக்குக் குளிர்ந்த எண்ணெய்
## பொன்னாங்காணித்தைலம்

**சரக்குகள்:**

| | | |
|---|---|---|
| அதிமதுரம் | — | 1 பலம் |
| சந்தனம் | — | 1 பலம் |
| பொன்னாங்காணி | — | 2 பலம் |
| எலுமிச்சைப்பழச்சாறு | — | நாழி |
| நல்லெண்ணெய் | — | நாழி |
| பசும்பால் | — | நாழி |

**செய்முறை:**

கூட்டிக் காய்ச்சிப் பதத்தில் எடுக்கவும்.

**பயன்:**

குளிக்க, எல்லாவிதமான வெப்பம் தொடர்பானவைகள் தீரும்.

## மூக்கு, கண்ணுக்கு எண்ணெய்

**சரக்குகள்:**

விளக்கெண்ணெய் 1/8 படி

| | |
|---|---|
| செப்பு நெருஞ்சில்<br>சிறுபுள்ளடி<br>அம்மான் பச்சரிசி<br>தகரைவேர்<br>நரி பயற்றங் கொடி<br>சுத்திப்பட்டை<br>வெங்காயம் | வகைக்கு கச்சக்காய் அளவு |

**செய்முறை:**

நறுக்கி எண்ணெயில் போட்டுச் சூரிய புடம் இரு சாமம் வைத்து, வடிக்கட்டவும்.

**அளவு:**

துட்டு எடை

**தீரும்பிணி:**

கணம்

**விலக்கு:**

அப்புறப்பட்டால் எண்ணெய் ஒரு தலை

வெள்ளைப் பூண்டு
வசம்பு
விழுதியிலை
சிறுபுள்ளடி இலை
மிளகு
விளக்கெண்ணெய்

**செய்முறை:**

ஓரளவாக இலைகளை நறுக்கி ஒருபிடி சட்டியிலிட்டுப் பொன்னிறமாய் வறுக்கவும். பின் விளக்கெண்ணெய் கூட்டி, முன் சொன்ன மருந்துகளையும் இட்டுக் காய்ச்சவும், பதத்தில் எடுத்து வடிகட்டிக் கொள்ளவும்.

**உண்ணும் முறை:**

வலிமை அறிந்து உள்ளுக்குக் கொடுக்கவும். அடி உள்ளே வாங்கிப்போகும்.

**சிழ்பிரமியம் தீர எண்ணெய்**

| | | |
|---|---|---|
| கண்டங்கத்திரிச்சாறு | — | 2 படி |
| கடுக்காய் | — | 6 எண்ணிக்கை |
| கருஞ்சீரகம் | — | 2 வராகன் |
| கார்போகி அரிசி | — | 3 வராகன் |
| கஸ்தூரிமஞ்சள் | — | 3 வராகன் |
| களிப்பாக்கு | — | 1 படி |
| விளக்கெண்ணெய் | — | 1 படி |

**செய்முறை :**

அரைத்துக் கரைத்துக் காய்ச்சவும். பதத்தில் எடுக்கவும் மறுநாள் பயன்படுத்தவும்.

**பயன் :**

குளிக்க, குடிக்கவும்.

**(வேறு)**

நல்லெண்ணெய், பொடுதலைச்சாறு படி எடுத்துக் கலந்து குடிக்கவும்.

## வலிவாதம் தீர எண்ணெய்

திருகுகள்ளிவேர்

வசம்பு

மிளகு

பூண்டு

**செய்முறை :**

இவற்றைக் கொதிக்க வைத்து எண்ணெயிலிட்டு உடம்பில் போட்டுப் பிடிக்க வலி தீரும்.

## மாந்த எண்ணெய்

**சரக்குகள் :**

| | | |
|---|---|---|
| விளக்கெண்ணெய் | — | 1 படி |
| உசிலைப்பட்டை | | |
| அரக்குமஞ்சள் | | சம அளவு |
| வெள்ளுள்ளி | | |
| நிம்பக்காய் | | |
| தும்மட்டிக்காய் | | பாதி அளவு |

**செய்முறை:**

சரக்குகளை எண்ணெயில் கலந்துகொள்ளவும், எண்ணெயை அடுப்பிலேற்றிக் காய்ச்சவும். சிவந்தால் இறக்கிக் கொள்ளவும்.

**அளவு:**

கால் கரண்டி. மூன்று நாட்கள்.

**தீரும்பிணிகள்:**

மாந்தம், இசிவு, பேய் மாந்தம்

## கண்டங்கத்திரி லேகியம்

### (வேறு)

| | | |
|---|---|---|
| கண்டங்கத்திரி சமூலச்சாறு | — 650 மி.லி. (அரைப் படி) | |
| திராய்ச் சாறு | — 650 மி.லி. (அரைப் படி) | |
| வேப்பிலைச் சாறு | — 325 மி.லி. (கால் படி) | |
| மிளகு<br>திப்பிலி<br>டள்ளி<br>வசம்பு<br>இந்துப்பு<br>கல்லுப்பு<br>ஓமம் | 35 கி. (பலம்) | |
| நேர்வாளம் | — 17.5 கி. (அரைப் பலம்) | |
| சதகுப்பை | — 35 கி. (பலம்) | |
| வெல்லக்கட்டி | — 2 | |
| பழைய புளி | — 52.5 கி (1½ பலம்) | |

சரக்குகளை இடித்துக் கொண்டு தூள் செய்து சலித்துக் கொள்ளவும். முன் சொன்ன சாற்றில் கலந்து கொண்டு அடுப்பிலேற்றி எரித்துப் பதத்தில் எடுத்துக்கொள்ளவும்.

**அளவு:**

நெல்லிக்காய் அளவு

**தீரும்பிணிகள்:**

வயிறு பேதியாதும், கர்ப்பவாயு, கர்ப்பக் கிராணி, மலட்டுப்பூச்சி, இரத்தக்கட்டிகள், சூசிகவாயு என்பன.

# 267. எரிச்சல் தீர

| | | |
|---|---|---|
| திரிகடுகு | } | 10.5 கி. (3 வராகன்) |
| ஓமம் | | |
| பூண்டு | | |
| கருஞ்சீரகம் | | |

(வேறு)

சதாப்பு மூலத்தை விளக்கெண்ணெயில் ஊற வைத்து (ஒரு துட்டு) உட் கொள்ளவும்.

(வேறு)

| | | |
|---|---|---|
| வில்வ இலைச்சாறு | — | 1.3 லி (படி) |
| விளக்கெண்ணெய் | — | 1.3 லி (படி) |

**செய்முறை:**

இவற்றை அடுப்பிலேற்றிக் காய்ச்சி மெழுகு பதத்தில் எடுக்கவும். சீரகம் 140 கி (4 பலம்) பொடி செய்து தூவி வடிகட்டி, 1 கரண்டி வீதம் உட் கொள்ளவும்.

**உணவு:**

பச்சைப்பயிறு, வெங்காயம் சேர்த்துண்ணவும். மோர் விட்டுக் கொள்ளவும்.

(வேறு)

ஆவாரை இலையை அரைத்து வாழையிலையில் வைத்துச் சுட்டு தேனில் பாக்களவு உட் கொள்ளவும்.

(வேறு)

| | | |
|---|---|---|
| கும்மட்டிக்காய்ச் சாறு | — | (2 சேர்) |
| விளக்கெண்ணெய் | — | (2 சேர்) |
| வெங்காயச் சாறு | — | (1 சேர்) |
| வெள்ளறுகு | — | (1 சேர்) |
| கொடிவேலி வேர்ப்பட்டை | — | 175 கி. (5 பலம், |

**செய்முறை:**

கலந்து கொண்ட பின் காய்ச்சிப் பதத்தில் எடுத்து வடி கட்டிக் கொள்ளவும்.

**உணவு:**

மொச்சை, கத்தரிக்காய், முருங்கைப்பிஞ்சு, துவரை உண்ணலாம்.

**குறிப்பு:**

மிளகைச் சாம்பலாக்கி, பரங்கிப்பட்டை கொத்தமல்லியை இடித்துப் போட்டு, சீரகத்தை வெடிக்கவிட்டுக் கலந்து கொண்டு நீர் விட்டு கியாழமாக்கவும். குடிக்க, அக்கரம் தீரும். இச்சாபத் தியம்.

### மேகக் கிரந்தி தீர

வாலி, வட்டத்திப்பிலி இலை, கழக்கொடி இலை, சங்கிலை, பச்சோந்தி, பேய்ப்பச்சோந்தியிலை, சடைச்சியிலை, செருபடை, கண்டு கிரந்தி, கோழியாவாரை இலை, தும்பை, துளசி, தலவு முருங்கை, வல்லாரை, பொடுதலை, வரப்பூ இலை, நல்வேளை, ஆடாதோடை சமஅளவு, எடுத்தும் உப்பிலிவேர், பூதகரப்பன் பட்டை, வாதகரப்பன்பட்டை, பெருங்கிழங்கு, திருநீற்றுப் பச்சை வேர், கருவேப்பிலை 9 கி. (1/4 பலம்) சூரணம். செய்தும் கொள்ளவும். முற்சொன்ன சாறுகளில் கலந்து 1.3 லி. (படி) நல்லெண்ணெய் கூட்டித் தாய்ப்பால் (ஆழாக்கு) விட்டுக் காய்ச்சிப் பதத்தில் எடுத்து வடிகட்டி வைக்கவும்.

**தீரும் பிணிகள்:**

மாந்தம் 8, கணம் 8 ம் தீரும், மேகக் கிரந்தி தீரும்.

**அளவு:**

1 கரண்டி — சிறுவர்கள்

2 கரண்டி — பெரியவர்கள்

**கால அளவு:**

5 நாட்கள்

பெரியவர்கள் 8 நாட்கள், காலை, மாலை இரு வேளையும் குடிக்கவும், பத்தியமாய் இருக்கவும்.

## 268. மூலம் தீர

| | |
|---|---|
| விளக்கெண்ணெய் | — 1.3 லி (படி) |
| முடக்கொத்தான் சாறு | — (1/4 படி) |
| நாயுருவி இலைச்சாறு | — 400 மி, (1/8 படி) |
| ஈர வெங்காயம் | — 600 கி( 1/2 படி) |

**செய்முறை:**

எல்லாவற்றையும் கலந்து, அடுப்பிலேற்றிக் காய்ச்சவும். வெங்காயத்தில் நீர்வற்றிய பின் பதத்தில் இறக்கிக் கொள்ளவும்.

**கால அளவு:**

3 நாட்கள் 5 நாட்கள், உட்கொள்ளவும்.

**அளவு:**

பெரிய கரண்டி அளவு இரண்டு வீதம்,

**உணவு:**

வெந்நீர்ச் சோறு.

**(வேறு)**

| | |
|---|---|
| நல்லெண்ணெய் | — (உழக்கு) |
| கொடி வேலிவேர் | — 10.2 கி. (2 கழஞ்சு) |
| பூண்டு | — 10.2 கி. (2 கழஞ்சு) |
| வசம்பு | — 10.2 கி. (2 கழஞ்சு) |

**செய்முறை:**

பசும்பால் வார்த்தரைத்து வழித்து எண்ணெயில் கரைத்துக் காய்ச்சிப் பதத்தில் வரும்போது கம்பிபிசின் உளுந் தெடைபோட்டு இறக்கி வைக்கவும், கரைத்து மூல இரணத்தில்

தடவவும். மேல் கிரணம் ஊதின் வீக்கம், தலை வீக்கம் வற்றி, கிரணமும் உலர்ந்து போகும்.

(வேறு)

| | | |
|---|---|---|
| விளக்கெண்ணெய் | — | 400 மிலி. (1·3 லிட்டர்) |
| பூண்டு | | |
| வசம்பு | | |
| விழுதியிலை | | 1 பிடி |
| சிறுபுள்ளடியிலை | | |
| மிளகு | | |

சட்டியில் போட்டுப் பொன்னிறமாக வறுத்து நறுக்கிய மருந்தைப் போட்டு மெழுகுப் பதத்தில் எடுத்து வடிகட்டவும். 3 வேளை தரக் குதம் உள்ளே செல்லும்.

நெய்

| | | |
|---|---|---|
| பசு நெய் | — | (3 ஆழாக்கு) |
| வெங்காயச்சாறு | — | (ஆழாக்கு) |
| முருங்கைப்பட்டைச் சாறு | — | (ஆழாக்கு) |

**செய்முறை:**

இச்சாறுகளைச் சட்டியிலிட்டுக் காய்ச்சவும். சீரகம் 17½ கிராம் (அரை பலம்) போடவும். பதத்தில் இறக்கிக் கொள்ளவும். வடிகட்டி எடுத்துக் கொள்ளவும்.

**அளவு:**

2 வேளை 1 கரண்டி வீதம்.

**விலக்கு:**

புளிப்பு, உப்பு, புகையிலை கூடாது.

நாயுருவி நெய்

(வேறு)

| | | |
|---|---|---|
| நாயுருவி | — | 3.5 கி (துலாம்) |
| பசுநெய் | — | (நாழி) |
| அதிமதுரம் | — | 15.3 கி. (3 கழஞ்சு) |

| | | |
|---|---|---|
| கடுகு ரோகணி | — | 15.3 கி. (3 கழஞ்சு) |
| இலுப்பைப்பூ | — | 15.3 கி. (3 கழஞ்சு) |
| செங்கழுநீர் | — | 15.3 கி. (3 கழஞ்சு) |
| கோட்டம் | — | 15.3 கி. (3 கழஞ்சு) |
| சதகுப்பை | — | 15.3 கி. (3 கழஞ்சு) |
| பச்சோலம் | — | 15.3 கி. (3 கழஞ்சு) |
| சிறுதேக்கு | — | 15.3 கி. (3 கழஞ்சு) |
| வாய் விளங்கம் | — | 15.3 கி. (3 கழஞ்சு) |
| சுக்கு | — | 15.3 கி. (3 கழஞ்சு) |
| திப்பிலி | — | 15.3 கி. (3 கழஞ்சு) |
| திப்பிலி மூலம் | — | 15.3 கி. (3 கழஞ்சு) |

**செய்முறை:**

கடைச் சரக்குகளைப் பொடி செய்து கொள்ளவும். நாயுருவியைக் கத்தரித்து 10. 3 லி. (பத்து படி) நீர்விட்டு எரிக்கவும். (இருநாழியாக) வற்றிய பிறகு கியாழம் ஆன பின்பு சூரணப் பொடியைப் பசும்பாலால் அரைத்து நெய்யில் கரைத்துச் சூடு பண்ணி மெழுகு பதமாய் எடுத்து வடிகட்டி வைக்கவும்.

**அளவு:**

165 கி. (தாசெடை) குடிக்க

**உணவு:**

கசப்பு, புளிப்பு விலக்கவும்

**குறிப்பு:**

நெய் குடித்தபின் வெந்நீர் அருந்தவும். பசுநெய், முட்டை, கரப்பானில்லாத முன் கூட்டி 5[1]. இதைப் பயன்படுத்தினால் ஆறு வகையான மூலமும் உறுதியாகத் தீரும்.

---

1. கடைச் சரக்குகளில் உள்ள முதல் ஐந்தைக் குறிப்பிடுவதாகத் தெரிகிறது.

## இரத்த மூலம் தீர நெய்

| | | |
|---|---|---|
| பசுநெய் | — 3 ஆழாக்கு | |
| முருங்கைவேர்ப்பட்டைச் சாறு | } | வகைக்கு |
| பழையஈரவெங்காயச் சாறு | } | ஆழாக்கு |

**செய்முறை:**

சட்டியிலிட்டு வார்த்துக் காய்ச்சும்போது சீரகம் ½ பலம் கூடப் போடவும். பதத்தில் எடுக்கவும்.

**அளவு:**

ஒரு கரண்டி

**தீரும் பிணிகள்:**

இரத்த மூலம்

**விலக்கு:**

கவிச்சு, புளிப்பு, உப்பு, புகையிலை தவிர்க்கவும்.

## 269. புண் தீர

**சரக்குகள்:**

| | |
|---|---|
| துத்தம் | — 4.2 கி. (வராகன்) |
| சாதிலிங்கம் | — 4.2 கி. (வராகன்) |
| கருஞ்சீரகம், வசம்பு | — 4.2 கி. (வராகன்) |
| செந்தூரப்பட்டை | — 4.2 கி. (வராகன்) |
| விளக்கெண்ணெய் | — 600 மி.லி. (அரைப்படி) |
| ஆடுதின்னாப்பாளைச்சாறு | — |
| புங்கன் பால் | — |

**செய்முறை:**

மேற் சொன்ன சரக்குகளைப் பொடி செய்து விளக்கெண்ணெயில் பொட்டு ஆடு தின்னாப்பாளை, புங்கன் பாலைச் சேர்த்துக் காய்ச்சவும்.

**பயன்:**

வெளித்தடவ புண்கள் ஆறும். காய்ந்து சதை வளர்ந்த புண்கள் ஆறும்.

குறிப்பு:

விளக்கெண்ணெய்க்குப் பதிலாகத் தேங்காய் எண்ணெயையும் பயன்படுத்தலாம். துத்தம் சாதிலிங்கம் இல்லாமல் செய்யலாம். மூலத்தில் "அந்த மருந்தில்லாமல்" எனக் குறிப்பிட்டுள்ளது. துத்தம் சாதிலிங்கமாகலாம்.

## 270. அண்ட வீக்கம் தீர எண்ணெய்

| | | |
|---|---|---|
| கழற்சி இலைச்சாறு | — | 1.3 லி. (படி) |
| நொச்சி இலைச்சாறு | — | 1.3 லி. (படி) |
| ஈரவெங்காயம் | — | .6 லி. (½ படி) |
| விளக்கெண்ணெய் | — | 1.3 லி. (படி) |

**செய்முறை:**

இவைகளைச் சேர்த்துக் காய்ச்சிப் பதத்தில் வடிகட்டவும். 1 கரண்டி வீதம் சிறுவர்களுக்கு ஒருநாள் விட்டு ஒரு நாள் குடிக்கத்தரவும். மூன்று முறை தர அண்ட வீக்கம் தீரும். பெரியவர்களுக்கு அண்ட வாதம் தீரும்.

## 271. அரையாப்புத்தீர எண்ணெய்

| | |
|---|---|
| சூரிவேர்<br>தைவேளை<br>உள்ளிப்பூண்டு<br>நல்லெண்ணெய் | சம அளவு |

எடுத்துக்காய்ச்சி எண்ணெய் எடுத்து உட்கொள்ளவும்

| | | |
|---|---|---|
| ஈரவெங்காயம் | — | 105 கி. (3 பலம்) |
| விளக்கெண்ணெய் | — | 1 3/4 லி. (படி) |

**செய்முறை:**

வேர்ப்பட்டைகளை உமிபோலாக்கவும். வெங்காயத்தை சீவி, விளக்கெண்ணெயில் போடவும். எல்லாவற்றையும் கலந்துகொண்டு சூரியபுடம் வைத்தெடுக்கவும்.

**அளவு:**

கரண்டி வீதம் மூன்று வேளை

**விலக்கு:**

உப்பு முதல் ஒன்றுமாகாது. மூன்று நாளும் வெந்நீர்ச் சோறு

**குறிப்பு:**

நல்ல திதியில் கோழி இறைச்சி சோறும் உண்ணவும். மறு நாள் எண்ணெயைக் குடிக்கவும்.

**(வேறு)**

**சரக்குகள்:**

ஊற்றின விளக்கெண்ணெய் — 2.688 லி. (2 படி)
நிலக்குமிழ் வேர்ப் பட்டைஇலை — 70 கி. (2 பலம்)
நறுக்கிய ஈரவெங்காயம் — 12.096 கி. (9 படி)

**செய்முறை:**

இவைகளைக் கலந்து கொண்டு சூரியபுடம் வைத்துக் கொள்ளவும்.

**கால அளவு:**

10 நாட்கள், காலை, மாலை, 10 நாட்களுக்கு 1 முறை.

**உணவு:**

வெந்நீர்ச் சோறு

**விலக்கு:**

உப்பு கூடாது

**(வேறு)**

**சரக்குகள்:**

மிளகு — 1 பிடி
பூண்டு — 1 பிடி
கோழி முட்டை — 2
நல்லெண்ணெய் — 1.344 லி. (படி)

**செய்முறை:**

முதலிரண்டு சரக்குகளை அரைத்துக் கொள்ளவும். கோழி முட்டையை உடைத்து வெண் கருவை எடுத்துக்கொள்ளவும்.

அனைத்தையும் நல்லெண்ணெயில் கலந்து மூன்று வேளை குடிக்கவும்.

(வேறு)

| | |
|---|---|
| எலுமிச்சைச் சாறு | — .372 லி. (¼ படி) |
| விளக்கெண்ணெய் | — 1.344 லி. (படி) |
| பசுவெண்ணெய் | — .372 லி. (கால் படி) |
| முள்ளிப்பழச்சாறு | — .186 லி. (1/8 படி) |
| தென்னங்குரும்பைச்சாறு<br>வெங்காயச்சாறு<br>மணத்தக்காளிச்சாறு | 1.34 லி. (படி) |
| சிறுபுள்ளடிச்சாறு<br>தகரைச்சாறு<br>நரிபயிற்றங்கொடி | |
| செம்முள்ளிச்சாறு<br>நிலக்குமிழ்ச்சாறு<br>சீரகம் | 105 கி. (3 பலம்) |

**செய்முறை;**

சாறுகளை எண்ணெயில் கலந்து கொள்ளவும். சீரகத்தைப் பொடி செய்து கொண்டு அரைத்து எண்ணெயில் கலந்து கொள்ளவும்.

| | |
|---|---|
| ஏலம் | — 70 கி. (2 பலம்) |
| சீனி | — 70 கி. (2 பலம்) |
| பசுவெண்ணெய் | — 70 கி. (2 பலம்) |
| பருத்திக்கொட்டைப் பருப்பு | — |
| வெந்தயம் | — |
| பசு நெய் | — |

முன் இரண்டையும் கூட்டி சூடு பண்ணிக்கொள்ளவும். பசு நெய்யைக் காய வைக்கவும். சூரணத்தைத் தூவி லேகியம் பண்ணவும்.

**குறிப்பு:**

சீனி மறைமுகமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. எனவே சீனியையும் சேர்க்க வேண்டும்.

**அளவு :**

நெல்லிக்காய் இரு முறை

# லேகியப்பிரிவு

## 272. மன்மத சிந்தாமணி லேகியம்

1) மிளகு
2) செங்கழுநீர்ப்பூ
3) கோட்டம்
4) அமுக்ராவேர்
5) அமிர்தவல்லிக்கிழங்கு
6) நெருஞ்சில்வேர்
7) வெந்தயம்
8) இலவம் பிஞ்சுவிரை
9) பாலைக்கிழங்கு
10) நிலப்பனைக் கிழங்கு
11) முள்ளிவேர்
12) நீர் முள்ளிவேர்
13) தண்ணீர்விட்டான் கிழங்கு
14) வாழைக்கிழங்கு
15) குரோசானி ஓமம்
16) உளுந்து
17) எள்
18) கொத்தமல்லி
19) அதிமதுரம்
20) ஆவாரம்வேர்
21) கச்சோலம்
22) கிராம்பு
23) சாதிக்காய்
24) இந்துப்பு
25) சிறுதேக்கு
26) கற்கடக சிங்கி

27) சுக்கு
28) திப்பிலி
29) நற்சீரகம்
30) கருஞ்சீரகம்
31) ஓமம் (அசுமதாகம்)
32) இலவங்கப்பட்டை
33) இலவங்கப்பத்திரி
34) சாரணைவேர்
35) மதனகாமப்பூ
36) அத்தி
37) ஏலம்
38) திப்பிலி
39) முந்திரிப்பழம்
40) வசம்பு
41) சிறுகாஞ்செரி வேர்
42) கடுக்காய்த் தோல்
43) நெல்லி முள்ளி
44) தான்றிக்காய்
45) இலுப்பைப்பூ

சம எடை வீதம் எடுத்து சூரணம் செய்யவும், சூரணம் 1 பங்கு, கஞ்சா பொடி 1 பங்கு, 2 பங்கு சீனி சேர்த்து தேன், பசு நெய் விட்டு கலந்து பிசைந்து மாத்திரையாக்கவும்.

**அளவு:**

6.6 கி. (1 ½ கழஞ்சு)

**கால அளவு:**

40 நாட்கள், காலையில் மட்டும்.

**உணவு:**

பால், சர்க்கரை, முருங்கைக்காய், வாழைக்காய்.

**பலன்:**

தாது இல்லாதவர்கள் பெண்களுடன் இன்பம் அடைய இயலும். நலமுண்டாகும். தீராத துன்பங்கள் தீரும். முகத்தில் அழகு. இளைத்த உடல் பருக்க, மனத்துன்பங்கள் நீங்கும்.

எல்லாப் பிணிகளும் போகும். வாதம் நீங்கும், அதிசாரம் மந்தம், அக்னி, கிராணி, பிரமியம், இரத்தப்பிரமியம், சிலேத்துமம், தாது ரச நட்டம் நீங்கும், வாக்குண்டாகும்.

**மன்மத சிந்தாமணி லேகியம்:**

கஞ்சா சிரங்காய் அளவு எடுத்து 5.3 லி. பசும்பாலில் (குறுணி) போட்டு மூன்று மரக்காலளவு வர எரித்து உறை ஊற்றவும். தயிரானபின் கடைந்து வெண்ணெய் எடுத்து உருக்கி நெய்யாக்கவும். நெய்யில் சாதிக்காய் 190 கி. (6 வராகன்) சாதிப்பத்திரி 190 கி (6 வராகன்) கிராம்பு 140 கி. (4 வராகன்) முந்திரிப்பழம் 70 கி. (2 பலம்) பேரீச்சம்பழம் 70 கி. ஆனை நெருஞ்சில் 35கி. கரு ஊமத்தை (40 வராகன்) 1400 கி. சுக்கு 35 கி. (பலம்) சன்ன லவங்கப்பட்டை 1.40 கி. (4 வராகன்) தாளிச பத்திரி 1.40 கி. (4 வராகன்) வால்மிளகு 1.40 கி. (4 வராகன்) மாதுளம் விதை 1,40 கி. (4 வராகன்)

**மன்மத சிந்தாமணி லேகியம்**

| | | |
|---|---|---|
| 1) | கஞ்சா | — சிரங்காய் அளவு |
| 2) | பசும்பால் | — குறுணி |
| 1) | சாதிக்காய் | — 6 வராகன் |
| 2) | சாதிப்பத்திரி | — 6 வராகன் |
| 3) | கிராம்பு | — 4 வராகன் |
| 4) | முந்திரிப்பழம் | — 2 வராகன் |
| 5) | பேரீச்சம்பழம் | — 2 வராகன் |
| 6) | ஆனை நெருஞ்சிக்காய் | — வராகன் |
| 7) | கரு ஊமத்தை | — 40 பலம் |
| 8) | சுக்கு | — 1 பலம் |
| 9) | சன்ன இலவங்கப்பட்டை | — 4 வராகன் |
| 10) | தாளிசபத்திரி | — 4 வராகன் |
| 11) | வால்மிளகு | — 4 வராகன் |
| 12) | மாதுளம் விதை | — 4 வராகன் |
| 13) | சர்க்கரை | — 12 வராகன் |
| 14) | கோவை வேர் | — 2 வராகன் |
| 15) | சமுத்திராப்பழம் | — 6 வராகன் |
| 16) | அமுக்ராக்கிழங்கு | — 2 பலம் |

**செய்முறை :**

கஞ்சாவைப் பசும்பாலில் போட்டுக் காய்ச்சி 3 மரக்காலாக எடுக்கவும். பின்னர் உறை ஊற்றிவைக்கவும். கடைந்து வெண்ணெய் எடுத்து, நெய்யாக்கவும். கடைச்சரக்குகளைச் சூரணம் செய்து கொண்டு, நெய்யுடன் கூட்டி அடுப்பேற்றிக் காய்ச்சவும். சூரண எடைக்கு இருபங்கு சர்க்கரை கற்கண்டு போடவும். லேகியமாகக் கிண்டவும்.

**கால அளவு:**

மாலை மட்டும் உண்ணவும்.

**விலக்கு :**

புளி, புகை கூடாது.

**தீரும்பிணிகள் :**

லேபனம் உண்டாகும். சகலவெட்டைகளும் தீரும். மேகம் தீரும்.

## அசீரணபேதி தீர லேகியம்

| | | |
|---|---|---|
| ஓமம் | — | 3 பலம் |
| பனைவெல்லம் | — | 3 பலம். |

**செய்முறை:**

சட்டியில் பனை வெல்லத்தை இட்டு அடுப்பேற்றிக் காய்ச்சவும். ஓமத்தைப் பொடி செய்து பாகில் போடவும். கிண்டிப் பதத்தில் எடுக்கவும்.

**அளவு:**

புன்னைக்காயளவு.

**உணவு :**

மோர்ச்சோறு.

## புழுவெட்டுத் தீர

சாரணைவேர்
இந்துப்பு }

பசுவெண்ணெய் போட்டுக் கலத்தைக் கவிழ்த்துக்காய்ச்சிச் செம்பிலே வைத்துக் கண்ணுக்கு இடக் கண் வியாதி புழுவெட்டுத் தீரும்.

**(வேறு)**

ஊமத்தங்காயை முள்பேக்கிச் சீவிப்போட்டு மேல் தோல் கருகச்சுட்டு அரைக்கவும். துருசு வராகன் எடை போட்டு, விளக்கெண்ணெயில் குழப்பிப் போட புழு வெட்டுத் தீரும்.

**(வேறு)**

எருக்கம்பஞ்சைச் சுட்டு, பசு நெய்யில் போட்டு இழைத்துச் சிமிளியில் வைத்துப்போட கண் நோய் புழுவெட்டுத் தீரும்.

**கண்டங்கத்திரி லேகியம்**

| | | |
|---|---|---|
| கண்டங்கத்திரி சமூலச்சாறு | — | 650 மி.லி. (½படி) |
| தராய்ச்சாறு | — | 650 மி.லி. (½படி) |
| வேப்பிலைச்சாறு | — | 325 மி.லி. (¼படி) |

**சரக்குகள் :**

| | | |
|---|---|---|
| மிளகு | | 35 கி. (பலம்) |
| திப்பிலி | | 35 கி. (பலம்) |
| பூண்டு | | 35 கி. (பலம்) |
| வசம்பு | | 35 கி. (பலம்) |
| இந்துப்பு | | 35 கி. (பலம்) |
| கல்லுப்பு | | 35 கி. (பலம்) |
| ஓமம் | | 35 கி. (பலம்) |
| நேர்வாளம் | — | 17.5 கி. (½ பலம்) |
| சதகுப்பை | — | 35 கி. (பலம்) |
| வெல்லக்கட்டி (அச்சு 2) | — | |
| பழம்புளி | — | 52.5 கி. (1½ பலம்) |

**செய்முறை :**

சரக்குகளை இடித்துக்கொண்டு தூள் செய்து சலித்துக் கொள்ளவும். முன் கூறிய சாறுகளில் கலந்து, அடுப்பிலேற்றிக் காய்ச்சவும். பதத்தில் எடுத்துக் கொள்ளவும்.

**தீரும்பிணிகள் :**

வயிறு பேதியாகி கர்ப்பவாயு, கர்ப்பக்கிராணி, மலட்டுப் பூச்சி, இரத்தக்கட்டிகள், சூசிகவாயு தீரும்.

**அளவு :**

நெல்லிக்காய் அளவு

## 273. கண்டங்கத்திரி லேகியம்

| | |
|---|---|
| இஞ்சிச்சாறு | — 1.3 லி. (படி) |
| கண்டங்கத்திரிச்சாறு | — 1.3 லி. (படி) |
| நெருஞ்சிச்சாறு | — 1.3 லி. (படி) |
| எலுமிச்சைச்சாறு | — 1.3 லி. (படி) |
| பசும்பால் | — 2.6 லி. (2 படி) |
| பனைவெல்லம் | — 17.5 கி. (½ பலம்) |

அடுப்பிலேற்றிச் சூடு பண்ணிப் பாகுபதத்தில் திரிகடுகு ஏலம், வாய் விளங்கம், கிராம்பு, தாளிசபத்திரி 35 கி. (பலம்) பொடி செய்து தூவவும். நெய் 650 மிலி. (½ படி) தேன் 325 மிலி. (¼ படி) கிண்டி மெழுகு பதத்தில் இறக்கவும்.

**அளவு:**

காலை, மாலை மண்டலம் உட்கொள்ளவும்

**தீரும்பிணிகள்:**

வாதம், வாயு, பித்தம், வாந்தி, சூலை, இசிவு.

**(வேறு)**

சூரணத்தை நெய் 672 மிலி. (உரி) விட்டு மெழுகு பதமாய்க் கிண்டி, மாலை பாக்களவு உண்ணலாம்.

**தீரும்பிணிகள்:**

வாதம், வாயு, வெப்பம், பித்தவாயு, வலிகடுப்பு, இரைச்சல், பேதி, பொருமல், வாயு, கிராணி, அத்திசுரம், அத்தி வெட்டை என்பன.

### வலி குன்மம் தீர லேகியம்

வெள்ளை வெங்காயம் — (பூண்டு) — 3 பலம்

பெருங்காயம் — 2 வராகன்

தைவேளை அரைத்து எலுமிச்சங்காயளவு பொடி பண்ணி எல்லாவற்றையும் கலக்கவும் அடுப்பிலேற்றிக் காய்ச்சி லேகிய பதமாய்க் கிண்டி எடுக்கவும்.

**அளவு:**

புன்னைக்காய். காலை, மாலை,

**தீரும்பிணி:**

வலி குன்மம்

### மேகவெள்ளை, தாது வளர்ச்சிக்கு லேகியம்

பருத்திக் கொட்டையை ஊறவைத்து இடித்து. பால் எடுக்கவும். சர்க்கரை சேர்த்து அடுப்பிலேற்றிக் காய்ச்சி, லேகிய பதத்தில் எடுத்து உண்ணவும்.

### மாதவிடாய் வரலேகியம்

**சரக்குகள்:**

மாவிலங்க தழை

மிளகு — ½ பலம்

பூண்டு — 2 பலம்

**செய்முறை :**

மாவிலங்கத் தழையை அரைத்து, 1 ½ எலுமிச்சங்காய் அளவு எடுத்துக் கொள்ளவும். கடைச் சரக்குகளையும் பொடி செய்து சலித்துக் கொண்டு 1 படி தண்ணீரில் எல்லாவற்றை யும் கலக்கிக் கொள்ளவும். மாங்காய் அளவு புளியைச் சேர்த்து கரைத்து, வடித்து, அடுப்பேற்றி, அடி பற்றாமல் கிண்டிக் காய்ச்சி, குழம்பு பதத்தில் தேங்காயளவு கருப்பட்டி சேர்க்கவும் காலையில் உண்ணவும்.

## நீரிழிவு தீர லேகியம்

**சரக்குகள்:**

திரிபலா — 1 பலம்
திரிகடுகு — 1 பலம்
ஆவாரம் பட்டை
செங்கிளுவை
கொன்றைப்பட்டை
மருசனாதிப்பட்டை
நெல்லிக்காய்வேர்ப்பட்டை

**செய்முறை :**

பின்னர் உள்ள பட்டைகளை இடித்து 1 பலம் முன்னர்க் கூறி உள்ள கடைச்சரக்குகளின் பொடியுடன் சேர்க்கவும். குங்குமப்பூ. சாதிக்காய், பத்திரி அரை பலம், பசும்பால், தேங்காய்ப்பால், வெள்ளாட்டுப்பால், இளநீர் படி வீதம் சட்டி யிலிட்டுக் காய்ச்சவும். கொதி வரும் பொழுது 1 படி நல்லெண்ணெய் விட்டு, சூரணத்தைத் தூவி மெழுகுபதத்தில் கோரோசனை 2 பலம் போட்டு முன் குருவில் வராகன் பத்து போட்டுக் கிண்டி, எடுத்து வழித்து வைக்கவும்.

**தீரும்பிணிகள்:**

நீரிழிவு, நீர்பேதம், நாவரட்சி, பிளவை மேகம்.

## குன்மங்கள் தீர லேகியம்

**சரக்குகள் :**

பனங்கருப்பட்டி
வெங்காரம்
சாரம்
வெடியுப்பு
சவுக்காரம்
வளையலுப்பு
இந்துப்பு
பொறிகாரம்
சூடன் உப்பு

**செய்முறை:**

அமுரியில் கருப்பட்டியைக் கரைத்து அடுப்பேற்றிக்காய்ச்சிப் பாகுபதத்தில் எடுத்துக்கொள்ளவும். பின் உப்புகளை பொடி பண்ணி பாகின்மேல் கொட்டிக் கிண்ட மெழுகு பதம் வரும்.

**தீரும்பிணிகள்:**

சத்திகுன்மம், நெஞ்சடைப்பு, பித்தகுன்மம், எரிகுன்மம், குந்திரிகவாயு, சூதகவலி, குறுக்கல்லி, திரட்சி மூர்ச்சை, 10 நாட்கள் உண்ணவும்.

## மூலம் தீர லேகியம்

**சரக்குகள்:**

கருணைக்கிழங்கு
திரிபலை
முப்பு

**செய்முறை:**

கருணைக்கிழங்கை அமுரியில் வேக வைக்கவும். திரிபலையைப் பொடி செய்து முப்பும்சேர்த்துக் கிழங்குடன் பிசைந்து, அடுப்பிலேற்றிக் கிண்டவும். நல்லெண்ணெய் விட்டு அளவாய் மெழுகுபதமாய் எடுக்கவும்.

**அளவு:**

நெல்லிக்காய், காலை, மாலை

**தீரும்பிணிகள்:**

மூலம், வெளிமூலம், சீழ் மூலம், இரத்த மூலம், வாயு. ஒன்பது மூலங்களும் தீரும்

## பாண்டு தீர லேகியம்

| | |
|---|---|
| பசுவின் கோமயம் | — பதக்கு |
| 100 வருடக்கிட்டம் | — |
| பிஞ்சு கடுக்காய் | — 10 எண். |
| கடுக்காய் | — 2 பலம் |

**செய்முறை:**

கிட்டத்தைப் பொடி செய்து கோமயத்தில் போடவும். கடுக்காயை 4 நாட்கள் ஊறவைக்கவும். பின் வடிகட்டி, அடுப்பில் 5 நாட்கள் காய்ச்சி 8 ல் 1 பங்காக்கி, சமஅளவு கரிசாலை சாறு விடவும். சுக்கு, திப்பிலி, மிளகு வகைக்கு 4 பலம். இந்துப்பு வெங்காரம் வகைக்கு 1 பலம் எடுத்துக்கொள்ளவும் திரிகடுகைச் சூரணம்செய்து துணியால் சலித்துக்கொள்ளவும் அடுப்பேற்றி சாறுகளைக் கொதிக்க வைக்கவும். கொதிவரும் போது சூரணப்பொடியைப் போடவும் வெங்காரத்தைப் பொரித்துக் கொண்டு, இந்துப்பைப் பொடி செய்து கொண்டு கூடப்போடவும். நல்ல வெல்லம் 8 பலம் கொண்டு வந்து கரைத்து வடிகட்டிச் சேர்க்கவும். பாகு பதத்தில் கிண்டி. பக்குவத்தில் எடுத்துவைக்கவும்.

**அளவு:**

தான்றிக்காய் காலை, மாலை

**விலக்கு:**

புளி, புகை தள்ளவும். இச்சாபத்தியம்

## சூலை. கிரந்தி தீர லேகியம்

**சரக்குகள் :**

| | |
|---|---|
| நொச்சியிலைச்சாறு<br>சுக்கு<br>திப்பிலி மூலம் | ½ பலம் |
| கருஞ்சீரகம்<br>கஸ்தூரிமஞ்சள்<br>பூண்டு | 2 பலம் |

**செய்முறை :**

சாற்றை அடுப்பிலேற்றிச் சுண்டக்காய்ச்சவும். கடைச்சரக்குகளை இடித்துச் சூரணம் செய்து போடவும். பூண்டை அரைத்துச் சேர்த்து அரைக்கவும். லேகிய பதத்தில் தரவும்.

**விலக்கு :**

புளிப்பு, உப்பு நீக்கவும்.

## கசிகிற வாயு தீர லேகியம்

**சரக்குகள் ;**

| | |
|---|---|
| திரிகடுகு<br>பூண்டு<br>ஓமம்<br>சீரகம்<br>வட்டுக்கருப்பட்டி | 1 பலம் |
| கண்டங்கத்திரிவேர்க் கற்கம்<br>தூதுவளை வேர்க்கற்கம்<br>நல்லெண்ணெய் | எலுமிச்சங்காயளவு உழக்கு |

**செய்முறை :**

எல்லாவற்றையும் கலந்து அடுப்பில் ஏற்றிவைத்து நல்லெண்ணெய் உழக்கு விட்டு லேகியம் செய்யவும்.

**காலஅளவு :**

7 நாட்கள்

**தீரும்பிணிகள் :**

சூசிக வாயு தீரும்.

## தேங்காய் லேகியம்

| | | | |
|---|---|---|---|
| 1) | சுக்கு | — | 35 கி. (பலம்) |
| 2) | கருஞ்சீரகம் | — | 35 கி. (பலம்) |
| 3) | தாளிசபத்திரி | — | 35 கி. (பலம்) |
| 4) | சிறு இலவங்கப்பட்டை | — | 35 கி. (பலம்) |
| 5) | இலவங்கம் | — | 35 கி. (பலம்) |
| 6) | இலவங்கபபத்திரி | — | 35 கி. (பலம்) |
| 7) | ஏலரிசி | — | 35 கி. (பலம்) |
| 8) | சிற்றரத்தை | — | 35 கி. (பலம்) |
| 9) | பேராமுட்டி | — | 35 கி. (பலம்) |
| 10) | வால்மிளகு | — | 35 கி. (பலம்) |
| 11) | கடுகுரோகணி | — | 35 கி. (பலம்) |
| 12) | பீத ரோகணி | — | 35 கி. (பலம்) |
| 13) | வாளம் | — | 35 கி. (பலம்) |
| 14) | இந்துப்பு | — | 35 கி. (பலம்) |

| | | |
|---|---|---|
| 15) | பொட்டிலுப்பு | — 35 கி. (பலம்) |
| 16) | சயந்தனுப்பு | — 35 கி. (பலம்) |
| 17) | வளையலுப்பு | — 35 கி (பலம்) |
| 18) | மூங்கிலுப்பு | — 35 கி. (பலம்) |
| 19) | கல்லுப்பு | — 35 கி. (பலம்) |
| 20) | இரசம் | — 1.75 (½ வராகன்) |
| 21) | கந்தகம் | — 35 கி. (பலம்) |
| 22) | பூண்டு | — 35 கி. (பலம்) |
| 23) | தேங்காய் | — ஒன்று. |

**செய்முறை.**

சரக்குகளை இடித்து, விளக்கெண்ணெய், வெல்லப்பாகு இவற்றால் அரைத்துக் கொள்ளவும்.

**தீரும்பிணிகள்:**

வாயுத்தொல்லை தீரும்.

**குறிப்பு:**

இந்துப்பும், சயந்தனுப்பும் ஒன்றே. ஆனால் மூலபாடத்தில் வேறாகக் கூறப்பட்டுள்ளது.

**அளவு:**

1 கரண்டி வீதம் உட்கொள்ளவும்

**கால அளவு:**

40 நாட்கள் பத்தியம் காக்கவும்

## 274. அசீரணபேதி போக லேகியம்

| | |
|---|---|
| ஓமம் | — 105 கி. (3 பலம்) |
| பனை வெல்லம் | — 105 கி. (3 பலம்) |

பனை வெல்லத்தைச் சட்டியிலிட்டுக் காய்ச்சவும். ஓமத்தைப் பொடி செய்து போட்டுக் கிளறிப் பதத்தில் இறக்கவும்.

**அளவு:**

புன்னைக்காயளவு

**உணவு:**

மோர்ச் சோறு

## 275. இருமல் தீர லேகியம்

| | | |
|---|---|---|
| ஏலம் | — | 70 கி. (2 பலம்) |
| சீனி | — | 70 கி. (2 பலம்) |
| பசுவெண்ணெய் | — | 70. கி (2 பலம்) |

சீனி, வெண்ணெயைக்காய்ச்சி எடுத்துக்கொண்டு ஏலத்தைப் பொடி செய்து தூவவும்.

**அளவு:**

நெல்லிக்காயளவு, காலை, மாலை

## 276. கண்டங்கத்திரி லேகியம்

| | | |
|---|---|---|
| கண்டங்கத்திரி சமூலச்சாறு | — | 650 மி. (½ படி) |
| திராய்ச் சாறு | — | 650 மி. (½ படி) |
| வேப்பிலைச்சாறு | — | 325 மிலி. (கால் படி) |
| மிளகு | — | |
| திப்பிலி | — | |
| உள்ளி | — | |
| வசம்பு | — | 35 கி. (1 பலம்) |
| இந்துப்பு | | |
| கல்லுப்பு | | |
| ஓமம் | | |
| நேர்வாளம் | — | 17.5 கி. (அரை பலம்) |
| சதகுப்பை | — | 35 கி. (பலம்) |
| வெல்லக்கட்டி | — | 2 |
| பழையபுளி | — | 52.5 கி (1½ பலம்) |

கடைச் சரக்குகளை இடித்துத் தூளாக்கிச் சலித்துக் கொள்ளவும். சாற்றிலிட்டுக் கலந்து கொண்டு அடுப்பிலேற்றி எரித்துப் பதத்தில் எடுத்துக் கொள்ளவும்.

**அளவு:**

நெல்லிக்காயளவு

**தீரும்பிணிகள்:**

வயிறு பேதியாகும். கர்ப்ப வாயு, கர்ப்பக் கிராணி மலட்டுப் பூச்சி. கர்ப்பக் கிரந்தி, இரத்தக் கட்டிகள், சூசிக வாயு என்பன.

### இருமல் தீர (வேறு)

பருத்திக்கொட்டை உட்பருப்பு
வெந்தயம்
பசு நெய்

முன் இரண்டு சரக்குகளையும் காயவைத்துக் கொள்ளவும். சட்டியில் போட்டு, அடுப்பிலேற்றி வெதுப்பிக் கொள்ளவும். பின் எடுத்து, இடித்து, துணியால் சலித்துக் கொள்ளவும். பசுநெய்யைக் காய வைத்து, சூரணத்தைக் கொட்டிக் கலக்கவும்.

**அளவு:**

நெல்லிக்காய் காலை, மாலை.

**தீரும் நோய்:**

வெட்டை இருமல், உட்சுரம்.

### இருமல் தீர (வேறு)

| | |
|---|---|
| வல்லாரைச் சாறு | — 1 படி |
| சீனாக்கற்கண்டு | — 1 படி |

பொடி செய்த கற்கண்டைச் சாற்றில் கலந்து அடுப்பேற்றி எரித்துக் கொள்ளவும் தேன் பதத்தில் இறக்கிக்கொள்ளவும்.

**அளவு:**

கொட்டைப்பாக்கு, காலை, மாலை

## 277. கரிசாலை லேகியம்

| | |
|---|---|
| பொற்றலைக் கையான் சாறு | — 2.6 லி. (2 படி) |
| சிறுகீரைச்சாறு | — 1.3 லி. (படி) |

| | |
|---|---|
| கீழாநெல்லிச் சாறு | — 1.3 லி, (படி) |
| சிறுபடைச்சாறு | — 1.3 லி, (படி) |
| பொடுதலைச்சாறு | — 1.3 லி. (படி) |
| எலுமிச்சைச்சாறு | — 1.3 லி. (படி) |
| நெல்லிக்காய் | — 1.3 லி. (படி) |
| நாவல்பட்டை | — 175 கி. (5 பலம்) |
| கருங்காலி | — 175 கி. (5 பலம்) |
| அத்திப்பட்டை | — 175 (5 பலம்) |
| தென்னம்பூ நீர் | — 21.5 லி, (தூணி) |

பட்டைகளை இடித்துப் பொடியாக்கி நீரில் போடவும். கியாழம் வைக்கவும். 7 லி. (118 பங்கு) வரும் படியாகக் காய்ச்சிச் சாற்றில் சேர்க்கவும். மிளகு, மூள் கருணை வேர், அவுரி, சிற்றாமுட்டி வேர், பேரா முட்டிவேர், விலாமிச்சவேர் 105 கி (3 பலம்) 21.5 லி. (தூணை) நீரில் போட்டுக் கியாழமிடவும். 7 லி. வரும்படியாகக் குறுக்கவும். மண்டைவெல்லம் (8 பலம்) 250 கி. நல்லவெல்லம் 280 கி. (8 பலம்) பசும்பால் 5.2 லி. (4 படி) முன்சொன்ன சாற்றில் கலக்கவும் கரைத்துக் காய்ச்சவும். பாகு பதத்தில் ஏலம், கிராம்பு, சாதிக்காய், சாதிப்பத்திரி, சீரகம், குரோசாணி ஓமம், அக்ரகாரம், அதிமதுரம், தாளிச பத்திரி, கோட்டம், சிறு நாகப்பூ, கற்கடக சிங்கி, திரிகடுகு, திரிபலை 35 கி, (பலம்) வீதம் பொடி செய்து பாகில் தூவவும். பசுநெய் 650 மிலி. (½ படி) விட்டு, திரிலோக செந்தூரம் 35 கி. பலம்) மண்டூரம் (பலம்) 35 கி. இரண்டையும் தூவவும். மெழுகு பதத்தில் இறக்கவும்.

**அளவு:**

புன்னைக் காய்

**காலஅளவு:**

மண்டலம்.

**தீரும்பிணிகள்:**

பாண்டு, பித்தவெட்டை, கைகால் எரிச்சல், காந்தல் எரிவு. மயக்கம், தூக்கம், வீக்கம் நீர்ச் சுருக்கு, கிராணி அரோசகம் என்பன.

## 278. கண்டங்கத்தரி லேகியம் (வேறு)

| | | |
|---|---|---|
| கண்டங்கத்தரிச்சாறு<br>இஞ்சிச்சாறு<br>நெருஞ்சிச்சாறு<br>முள்ளங்கிச்சாறு<br>எலுமிச்சம் பழச்சாறு | | 1 படி வகைக்கு |
| பசும்பால் | — | 2 படி |
| பனைவெல்லம் | — | ½ பலம் (17.5 கி.) |
| திரிகடுகு<br>சீரகம்<br>ஏலம்<br>வாய் விளங்கம்<br>கிராம்பு<br>தாளிச பத்திரி | | 1 பலம் (35 கி.) |

**செய்முறை :**

சாறுகளையும், பால், பனை வெல்லம் முதலியனவற்றைக் கலந்து கொண்டு அடுப்பேற்றிக் காய்ச்சவும். பாகு வரும் போது கடைச்சரக்குகளைப் பொடி செய்த சூரணத்தைத் தூவி, பசு நெய் அரைப் படிவிட்டுத் தேன் கால் படி விட்டுக் கிண்டவும், மெழுகு பதத்தில் இறக்கிக் கொள்ளவும்.

**அளவு :**

1 மண்டலம், காலை, மாலை உண்ண.

**தீரும்பிணிகள்:**

வாயு, பித்தம், வாந்தி, சூலை, இசிவு.

**வேறு**

நெய் உழக்கு விட்டுமெழுகுபதமாய்க் கிண்டி வாங்கிப் பாக்களவு காலை, மாலை1 மண்டலம் உண்ணவும்.

**தீரும்பிணிகள்:**

வாதம், வாயு, வெப்பம், பித்தவாயு, வலிக்கடுப்பு, எரிச்சல் பேசி பொருமல், வாயு கிராணி, அத்திசுரம், அத்தி வெட்டை தீரும்.

## 279. குன்மம் தீர லேகியம்

கருப்பட்டி
காரம்
சாரம்
வெடியுப்பு
சவர்க்காரம்
வளையலுப்பு
இந்துப்பு
பொரிகாரம்
சூடனுப்பு

கருப்பட்டியை அமுரியில் கலந்து கொண்டு கரைத்து எரிக்கவும். பாகு பதத்தில் ஏனைய உப்புகளைப் போடவும். போட்டவுடன் மெழுகு பதம் வரும்.

**அளவு:**

10 நாட்கள் உண்ண

**தீரும்பிணிகள்:**

சத்தி குன்மம், பித்த குன்மம், எரிகுன்மம், நெஞ்சடைப்பு, சூதக வலி, மூர்ச்சை என்பன தீரும்.

## 280. வல்லாதி லேகியம்

| | |
|---|---|
| திரிகடுகு (சுக்கு மிளகு, திப்பிலி அரத்தை வாய் விளங்கம் கொத்தமல்லி சீரகம் கருஞ்சீரகம் சன்னலவங்கப்பட்டை செங்கதாரிப்பட்டை சதகுப்பை வால்மிளகு | 1.32 கி. (வராகன்) |
| பரங்கிப்பட்டை | — 175 (5 பலம்) |
| அமுக்ராக் கிழங்கு | — 35 கி. (பலம்) |

## 281. பித்த வெட்டை லேகியம்

| | | |
|---|---|---|
| பொன்னாங்கண்ணிசாறு | — | ½ படி |
| தேங்காய்ப்பால் | — | ½ படி |
| சர்க்கரை | — | (2 பலம்) 70. கி. |
| நெல்லிவிரை | — | 3 வராகன் |
| கோக்கினகாய்[1] | — | 3 வராகன் |

4 மருந்துகளையும் கழு நீரில் அரைத்துக் கலந்து சர்க்கரை கூட்டி, அடுப்பேற்றிக் காய்ச்சவும் லேகியமாய்க் கிண்டவும்.

**அளவு:**

கடுக்காய் காலை, மாலை. உண்ணவும்.

**தீரும்நோய்கள்:**

பித்தவெட்டை, பித்தகுன்மம், சூலை. எரிவு, கைகால் எரிவு, நாபிப்டுண், வெல் காண்கிறது. கைகால் அதிக வெப்பம்

## 282. மூலம் தீர மெழுகு

கருணைக்கிழங்கு
திரிபலை
முப்பு
நல்லெண்ணெய்

முதலில் கருணைக் கிழங்கை அமுரியிலிட்டுவேகவைக்கவும். திரிபலையைப் பொடிசெய்து கிழங்குடன் சேர்த்துப் பிசைந்து முப்பு சேர்க்கவும். அடுப்பிலேற்றி எண்ணெய் அளவாக விட்டு. மெழுகு பதமாய்க் கிண்டவும்.

**அளவு :**

நெல்லிக்காய், அளவு

**தீரும்பிணிகள்:**

காலை, மாலை மூலம், வெளி மூலம், சீழ்மூலம், இரத்த மூலம் வாயு ஒன்பதும் தீரும்.

---

1. இன்னதென்று தெரியவில்லை.

## 283. சயம் தீர மெழுகு

| | |
|---|---|
| தூதுவளை<br>கண்டங்கத்திரி | பொடி செய்து கொள்ளவும். |

அமுரியைக் கலந்து சூரியபுடம் 10 முறை வைக்கவும், 1/8 பங்கு சர்க்கரை முப்பு சேர்த்து, பசுநெய் கலந்து எரித்து எடுக்கவும். பொடியைக் கலந்து கொண்டு மெழுகு பதத்தில் எடுக்கவும்.

**அளவு :**

நெல்லிக்காயளவு.

## 284. சௌபாக்கிய சுண்டி லேகியம்

| | |
|---|---|
| சுக்கு<br>செம்முள்ளிச்சாறு | 140 கி. (4 பலம்) |
| சந்தனசிராய்<br>முருங்கை இலை<br>கரிசாலை<br>செருப்படி<br>தக்கோலம்<br>காத்தொடி[1]<br>குகை நீறு<br>வாலுளுவை<br>இலவணம்<br>வாய்விளங்கம்<br>நெல்லிமுள்ளி<br>தான்றிக்காய்<br>திப்பிலிமூலம்<br>செவ்வியம்<br>திப்பிலி<br>அமுக்ராகிழங்கு<br>கண்டங்கத்தரி | 17.5 கி. (½ பலம்) |
| நிலைப்பனைக் கிழங்கு<br>நன்னாரிவேர்<br>பொன்முசுட்டைவேர் | 70 கி. (2 பலம்) |

1. இன்னதென்று தெரியவில்லை.

**செய்முறை:**

சுக்கை சுத்தி செய்து கொண்டு நறுக்கி சாறுகளில் ஊற வைத்து நிழலில் உலர்த்தவும். பொடி செய்யவும் கடைச் சரக்குகளை இளவறுப்பாக வறுத்துக்கொண்டு சூரணம் செய்யவும். கிழங்கு வகைகளையும் வெல்லப்பாகு விட்டரைத்து விடிய ஐந்து நாழிக்கு தன்மை.

**(வேறு)**

| | |
|---|---|
| ஏலம் | |
| வாய்விளங்கம் | |
| மிளகு | |
| நற்சீரகம் | |
| பூண்டு | 35கி. (பலம்) |
| வாளம் | |
| திப்பிலி | |
| திப்பிலிமூலம் | |
| ஓமம் | |
| கிராம்பு | |

| | |
|---|---|
| சதகுப்பை | — 175 கி. (5 பலம்) |
| கொத்தமல்லி | — 105 கி. (3 பலம்) |
| சுக்கு | — 280 கி. (8 பலம்) |
| நா. சர்க்கரை | — 910 கி. (26 பலம்) |
| பசும்பால் | — 1.3 லி. (படி) |
| தேன் | — 1.950 லிட். (1 படி) |

**செய்முறை:**

தண்ணீரில் பால், சர்க்கரையைக் கலந்து அடுப்பிலேற்றி எரித்துப் பாகுபதத்தில் சூரணப் பொடியைத் தூவவும். முன்னதாகக் கடைச்சரக்குகளைச் சூரணம் செய்ய வேண்டும். பின் நெய் விட்டு கிண்டவும். கடைசியாகத் தேன்விட்டு இறக்கவும்.

**அளவு :**

புன்னைக்காய்

**கால அளவு:**

காலை, மாலை, மண்டலம்.

**தீரும்பிணிகள்:**

வாயு, உதிர வாயு, ரத்த வாயு, காச சுவாசம் சர்வாங்க வாயு.

**பத்தியம்:**

கரப்பான் பண்டங்கள் ஆகாது.

**(வேறு)**

| | |
|---|---|
| பசும்பால் | — 5.2 லி. (4 படி) |
| தண்ணீர் | — 5.750 லி. (4½ படி) |
| சீனி | — 420 கி (12 பலம்) |
| ஏலம் | — (5 வராகன்) 22 கி. |
| வாலுளுவை அரிசி | |
| வாய்விளங்கம் | |
| திரிகடுகு | |
| சீரகம் | |
| ஓமம் | |
| கையான்சூரணம் | |
| கிராம்பு | |
| கரிய பவழம் | |

இவைகளைக் கலந்து அடுப்பிலேற்றி எரித்து லேகியம் செய்து கொள்ளவும்.

**அளவு:**

புன்னைக்காய்

**கால அளவு:**

காலை, மாலை, மண்டலம்

**தீரும் பிணிகள்:**

வாயு, உதிரவாயு, காச சுவாசம், சர்வாங்க் வாயு,

**விலக்கு:**

கரப்பான் பண்டங்கள்

(வேறு)

| | | |
|---|---|---|
| பசும்பால் | — 10.4 லி. (8 படி) | |
| தண்ணீர் | — 1.3 லி. (படி) | |
| சீனி | — 2600 கி. (80 பலம்) | |
| வாய்விளங்கம் | 35 கி. (பலம்) | |
| திரிகடுகு | | |
| ஏலம் | | |
| வாலுளுவை அரிசி | | |
| சீரகம் | | |
| ஓமம் | | |
| கையான் சூரணம் | | |
| கரிய பவழம் | | |
| கிராம்பு | | |
| சதகுப்பை | — 17.5 கி. (5 பலம்) | |
| கொத்தமல்லி | — 70 கி. (2 பலம்) | |
| திரிபலை | — 210 கி. (6 பலம்) | |
| சுக்கு | — 280 கி. (8 பலம்) | |

**செய்முறை:**

சூரணம் பண்ணி, களியாகக் கிண்டித் தின்னவும்.

**உட்கொள்ளத் தீரும் பிணிகள்:**

சுக்கிலம், வாயு, சூசிக சன்னி, உதிர தோடம்.

**வேறு**

| | |
|---|---|
| தண்ணீர் | — 2.6 லி. (2 படி) |
| பால் | — 5.2 லி. (4 படி) |
| சர்க்கரை | — 1.650 கி. (50 பலம்) |
| ஏலம் | 35 கி. (பலம்) |
| இலவங்கம் | |
| விளாவரிசி | |
| திரிகடுகு | |
| சீரகம் | |
| கிராம்பு | |
| ஓமம் | |
| கையான்பொடி | |
| சதகுப்பை | — 175. கி (5 பலம்) |
| கொத்தமல்லி | — 105 கி. (3 பலம்) |

**செய்முறை :**

முதலில் கூறப்பட்ட மூன்றையும் கலந்து லேகியமாக்கிக் கொண்டு பின் கூறப்பட்ட கடைச் சரக்குகளைச் சூரணம் செய்து லேகியத்தில் தூவவும்.

**தீரும்பிணிகள் :**

எல்லாவிதமான சுரங்கள், பீலிகை, மலக்கட்டு, அரோசகம், அக்னி மந்தம், கசியும் வாயு, என்பன தீரும். மண்டலம் உண்ணவும்.

**குறிப்பு:**

முதலில் சொல்லப்பட்ட சௌபாக்கிய சுண்டிக்குக் கீழ் கண்ட சூரணம் துணை மருந்தாகக் கொள்ளலாம்.

| | |
|---|---|
| எருக்கவேர்ப்பட்டை | — 35 கி (பலம்) |
| கண்டங்கத்தரி வேர் | — 35 கி. (பலம்) |
| முட்காவேளை | — 35 கி. (பலம்) |
| சுக்கு | — 35 கி. (பலம்) |
| திப்பிலி | — 35 கி. (பலம்) |
| செல்லியம் | — 35 கி. (பலம்) |
| சித்திரமூலம் | — 35 கி. (பலம்) |

பொடி செய்தபின் 1 கடி அளவு 2.6 லி. (2 நாழி) நீரில் 336 மி. (உழக்கு) காய்ச்சிக் குறுக்கவும். வசம்பு, சுட்ட சாம்பல், திப்பிலி, மூலப்பொடி, கலந்து தரவும். சவுபாக்கிய சுண்டி லேகியம் தின்று சற்று நேரம் பொறுத்துக் குடிநீர் குடிக்கவும்.

**தீரும் பிணிகள்:**

சகல வாத சன்னி, விரணம், சுக சன்னி

## வேறு

சுக்கு 4 பலம் எடுத்துக் கொண்டு சுத்தி செய்தபின், நறுக்கி, செம்முள்ளி, செந்திராய், முருங்கை இலை, கரிசாலை, செருப்படி, காத்தொடி. இந்த வகைச் சாற்றில் தனித்தனியே ஊறவிடவும். உலர்த்திச்[1] சூரணம் செய்து, துணிபால் சலித்து எடுத்துக் கொள்ளவும்.

---

1. இன்னதென்று புரியவில்லை

தக்கோலம்
குகைநீறு
வாலுளுவை
லவணம்
வாய்விளங்கம்
நெல்லிமுள்ளி
தான்றிக்காய்
திப்பிலி மூலம்
செவ்வியம்
திப்பிலி

¼ (பலம்)

இளவறுப்பாய் வறுத்து இடித்துத் துணியில் சலித்துக் கொள்ளவும்.

| | |
|---|---|
| கண்டங்கத்திரி<br>நிலப்பனைக் கிழங்கு<br>பொன்முசுட்டை | 2 பலம் 70 கி. |

இடித்துத், துணியில் சலித்துக் கொண்டு எல்லா வகைச் சூரணத்தையும் கலந்து கொண்டு, சம அளவு சர்க்கரை சேர்த்து, பசும்பாலில் கரைத்து. அடுப்பிலேற்றிக் கிண்டி, பதத்தில் எடுக்கவும்.

**அளவு :**

ஒரு விரலளவு

**தீரும்பிணிகள் :**

மூலம், மாறாத பிரமியங்கள், சூலை, அக்கினி, மந்தம் வாயூறல், பித்தம், சுக்கிர வாயு, அந்திர வாயு, அண்டரோகம்.

**விலக்கு :**

கரிப்பு, புளிப்பு, புகையிலை

**வேறு**

பசும்பால் — 5.2 லி. (4 படி)

தண்ணீர் — 5.750 லி. (4½ படி)

| | |
|---|---|
| சர்க்கரை | — 420 கி. (12 பலம்) |
| ஏலம் | |
| வா லுளுவை அரிசி | |
| திரிகடுகு | |
| வாய்விளங்கம் | |
| சீரகம் | — 22கி. (5 வராகன்) |
| ஓமம் | |
| கையான்தகரை சூரணம் | |
| கிராம்பு | |
| கரியபவழம் | |
| சத குப்பை | — (¼ பலம்) |
| கொத்தமல்லி | — (½ பலம்) |
| கடுக்காய் | — (½ பலம்) |
| தான்றிக்காய் | — (½ பலம்) |
| நெல்லிப்பருப்பு | — ½ பலம்) |
| பூண்டு | — ½ பலம்) |
| சுக்கு | — (2 பலம்) |

**செய்முறை:**

முதலில் தண்ணீரையும், பாலையும் சேர்த்து முறியாமல் காய்ச்சி சர்க்கரையைக் கலந்து பாகு செய்து கொள்ளவும். சூரணத்தைத் தூவிக் கிண்டி மெழுகு பதத்தில் எடுத்து வைத்துக்கொள்ளவும்.

**கால அளவு:**

காலை, மாலை இருவேளை

**அளவு:**

கொட்டைப்பாக்கு அளவு

**தீரும் பிணிகள்:**

சூசிக வாயு, சூசிக சுரம், கிராணி, வாயு, பொருமல் உடல் வலி, கைகால் எரிவு, விட பாகம், அக்கினி மந்தம் உடல் தினவு தீரும்.

## 285. நெல்லிக்காய் லேகியம்

| | |
|---|---|
| நெல்லிச்சாறு | — 10.4 லி. (8 படி) |
| பழைய வெல்லம் | — 3850 கி. (110 பலம்) |
| சிவதை | — 140 கி. (4 பலம்) |
| பசுநெய் | — 1.3 லி. (நாழி) |

ஏலம்
இலவங்கம்
நாகேசரம்
இலவங்கப்பத்திரி
எட்டி
திரிகடுகு
மதுகம் தாவு
கடுகுரோகணி — 35 கி. (பலம்)
கண்டு பரங்கி
சந்தனம்
வெட்டிவேர்
தேவதாரம்
வில்வப்பழம்

இடித்துச் சூரணம் செய்து கொள்ளவும். திராட்சை, பேரீச்சை, இந்துப்பு, இலவங்கப்பட்டை, இலவங்கப்பத்திரி, கிச்சலிக் கிழங்கு வகைக்கு 9 கி. (¼ பலம்) பொடி செய்து சேர்க்கவும். லேகியம் செய்யவும்.

**அளவு:**

4.4 கி (வராகன்) காலை, மாலை உண்ணவும்.

**தீரும் பிணிகள்:**

ஆம்பல் பித்தம், வாந்தி, விகாரம், பைத்தியம், தலை கிறுகிறுப்பு, அரோசகம் என்பன.

## 286. பித்த வெட்டை தீர

| | |
|---|---|
| பொன்னாங்காண்ணிச் சாறு | — 650 மி. (½ படி) |
| தேங்காய்ப்பால் | — 650 மி. (½ படி) |
| சர்க்கரை | — 70 கி. (2 பலம்) |
| நெல்லிக்காய் | — 1.40 கி. (4 வராகன்) |

நெல்லிக்காயை கழுநீரிலரைத்துக்கொண்டு ஏனைய சாறு, சர்க்கரையை கலக்கவும் எரித்து, பதத்தில் எடுக்கவும்.

**அளவு:**

காலை, மாலை உட்கொள்ளவும், கடுக்காயளவு.

**தீரும் பிணிகள்:**

பித்தவெட்டை, பித்த குன்மம், சூலை, எரிவு, கை கால், எரிவு, நாபிப் புண்

---

1. எட்டி இதில் சேர்க்கப்படுவது வியப்பாக உள்ளது.
2. எது என்று புரியவில்லை.

# புற மருந்துகள்

## காது நோய்க்குச் சொட்டு மருந்து

காஞ்சிரம்பட்டை வேர் }
ஊமத்தங்காய் }

பசு வெண்ணெயிலிட்டு எரித்து பின் ஆறிய பின் காதில் விடவும். தலையிலும் தேய்க்கவும். சீழ் நிற்கும். இது கை கண்டது ஆகும்.[1]

## (வேறு)

வெங்காயம், பூண்டுச்சாறு, மாட்டு ரத்தக்கலந்து சுட வைத்துக்காதில் விட, காது கேட்கும்.

## இரத்த பித்தம் தீரப்பொடி

தண்ணீர் விட்டான் கிழங்கு }
நன்னாரிவேர் }
சந்தனம் }
சிறுகீரை வேர் }
மாதுளம்பூ }

இடித்துத் தாய்ப்பாலில் இட்டு மூக்கிலிடவும்

## இரத்த வாந்தி தீரப் பற்று

கோழி முட்டை வெண் கருவில் சுண்ணாம்பு கூட்டி மெல்லிய சீலையில் விட்டு இரு நெரி அசலில் போடத் தீரும்.

## (வேறு)

முசுட்டை இலையை சட்டியில் வறுத்து அவித்துத் தயிர் விட்டுப் பிசைந்து தலையில் மூன்று நாள் கட்டத் தீரும்.

---

1. இன்னதென்று தெளிவாக இல்லை.

### மூலம் தீரப் புகை

பிரண்டை சமூலத்தை வேக வைத்து ஆசனத்தில் புகை பிடிக்கவும்.

### (வேறு)

ஊமத்தை
பூண்டுத்தோல்
கம்பளி மயிர்
உலர்ந்த மரவட்டை

நெருப்பிலிட்டு ஆசனத்தில் புகைபடக் காட்ட மூலக் கடுப்புத் தீரும்.

### புண் தீரப் பற்று

தாழையைப் பொடி செய்து காயத்திற்குப் போடவும். தூய்மை கெட்டதால் இருக்கின்ற புண்ணுக்குப் போட குண மாகும்.

### பிளவை தீரப் பற்று

எள்ளை வறுத்தரைத்து மேலே போடவும்.

### (வேறு)

| | |
|---|---|
| எள் | 2 பங்கு |
| வெல்லம் | 3 பங்கு |
| வேப்பங்கொழுந்து | 1 பங்கு |

அரைத்து தேன், நெய்யில் குழைத்துப் பூசவும். கண் வாங் கும்.

### குழிவாழைப் புண் தீரப் பற்று

கிளிஞ்சல் சுண்ணாம்பை புண்மேலே வைத்துச் சீலையால் கட்டவும். தண்ணீர் ஊற்றிக் கொண்டு வர, மேலே பிடித்து இருக்கும் புண் ஆறிப்போகும். சுண்ணாம்பு கரைந்துபுண் ஆறிப் போகும்.

**குறிப்பு:**

சுண்ணாம்பு வெந்து போகும் நிலையையும் ஏற்படுத்தும் எனவே கவனமாகச் செய்யவும்.

## பிளவைதீரப் பற்று

ஐவிரல்சங்கை கொல்லன் உலையில் ஊதி கீழா நெல்லிச் சாறு விட்டுக் குழப்பிப் பிளவை மேல் போடவும்.

சலங்கொண்டால் துளசிச் சாற்றை வட்டியில் பிழிந்து செம்புக் காசு கொண்டு இழைத்து அந்தத் தன்மையை எடுத்துப் போடவும்,

புளி மடல் இலையை வாட்டிக் கட்டவும்.

## இரத்த மூலம் தீரக்களி

| | | |
|---|---|---|
| சாதிக்காய் | } | வராகன் |
| வெள்ளைக்கற்கண்டு | | |
| சீரகம் | | |

பொடித்து வெண்ணெயை உருக்கிக்களிக் கிண்டித்தின்னவும்.

## உண்ணாக்குத்தீரக் களி

| | | |
|---|---|---|
| கழுதைத்தும்பை இலை | } | சம அளவு |
| புழுங் கரிசி | | |

அரைத்து எலுமிச்சங்காயளவு எடுத்து பசு நெய்யில் கிளறிக் கிண்டித்தின்று வரவும்.

## இடுப்பு நோவுத்தீரக்களி

| | |
|---|---|
| பருத்திக்கொட்டை | — படி |
| உளுத்தமாவு | — 1 படி |
| வெல்லம் | — 5 பலம் |

**செய்முறை:**

பருத்திக் கொட்டையை இடித்து உளுத்தமாவுடன் சேர்த்துக் கொள்ளவும். நல்லெண்ணெய் விட்டு, வெல்லம் சேர்த்துக் களியாகக் கிண்டி பாக்களவு உட்கொள்ள இடுப்பு நோவு குணமாகும்.

## பெரும்பாடு தீரக் களி

**நோய் விளக்கம்:**

வாயால் இரத்தமாய் சாய்க்கும்,

சுட்டிச்சாரணைக் கிழங்கு
மூக்கரட்டைச்சமூலம்
குறுவை அரிசி மா

கலந்து கொண்டு களி கிண்டித் தின்னத் தீரும்.

**சிரங்கு தீர**

சவுட்டு மண் | அரைத்துப் பூசவும்
சந்தனம் |

பின் இலுப்பைப் புண்ணாக்குப் போட்டுத் தேய்த்துக் குளிக்கவும்.

**(வேறு)**

அரசஞ் சருகை சுட்டு எடுத்து சாம்பலில் சிறுநீரைக் குழைத்துப்பூச சிரங்கு அரிப்பு நீங்கும். புண்ணுக்கு இப் பொடியைத் தூவ ஆறும்.

**துடி வாதம் தீரப் பூச்சு**

**நோய் விளக்கம்:**

துடையில் நடக்க ஒட்டாது.

**சரக்குகள்:**

புற்றுமண்
நண்டு தோண்டிய மண்
உவர்மண்
சுண்ணாம்பு
கோழிமுட்டையில் வெள்ளைக்கரு
விளக்கெண்ணெய்

**செய்முறை;**

முதலில் எல்லா வகை மண்ணையும், சுண்ணாம்பையும், அரைக்கவும், கோழி முட்டையின் வெண்கரு, விளக்கெண்ணெயில் கலந்து கொண்டு அடுப்பேற்றிக் கொதிக்க வைத்துப் பின் எடுத்துப் பூசவும்.

### கால் புற்றுத் தீரப் பூச்சு:

**சரக்குகள்:**

ஆலம் விழுது
நண்டு சிரங்கை ஓடு
சுண்ணாம்பு
விளாங்காய்

**செய்முறை:**

ஆலம் விழுதை முனை கிள்ளி, நண்டு சிரங்கை ஓட்டி விட்டுக்கலக்கவும். சுண்ணாம்புடன் சேர்த்துத் தண்ணீர்விட்டுக் கலக்கவும். தண்ணீர் தெளிந்தவுடன் கால் புற்றிலிட்டுவரவும். இரண்டு வேளை செய்யவும். புற்று கழண்டு விடும்.

### வீக்கம் தீரப்பூச்லி

தோலுக்கு மேற்பட்ட வீக்கத்திற்கு கோவையிலை சாற்றில் கொளுத்தி நீர் போட்டு நன்றாய் அரைத்துப் பூசவும்.

### எல்லா வகை மேகங்களுக்கும் விரேச்சனம்

**சரக்குகள் :**

பசுவின் பால் — ½ படி
தண்ணீர் — ½ படி
நிலாவாகை —

காய்ச்சி மூன்று நாட்கள் குடிக்கவும்.

**விலக்கு:**

மூன்று நாள் விரேச்சனத்தில் மேகங்கள் அற்றுவிழும்.

### (வேறு)

**சரக்குகள்:**

நிலவாரைக் கற்கம் — எலுமிச்சங்காய் அளவு
மிளகு — துட்டெடை
வெங்காயம் — 2 எண்
பூண்டு — 2 எண்

வறுத்தரைத்து விளக்கெண்ணெயில் குழப்பி உண்ணவும். குமட்டினால் சர்க்கரை சிறிது வாயில் போட்டுக் கொண்டு உண்ணவும்.

**தீரும் பிணிகள்:**

மேகம் தீரும். பூச்சி விழும். சீழ்கள் விழும். பித்தம் பேதலிக்கும். அனைத்து வகை வெட்டை மாறும். உடல் நன்றாக இருக்கும்.

**(வேறு)**

**சரக்குகள்:**

| | |
|---|---|
| கடுக்காய் | — 1 பங்கு |
| சாதிலிங்கம் | — 2 பங்கு |
| நேர்வாளம் | — 8 பங்கு |

**செய்முறை:**

கூட்டியரைத்து குண்டுமணி அளவு உருண்டை செய்து கொள்ளவும்.

**உண்ணும் முறை:**

| | |
|---|---|
| வெல்லம், தேன், நெய் | — 1 உருண்டை |
| அதிகம் பேதியாக | — குளிர்ந்த நீர் குடிக்கவும் |
| பேதி நிற்க | — வெந்நீர் குடிக்கவும் |

**(வேறு)**

**சரக்குகள்:**

முந்திரிகைப்பழம்
பேரீச்சம்பழம்
சீனா கற்கண்டு
நேர்வாளப்பருப்பு
} சம அளவு

அரைத்துச் சுண்டைக்காயளவு உண்ணவும்.

## பிணிகள் பட்டியல்

1) அரணைக்கடி
2) அண்டவாதம்
3) அண்டவீக்கம்

4) அடிவயிற்று இசிவு
5) இருமல்
6) இரத்த பித்தம்
7) இரத்த வாந்தி
8) இரத்த காசம்
9) இரத்த சீதம்
10) உப்பு மீறினால்
11) உடல் சூடுதீர
12) உள்நாக்கு வளர்ச்சி கரைய
13) கர்ப்ப வீக்கம்
14) கர்ப்ப விப்புருதி
15) கலிசை
16) கல்விழை
17) கண்டமாலை
18) கண்நோய்
19) கழிச்சல்
20) காதுவலி
21) காசம்
22) காமாலை
23) கரப்பன், கபம்
24) கக்குவான்
25) கணம்
26) கபால சூலை
27) கழுத்துவலி
28) காசம்
29) காமாலை
30) காதுவலி
31) காயம்
32) கிரந்தி, கிருமி
33) கீரிப்பூச்சி
34) குன்மம்
35) குட்டம்
36) குந்தம்

37) குடைச்சல்
38) குடல் வேக்காளம்
39) குத அரிப்பு
40) குழிவாழை
41) குடல்வாதம்
42) கெட்ட சதை வளர்ச்சி
42) கொண்டை வாதம்
43) அதிசாரம்
44) அசீரணபேதி

## 287. கண் மை

வெள்ளை சாற்றரணைவேர் இதனை சிறுக நறுக்கி வெள்ளாட்டு நீரில் ஊற வைத்து நிழலில் உலர்த்திக் கொள்ளவும்.

நீர் பாயும் கண் — தேனில் உரைத்துப் போடவும்

தினவு நீங்க — கையான் சாற்றில் உரைத்துப் போடவும்.

திமிர்காசம் — தான்றிக்காய் சாற்றில் சுக்கு, புனுகு, பச்சரிசிசாறு,

புளிச்ச கண் — அரைத்தகீரை வெந்த சாறு

வெள்ளெழுத்து — வெள்ளை காக்கட்டான் சாறு

கண் புழு வெட்டு — மாவிலங்கவேர்ச் சாறு, தாய்ப்பால்

**பயன் :**

புழு சாகும்.

### காமாலை தீரப் பற்று

சிற்றாமணக்கு விரையை தாய்ப்பாலில் அரைத்துக்கண்ணில் விட காமாலை தீரும்.

**பாடல் (வேறு)**

வெய்ய பிரமி ஒன்றாகும்
வெள்ளைக் குன்றி இரண்டாகும்
துய்ய வெங்காரம் மூன்றாகும்
துலங்கு சார்வேளை நான்காகும்
மயிலது அஞ்சாகும் மான எலுமிச்
சன் ரசம் விட்டரைத்து
பைய கண்ணிலிடுவாய் படலம்
தொன்னூற்றாறு உடனே போகும்

**பொருள்:**

| | | |
|---|---|---|
| பிரமி | — | 35 கி. (1 பலம்) |
| வெண்குன்றி | — | 70 கி. (2 பலம்) |
| வெங்காரம் | — | 105 கி. (3 பலம்) |
| சார்வேளை | — | 140 கி. (4 பலம்) |
| மயில்துத்தம் | — | 175 கி. (5 பலம்) |

இவற்றை எலுமிச்சைப் பழச்சாற்றில் அரைத்துக் கொண்டு மெதுவாகக் கண்ணிலிட படலம், 96 வகையான கண்நோய்கள் தீரும்.

**குறிப்பு:**

ஒன்று இரண்டு என்று கூறுவது இலக்கிய சுவையுடன் உள்ளது.

## 288. கலிக்கம்

மனிதன் மண்டை ஓடு
படிகாரம் }

இவற்றை நீரில் கழுவிக் கொண்டு பொரிக்கவும். தாய்ப் பாலில் இட்டு இழைத்துக் கண்ணில் போடவும்.

**தீரும்பிணிகள்:**

கண்வாயு, கண்புகைச்சல், கண்பாய்ச்சல், கண்குத்தல், கண் கடுப்பு கண் சதைபாதிப்பு, பூப்பட்டது, இரண சுக்கிரன் கண் விழுது, கண் காசம் என்பன தீரும்,

## 289. பற்று வாதம் தீரச் சாறு

**நோயின் தன்மை**

கெண்டைக்கல் கடுத்து நோதம்

மான் செவிக்கள்ளி இலையை வெதுப்பிப் பிழிந்து கெண்டைக்காலிலிட்டு முறுக்கவும்.

**(வேறு)**

சாதிக்காய், சாதிபத்திரி, கிராம்பு கருடபட்சிக்கல் தலா 3.5 (வராகன்) பொடி செய்து பசு நெய்யில் சாப்பிட்டுவிட்டு, உப்பு 1 பங்கு புளி 2 பங்கு அரைத்துப் பற்றுப் போடவும்.

**திமிர்வாதம், விரிசல்வாதம் சூலைதீரப்பற்று**

| | |
|---|---|
| இந்துப்பு<br>நவச்சாரம்<br>குந்திரிகம்<br>சுண்ணாம்புக்கல் | 17.5 கி. (1/2 பலம்)<br>பாக்களவு |

இவற்றை பெருந்தும்பைச்சாறு 336. மிலி. விட்டுக் கிளறிப் பூசவும்.

## 290. பிளவை தீர

ஐவிரல் சங்கு (ஊது சங்கு) எடுத்துக் கொள்ளவும். உலையிலிட்டு ஊதி. கீழா நெல்லிச்சாறு விட்டுக் குழப்பி இலைமேல் போடவும். சலங்கொண்டால் துளசிச்சாறு, காசிச்செம்பு கொண்டு இழைத்துப் போடவும்.

**(வேறு)**

புளியிலையை வாட்டிக் கட்டவும்.

**(வேறு)**

தேங்காயைத் திருகி, புண்ணில் கட்டவும், மூன்று நாட்கள் கட்டிய பின்னர். பழஞ்சோறு வைத்துக் கட்டவும்.

(வேறு)

### பிளவை தீரப் பூச்சு

| | | |
|---|---|---|
| வேப்பங்கொழுந்து | — | 1 |
| எள்ளு | — | 2 |
| நல்லவெல்லம் | — | 3 |

நிறுத்தி அரைத்து தேன் நெய்யில் குழைத்துப் மேலேப் பூசக்கண் வாங்கும்.

### சூலைபிடிப்புக்குப் புகை

நுணலைநெய்யை கீழ்நோக்கிப் பிடிக்க சூலைப்பிடிப்பு வாங்கும்.

### வாத சூலை தீரப்பற்று

சுக்கு
மிளகு
சாருக்கன்வேர்
கள்ளிக்கொழுந்து
காயாநெல்லி

வெள்ளாட்டுப்பால், சுண்ணாம்பு நீற்றின் நீர் இவற்றால் அரைத்து நீர் விட்டுப் பூசவும் தீரும்.

### பற்று (வேறு)

வசம்பு
சுக்கு
கடுகு
பெருங்காயம்
பூண்டு
குங்கிலியம்

வேலிப்பருத்திச் சாற்றாலரைத்துப் கொதிக்கவைத்து இறக்கி ஆறியபின் பற்றுப் போடவும்.

## 291. வாயு தீரப்பற்று

சந்தனம், ஆரத்திக் கற்பூரம் இரண்டையும் பன்னீர், விட்டரைத்து இடுப்பில் பற்றுப்போடவும்.

(வேறு) பற்று

சுக்கை சுத்தி செய்து 35 கி. (பலம்) சாராயத்தில் அரைத்துப் பற்றுப் போடவும்.

## 292. எலிக்கடி தீர

பேய்க்குமட்டிக் காயை பழைய மோரில் அரைத்துக் குழப்பி, முழங்காலில் தடவி, சூரிய ஒளியில் இருக்க வாயால் நஞ்சு நீங்கும்.

## 293. அரிப்புத் தீரப் பூச்சு

கற்றாழை இலைச் சருகு, அரளி இலைச் சருகு இவற்றைச் சாம்பலாக்கி ஆமணக்கெண்ணெயில் குழைத்துப் பூசவும்.

## 294. தொடை வாழை தீர

மாவிலங்க இலையை அமுரியிலரைத்துக் கட்டவும்.

(வேறு)

அடுப்புக்கரி, சோறு, இரண்டையும் அரைத்துக் கட்டவும்.

சூலைப்பிடிபபு

சுக்கு

(வேறு)

ஆளிவிதையை அரைத்துப் பற்றுப் போடவும்.

## 295. குழிவாழை தீர

கிளிஞ்சல் சுண்ணாம்பை எடுத்துக் கொண்டு, புண் மேல் வைத்துச் சிலை கட்டித் தண்ணீர் ஊற்றிக் கொண்டே இருக்கவும் புண் ஆறிப்போகும். சுண்ணாம்பும் கரையும்,

## 296. சிலந்திக்குப்பற்று

எள்ளை வறுத்தரைத்துப் பிளவைக்கு மேல் பூசவும்.

(வேறு)

அக்ரகாரம், வேப்பங்கொழுந்து, எள், நல்ல வெல்லம் நிறுத்தரைத்து தேன், நெய்யில் குழைத்து மேலே பூசினால் கண் வாங்கும்.

## 297. சூலை தீர

வசம்பு — 10 எண்ணிக்கை
சுக்கு
கடுகு
பெருங்காயம்
பூண்டு
குக்கில்

இவைகளை வேலிப்பருத்திச் சாற்றிலரைத்துக் கொதிக்க விட்டுப் பற்றுப்போடவும்.

(வேறு)

நுணல் நெய்யை கீழ்நோக்கிப் பிடிக்க சூலைப் பிடிப்பு வாங்கும்.

## 298. முகப் பரு தீர

நல்லமிளகு
நல்லெண்ணெய் } இவற்றைக் காய்ச்சவும்

நுரை மாறியவுடன் எடுத்து இறக்கி வைத்துக் கோழி இறகால் தடவவும். மூன்று நாட்கள் செய்யவும்.

(வேறு)

உமிழ் நீர் பூசத்திரம்
புனுகு பூசத்திரும்

## 299. புழுவெட்டு தீர

ஊமத்தைக்காயை முள் நீக்கிச்சீவி மேல் தோல்கருகச்சுட்டு, அரைத்து 3.5 கி. (வராகன்) துருசு போட்டு விளக்கெண்ணெ யில் குழப்பி, கண்ணுக்குப்[1] போடவும்.

---

1. கண் இமையில் தடவலாம், கண்ணில் விடுவது நல்ல தல்ல.

## 300. மூலமுளை விழ

குப்பைமேனி இலையை அரைத்து சுண்ணாம்பு போட்டு இழைத்துப்பற்றுப் போடவும்.

### மூல முளைதீர

ஆமை ஓட்டை மூளையின்மேலே தடவவும்,

### (வேறு)

நவச்சாரம்
யவச்சாரம்
வெங்காரம்
சீனாக்காரம்
அரிசி

பொடி செய்து, தாய்ப்பாலில் குழப்பி மூல முளையின் மேல் 5 நாட்கள் இருவேளை பூசவும். மறுநாள் வெந்நீரில் குளிக்கவும். ஆறாம் நாள் எருமைத்தயிர் 2 படி வடிசட்டி 1 படி. சாதத்தில் போட்டுக் கட்டுச்சோறு எனக் கட்டி, ஆசனத்தில் கட்டவும். மாங்கனியளவு விழும் மட்டும் கட்டவும். வெந்நீர் விடவும். இச்சாபத்தியம்.

எலிப்புழுக்கை
அல்லது } பற்பம்
கிளிஞ்சல்

முந்திரிகை ரசத்தில் விட்டுஎரித்து குழம்பாக்கி, மேல் தடவவும் எரிவு எடுத்தால் துத்தியிலையை வேகவைத்து அந்தத் தண்ணீரில் உட்காரவும் பிறகு சாணி உருட்டி வண்டை நல்ல எண்ணெயில் எரித்துத் தடவவும். கடுப்பு நிற்கும்.

## 301. நரம்புச் சிலந்தி தீரப் பற்று

ஐந்து ஈயைப் பிடித்து நல்ல வெல்லத்தில் மூன்று நாட்கள் உண்ணவும்.

### பற்று (வேறு)

மஞ்சள், பூண்டு அரைத்துப் பூசவும்.

## 302. குடைச்சல் தீரப் பற்று

| | |
|---|---|
| அபின் | — 35 கி. (பலம்) |
| அரக்குசாராயப்புட்டி | — 1½ |

இரண்டையும் கலந்து காய்ச்சிப் போடவும்.

# கட்டுகள்

## 303. வாதம் தீர வேது

சாத்தொட்டி இலையை அரைத்துச் சாறு பிழியவும். சுக்கான் கல்லைக் காய்ச்சிச் சாற்றில் போடவும். வெதுப்புடன் எடுத்துப் பூசிக் கொள்ளவும். 3 நாட்கள் சென்ற பின் பிரிக்கவும்.

### வாத சூலை தீரப்பற்று

இந்துப்பு
நவச்சாரம்
குந்திரிகம்
அறை சுண்ணாம்பு } பாக்களவு

பெருந்தும்பை உழக்கு சாற்றிலரைத்துப் பற்றாகப் பூசவும்.

**(வேறு)**

சுக்கு
மிளகு
எருக்குவேர்
கள்ளிக்கொழுந்து
காயம்
நெல்லி | பாக்களவு

வெள்ளாட்டுப்பால் அல்லது சுண்ணாம்பு நீற்றிய தண்ணீரில் அரைத்துப் பூசத்தீரும்

**(வேறு)**

சுக்கு
கடுகு
பெருங்காயம்
பூண்டு
குக்கில் |

வேலிப்பருத்திச் சாறு விட்டரைத்து கொதிக்கவைத்துப் பற்றுப் போடவும்.

## 304. திமிர், வலி தீர

கொல்லன், இரும்பு துவைத்தநீர் 5.3 லி. (குறுணி) இதில் கல்லுப்பு, சரியுப்புப்போட்டுக் கலக்கவும். கோழி முட்டையைப் போட்டு மிதக்கும்படி செய்யவும். இவ்வாறு இருப்பின் பதமாகும். இந்த நீரில் சீலைத்துணியை நனைத்துக் காலில் கட்டத் தீரும். கடுப்பு இருந்தால் சீலையைச் சுற்றிப் போடவும்.

## 305 காயம் தீர

சர்க்கரையை காயத்தில் வைத்துக் கட்டி மூன்று நாட்கள் சென்று பிரிக்கவும்.

தேன் விட்டுக் காயத்தைக் கழுவி சீலையில் தேய்த்துப் போடவும்.

## 306. அரையாப்பு தீர

நந்தியா வட்ட இலையை வேகப்போட்டுக் கட்டவும்.

## நசியம் மூக்குத்தூள் பிரிவு

## 307. பீனசம் தீர நசியம்

பன்றிக் கொழுப்பை உருக்கி நாசியில் தடவவும.

**(வேறு)**

தேற்றான்பழம், சுத்துாரிமஞ்சள் திப்பிலி — பொடியை கலந்து மூக்கிலிடவும்.

## 308. சன்னி தீர

நாசிக்கறுப்பான் தூள்[1] சமுத்திராப்பழம், சுக்கு, திப்பிலி, சுண்டை வேர் பொடி செய்து சலித்துக் கொள்ளவும், வேம்பு வேனாங் குழலில் வைத்து ஊதவும்.

---

1. இன்னதென்று விளங்கவில்லை.

## 309. பீனசம் தீர தூள்

இலுப்பை பிண்ணாக்கைச் சுட்டு மாவாய் உலர்த்தி குழலில் வைத்து நாசியில் போடவும். தலையில் உள்ள தோடங்கள், கபால நீர், வாதம் போகும்.

ஓமம், இலுப்பைப் பிண்ணாக்கைப் பொடி செய்து, துணியில் கட்டி பூச நீரால் நசியம் செய்யவும். சன்னிதோடம், பித்ததோடம், தோடங்கள் நீங்கும இராட்சதர்கள், பிசாசு என்பனவும் ஓடிப்போகும்.

(வேறு)

| | |
|---|---|
| தேற்றான்பழம்<br>கஸ்தூரிமஞ்சள்<br>திப்பிலிப்பொடி | பொடி செய்து |

மூக்கிலிடவும். பீனசம், சிரோபாரம், தலைவலி தீரும்.

**புகை**

வெள்ளெருக்கன் பாலில் மெல்லிய துணியை நனைத்துத் திரியாக்கி கொளுத்திப் புகை பிடிக்கவும்.

**வேறு சாறு**

மிளகு ½ பலத்தைக் கையான் சாற்றில் அரைத்துக் குழப்பி, தலையில் தேய்த்துக் குளிக்கவும் எந்தப் பீனசமும் தீரும். ஓரே வகையான நீரில் குளிக்கவும்.

## 310. இரத்த பித்தம்தீர நசியம்

தண்ணீர் விட்டான் கிழங்கு

நன்னாரி வேர்

சந்தனம்

சிறுசீரை வேர்

மாதளைப்பூ

பொடி செய்து, தாய்ப்பாலில் மூன்று நாட்கள் நசியம் செய்யவும்.

### நசியம்

தோற்றான்பிஞ்சு எடையைப் பொடி செய்து பசுநெய் யிலிட்டுச் சூரியபுடத்தில் வைத்து எடுக்கவும். இதை நசியம் செய்யத் தலை நோவு, தலைபாரம், கழுத்து இசிவு தீரும்.

## 311. வாதம் தீரப் பிட்டு

**நோய் விவரம்:**

சந்து உண்டை நொந்து சடுக்கும். மஞ்சணத்தி இலையை குண்டு சட்டியிலிட்டு தண்ணீர் வார்த்து சீலை செய்யவும் குறுவை அரிசிமாவை இடித்துப் பிட்டு சுட்டுச், கருப்பட்டி எண்ணெய் வார்த்துக் கலந்துஉண்ணவும்.

## 312. வேது — பாத வெடிப்பு தீர வேது

மாம்பட்டையை இடித்து காடி பதக்குடன் சட்டியிலிட்டு உலர்மணி (நாழி) 1.3 கி. போட்டு கஞ்சா (நாழி) 1.3 கி. சுண்ணாம்புக்கல் போட்டு சீலை மண் செய்து எரித்து மூன்று நாட்கள் வேது காட்டவும். உப்பு, புளி, விலக்கவும் பாத வெடிப்புத் தீரும்.

### நாய் முள் உதிரச்சாறு

சங்கன் கொழுந்து, நெருஞ்சில் முள், மிளகு,பழையமஞ்சள், பூண்டு, குமிழ், காதொட்டியிலை, இலற்றை நறுக்கிப் பிழிந்து 1 பாலெடை கொடுக்கவும்.

## 313. கபம் தீர கயிறு

| | |
|---|---|
| திப்பிலி | — 20 எண்ணிக்கை |
| கடுக்காய் | — 10 எண்ணிக்கை |
| இந்துப்பு | — 1.1கி (½ கழஞ்சு) |
| சுக்கு | — 2 |

### காதுக்குச் சொட்டு மருந்து

பேய்ச் சுரை விதை }
இந்துப்பு }

நல்லெண்ணெயில் கொதிக்க வைத்து எடுத்து ஆறியபின் காதில் விடவும்.

(வேறு)

நெய்ச்சட்டிவேரை நல்லெண்ணெயில் எரித்து வடிகட்டி காதில் சொட்டாக விடவும்.

### புழுவெட்டு தீர மை

சாரணைவேர்
இந்துப்பு

பசுவெண்ணெயில் போட்டுக் கலந்து கலத்தைக் கவிழ்த்துக் காய்ச்சிச் செம்பிலே வைத்துக் கண்ணுக்கிட கண்நோய், புழுவெட்டுத் தீரும்.

(வேறு)

ஊமத்தங்காயை முள்போக்கிச் சீவிப்போட்டு, மேல் தோல் கருகச் சுட்டு அரைக்கவும். துருசு வராகன் எடை போட்டு விளக்கெண்ணெயில் குழப்பிப் போட புழுவெட்டுத் தீரும்.

(வேறு)

எருக்கம்பஞ்சைச் சுட்டுக்கரியை பசுநெய்யில் போட்டு இழைத்து சிமிழில் வைத்து கண்ணில் போட கண்நோய் புழுவெட்டு தீரும்.

### சன்னி தீரத் திரி

**சரக்குகள்:**

| | |
|---|---|
| அமுக்ராப்பழம் | — 2 எண் |
| சாதிலிங்கம் | சம அளவு |
| அரிதாரம் | |
| கந்தகம் | |
| துத்தம் | |
| துருசு | |
| சீனாக்காரம் | |
| சித்திரமூலம் | |

**செய்முறை:**

அமுக்ராப்பழத்தில் ஒரே அளவாகச் சதுரக் கள்ளிப்பாலைப் பூசவும். உலர்ந்தவுடன் எடுத்துக் கொள்ளவும். பழச்சாற்றில்,

கடைச்சரக்குகளைப் பொடி செய்தபின் அரைக்கவும். பின் பாலில்' ஆட்டிக் கொண்டு, தட்டில் சீராகப்பூசி, நிழலில் உலர்த்தவும் [ வெற்றிலையில் இரண்டாகச் சுருட்டிப் புகைப் பிடிக்கவும்.

**தீரும்பிணிகள்:**

எல்லாவகையான சன்னிகள், சூலை, கபால நோய்கள். பீனசம், காசம், உப்பிசம் (அசீரணம்) செரியாமை என்பன,

| | | |
|---|---|---|
| தென்னை வெல்லம் | — 105 கி. (3 பலம்) | |
| அபின் | — 3.5கி. (1 வராகன்) | |
| பனைவெல்லம் | — 105 கி. (3 பலம்) | |
| இரட்டை பேய் மிரட்டி இலை | | |
| கஞ்சாயிலை | | எலுமிச்சை |
| பொடுதலையிலை | | அளவு கற்கம் |
| எருமைப்பால் | | 2 6 லி. (2 படி) |

சாறுகளை பாலுடன் கலக்கவும் காய்ச்சவும். அபின், சரக்குகளின் பொடியையும் போட்டு பதத்தில் இறக்கிக் கொள்ளவும்.

**அளவு:**

பாக்களவு.

**தீரும்பிணிகள்:**

எரிச்சல், கழிச்சல், பொருமல் இரத்தக் கிராணி தீரும்.

# புறமருந்துகள் புகைகள்

## 314. விக்கல் தீர

சாம்பிராணியை இறகு ஈர்க்கு திரிகட்டிக் கொளுத்தி மூக்கில் புகைப்பிடிக்கவும்,

## 315. மூலம்தீரப்புகை

பிரண்டை சமூலத்தை வேக வைத்து ஆசனத்தில் புகை காட்டவும்.

(வேறு)

ஊமத்தை
பூண்டுத்தோல்
சம்பளி மயிர்
உலர்ந்த மரவட்டை

தீயிலிட்டு ஆசனத்தில் புகை காட்டவும் நிற்கும்.

## 316. பீனசம் தீரப்புகை

| | |
|---|---|
| சுக்கு<br>மஞ்சள் | 17.5 கி. (½ பலம்) |
| துத்தம் | — 488 மி.கி (பணவெடை) |

சாணியில் வைத்து கருகச் சுடவும். பின் எடுத்தரைத்துப் பொடி செய்து திரியாக்கி புகைப் பிடிக்கவும்.

**தீரும்பிணிகள்:**

தலை இடிப்பு, கபால சூலை, தலைவலி, கபாலவித்து, நீர்ப்பீனசம், ஈளை' இருமல் தீரும்.

**காலஅளவு:**

10 நாட்கள், காலை மாலை புகைப் பிடிக்கவும்

## 317. சன்னி தீரப்புகை

சீவிய குதிரைக் குளம்பு
சீவிய மாட்டுக் குளம்பு
மயிலிறகு
கோழி முட்டை ஓடு
பூண்டுத் தோல்
எலிப்புழுக்கை

புகை பிடிக்கச் சன்னி நோய் தீரும்.

**புகை (வேறு)**

| | | |
|---|---|---|
| பெருங்காயம் | — | |
| புளியங்கொட்டை | — | |
| அசத்தியிலைச்சாறு | — | 325 மி.லி (கால் படி) |

முன்னிரண்டு சரக்குகளையும் அகத்தியிலைச் சாற்றி லரைக்க வேண்டும். மெல்லிய துணியில் திரித்து. காயப் போட்டு எடுத்துக் கொள்ளவும் சன்னியின் போது கொளுத்தி மூக்கில் பிடிக்கவும்.

# பூச்சுகள்

## 318. கண்டமாலை தீர

**நோயின் தன்மை:**

இது கழுத்தைச் சுற்றிக் கண்டம் போல் இருக்கும்.

மருதம்பட்டை
செங்கதாரி
பொன் முசுட்டைவேர்
வசம்பு
மிளகு
ஒருதலைப்பூண்டு
பசுநெய்

இவற்றை நெய்யில் அரைத்துப் பூசவும்.

### கண்டமாலைக்குப் பூச்சு

சிறுகீரைத் தண்டை உலர்த்திப் பொடி செய்து புண் மேல் போடவும்.

## 319. மயிர் உதிர்தலை தடுக்கப் பற்று

பெருங்கரையான் மண்
கல்லுப்பு
அமுரி

இவற்றை அமுரியில் அரைத்துப் பூசவும். மயிர் வளரும்.

# ஒத்தடம்

## 320. அனைத்து வகையான வாதங்களும் தீர வேது

நல்லெண்ணெய்
விளக்கெண்ணெய்
வேப்பெண்ணெய்

நொச்சி
தழுதாழைவேர்
வசம்பு
பூண்டு
மிளகு

இவைகளைக் கலந்து கொண்டு கடைச் சரக்குகளைப் பொடி செய்து தூவிப் போட்டு உடலில் பிடிக்கவும்.

## குதிவாதம் தீர வேது

**நோய்விளக்கம்:**

குதிவீங்கிக் கடுத்து நோகும் திருகுகள்ளிக் கொம்பை வெதுப்பி முறுக்கி ஒத்தடம் தரவும். தீரும்.

சிற்றாமணக்கு எண்ணெய் தடவி நொச்சி இலையை அவித்துக் கட்டவும்.

கொட்டைக் கரந்தையைத் துவைத்துக் கட்டவும்.

## கெண்டை வாதம் தீர

**நோய் விளக்கம்:**

கெண்டைக் கால் கடுத்துநோகும்

**மருந்து:**

மான் செவிக்கள்ளி இலையை வெதுப்பிப் பிழிந்து கெண்டைக் காலிலிட்டு முறுக்கவும். திருகுகள்ளிக் கொம்பை வெதுப்பிக் கெண்டைக்காலில் முறுக்கிப் பிழியத் தீரும்.

## வலிவாதம் தீர

திருகுகள்ளி வேர்
வசம்பு
மிளகு
பூண்டு

கொதிக்கவைத்து எண்ணெயிட்டு உடலில் நனைக்க வலி தீரும்.

## மரணவாதம் தீர எண்ணெய்

**நோய்விளக்கம்:**

கை, கால் சுருங்கி வலிக்கும்.

**சரக்குகள் :**

அவிரிவேர்
செங்கதாரிவேர்
வசம்பு
பூண்டு

நறுக்கிக்கொண்டு விளக்கெண்ணெய், நல்லெண்ணெய் சேர்த்துக்காய்ச்சி இறக்கவும் பின் உடலில் தடவத் தீரும்.

## 321. உருத்திர வாயுதீர ஒத்தடம்

பழங்காரை
வெள்ளாட்டுப்புழுக்கை
எருக்கிலை
வேப்பிலை
அமுரி

அமுரியில் இலைகளை இடித்துத் தவிடு கூட்டி, வறுத்து ஒத்தடம் தரவும்.

## கலிக்கம், மை

## 322. சன்னி தீர

தேற்றான் கொட்டையை உலர்த்திப் பொடி செய்து உலர்த்திச் சலித்துக் கொள்ளவும்.

கண்ணிலிட[1] — பூப்பரியும்

நெய்யில் கலந்து இமைமேல் பூச என்று கொள்ளவும்.

**(வேறு)**

சவுக்காரத்தை வேப்பெண்ணெய் விட்டுப் பொரிக்கவும். பொரிந்து வரும் போது தண்ணீர்விடவும் தண்ணீர் மேல் உள்ள மருந்தைத் துழாவிக் கையால் எடுத்து அரைத்துக் கலிக்கம் போடவும்.

தலைவலி, சன்னி, தலைபாரம் நீங்கும்.

---

**குறிப்பு:** கண்ணிலிட என்பதை கண்ணில் விட என மூலத்தில் உள்ளது.

### சன்னிக்கு கலிக்க மாத்திரை (வேறு)

| | | | |
|---|---|---|---|
| சாதிலிங்கம் | — | 9 கி. | (கால் பலம்) |
| வெங்காரம் | — | 9 கி. | ,, |
| வால்மிளகு | — | 9 கி. | ,, |
| அரிசித் திப்பிலி | — | 9 கி. | ,, |
| மாசிக்காய் | — | 9 கி. | ,, |

ஒரு சாமம் பழச்சாற்றில் அரைத்துக் கொண்டு விரல் நீளமுள்ள மாத்திரைகள் செய்யவும். நிழலில் உலர்த்தி எடுக்கவும். தாய்ப்பால், வெற்றிலைசாறு, நொச்சிச்சாறு, இவற்றில் கலிக்கமிடவும்.

### கலிக்கம் (வேறு)

நொச்சிச் சாற்றில் மிளகு, கிராம்பு, அரிசித்திப்பிலி, துவரம் பருப்பு, மாசிக்காய் இவைகளை இழைத்துக் கலிக்கமிடவும்.

### கலிக்கம் (வேறு)

சிற்றாமணக்கு எண்ணெயைவிட்டு விளக்கேற்றி, அதில் கறுப்புக் கம்பளியைக் கொளுத்தி, கரியாக்கவும். கரியை கலத்தின்மேலே வைத்து விளக்கின் எண்ணெயைவிட்டு மை போல இழைத்துக் கண்ணுக்குக் கலிக்கம் போடப் பூதபிசாசு முதலான தீரும்.

### காமாலை தீர

சிற்றாமணக்கு விரையைத்தாய்ப் பாலில் அரைத்துக் கண்ணில்விடத் தீரும்.

### காதில் சீழ்விடுவது நிற்க

| | | |
|---|---|---|
| முள்ளங்கிச் சாறு | — | கால் படி |
| நல்லெண்ணெய் | — | கால் படி |
| நாயுருவிச்சாறு | — | கால் படி |
| பசும்பால் | — | கால்படி |
| எருக்கன் பழுப்புச்சாறு | — | கால் படி |

**செய்முறை:**

கலந்து கொண்டு எரித்துத், தைலம் எடுக்கவும், காதில்விடச் சீழ் வருவது மாறும்.

## வாயுக் கட்டுக்கு வேறு

உப்பை ஒரு சட்டியிலிட்டுக் காடி அல்லது மோர் விட்டு முறம் கொண்டு மூடிப் பிடித்து இறுக்கும் பதத்தில் ஆவி பிடிக்கத்தீரும்.

## முழங்கால் கரப்பானுக்கு வேறு

பெருங்காயத்தைஎருக்கம்பாலில் அரைத்துப்பூசி, மேலே காஞ்சிரா இலையை வதக்கி வைத்துக் கட்டவும்.

# பாடல்கள்

### ஈளைக்குச் சூரணம்

நெல்லி திப்பிலி நெற்பொறி சர்க்கரை
நல்ல தேனில் அரைத்து முழுங்கிட
இல்லை இல்லையே ஈளை இருமலே
சொன்னவாக சத்தியந் தானே.

**உரை:**

நெல்லி முள்ளி, திப்பிலியைப் பொடித்து, சூரணமாக்கவும். பின் நெற்பொறி, சர்க்கரை, நல்லதேனில் அரைத்து விழுங்க ஈளை, இருமல் தீரும்.

சுக்கு சுழஞ்சொன்று இன்பத்
துலங்கிய கடுவிரண்டு
மிக்க தோல் சிவதை மூன்றும்
வெந்நீரில் அருவிக் கொண்டும்
ஒக்கவே சித்தனானால் உதிரத்தில்
உலாவி நிற்கும்
பக்கத்தில் வாயு, நெஞ்சு வாயு
சேத்துமமும் போமே.

**பொருள்:**

சுக்கு 1கழஞ்சு, கடுக்காய்த்தோல் 2 கழஞ்சு, சிவதைத் தோல் 3 கழஞ்சு பொடித்துக் கொண்டு உண்ணப் பேதியாகும் பக்க வாயு, நெஞ்சுவாயு,கப நோய்கள் தீரும்

### பாடல்

அரைத்தோர் மருந்து தன்னை
அளவது குன்றி போல
பொறித்திடலாகாது என்று
பேசினார் முனிவர் முன்நாள்

உரைத்திட்ட நாளை என்பான்
விநாயகனை ஓதும் உண்டை
கரைத்திட வெந்நீரில் கொள்ள
காய்ச்சலும் குளிரும் போமே".

**பொருள் :**

விநாயகரை வணங்கி மருந்தை
உருட்டி குன்றியளவு எடுத்து உரைத்து
உருண்டையை வெந்நீரில் கரைத்து
உட்கொள்ள காய்ச்சல் குளிர்விலகுமென்று
முன் நாட்களில்முனிவர்கள் கூறினார்கள்.

சுக்கு ஒருகழஞ்சு இன்பத்துலங்கிய
கடுகு இரண்டு
பக்குதோர் சிவதை மூன்று வெந்நீரில்
பருந்து ஈறாய
ஒக்கவே சீதம் தன்னில்
உறத்தினவாலி நிற்கும்
பக்கத்தில் வாயு பரவு
சேட்டையும் போமே"

**பொருள்:**

சுக்கு, மிளகு, சிவதை என்பன 4.4 கி. 8.8 கி. 16.16 கி. எடுத்துக் கொண்டு பொடித்துச் சலித்து உட் கொள்ள வாயுத் தொல்லை தீரும்.

### அரிதாரச் செந்தூரம்

அரிசுதான் முக்கழஞ்சு
ஆனைக்கொன்னை இலையின்மேல்
நெறியதாய் எண்ணெய்தான் தடவி
நேரதாய் அதன்மேல் பரப்பி
சிறிய சட்டிதனில் வைத்து
சீராய் சீலைமண் செய்து
ஒரு நாழிகை தானெரித்தால்
உகந்த அமுதமாய் வரும்.

பேர் தான் எடுத்து மகிழ
ஆற்றிப் பொடியாக்கி
தருமேகங்கள் வேர்ப்பட்டை தானே.
பொடியாய் இட்ட டக்கி குருவே
சார்வேளை அதன் சோறும்
செறிந்த வெற்றிலைச் சாற்றிலிட்டே
வெற்றிலை சாரகத்தின் மேலே மருவும்
செந்தூர விடை கேள்.
ஏத்தி ஈளை இருமலுடன்
ஏமலாம் தார் காசமுடன்
உத்த சுவாச காய்ச்சல் வகையும்
உகந்த கோழைவிப்புருதியும்
இத்தினிபலவும் தீரும் என்று
இயம்பும் வியாசர் மொழியாமே.

**பொருள்:**

(முக்கழஞ்சு) 3.3 கிராம் அரிதாரத்தை எடுத்துக் கொள்ளவும் ஆனைக் கொன்றை இலைமேல் நெருக்கிய படி எண்ணெய் தடவவும். கட்டியை வைக்கவும். சட்டியிலிட்டுச் சீலைமண் செய்து, மூடி நாழிகை நேரம் எரித்து எடுக்க (அமுதம்) மருந்து வரும். பொடியாக்கிக் கொள்ளவும் சார்வேளை அதன் சோறு, வெற்றிலைச்சாறு இவற்றில் (பணவெடை)488 மி.கி. கொள்ளவும். ஈளை, இருமல் காசம், சுவாச காசம், கோழை, விப்புருதி தீரும்.

**சூனியம் விலக**

வடக்கு செல்லும் பிராயணவேர்
வளைத்த அதனை இழைத்தெடுத்து
நடத்தும் நிச்சயந்தனிலே அரைத்து
நலமாய் ஏழுவேளை கொண்டால்
இடிக்கும் மருந்து சூனியமும்
இதுவே அலிழ்தம் இனிப்பாரு
மடக்கும் சூனியம் இதில் போகும்
மற்ற மருந்தில்லை காண்பீர்.

**பொருள் :**

பிராயணவேரை இடித்து அரைத்து 7 வேளை உட்கொள்ள சூனியம் போகும்.

**வெள்ளெழுத்து தீர**

"சீர்படத் திப்பிலி முக்கழஞ்சு
    சேர்ந்த மிளகு ஆறு கழஞ்சு
பேராய் கடுக்காய் பருப்பும்
    பெருக ஆறாய்க் கூட்டி
நேராக நெல்லிச் சாற்றில்
    நிகழலரைத்து இமையிட
தீராதிருந்த வெள்ளெழுத்து
    திவிளந்து தீர்ந்துபோமே"

**பொருள் :**

திப்பிலி (முக்கழஞ்சு) 12.12 கி. மிளகு 24.24 கி. (ஆறு கழஞ்சு) இவற்றை நெல்லிக்காய்ச் சாற்றிலரைத்து இமைமேல் பூச, வெள்ளெழுத்து மாறும்.

**பீனசம் தீர**

"சுக்குடன் செவ்வியம் சொல்லு
    பொதியுங்காயம் முட்காம்வேளை
குத்தின வசம்பு ஆனைதிப்பிலி
    அசமதாகம் சித்திரமூலம் சீருடன்
கடுக்காய் கள்ளிச் சாம்பல்
    கழல்கொடி வேரும்
வெள்ளைச் சாட்டரணை வேருடனா
    மஞ்சள் குரோசாணி ஓமம்
கொத்தமல்லிகை இசைந்த ரோகணியும்
    சேமமிகு நெல்விமுள்ளி தான்றிக்காய் தாமரை
                                        வளையம்
ஆனதோர் நொச்சி ஆயில் பட்டை
    வட்டத்திருப்பி வாய்விளங்கம்
இட்டமுடனே இக்குணம் கேளாய்

வாளம் செவிலி வேருடனே
கல்லுப்புடனே கையாந்தகரை
இத்தனை வகை இயம்புகிறேன் கேள்
ஓர்நிறையாக வத்திரசாயம் இடித்தெடுத்து
துட்டிடை நிறுத்துத் தேனில் கொள்ள
அயியில்லாமன் அதன் குணம்கேள்.
குன்மங்கள் எட்டு கொடிய நோய்கள்
கிரந்தி சூலை சேத்துமவயறினில் பித்தம்
வான்பித்தம் நாற்பது ஊதல் இருமல்
உட்டிணவாயு இருமல் வாந்தி
பாரிசவாயு பலவித சுரமும்
சீரி எலும்பும் சேத்தும சுரமும்
அண்டவாயு மண்டை சுழிநோய்
மகா பீனசமும்*

**பொருள்:**

சுக்கு, செவ்வியம், பெருங்காயம், முட்காவேளை, வசம்புத் தூள், ஆனைத்திப்பிலி, ஓமம், சித்திரமூலம், கடுக்காய், கள்ளி சுட்ட சாம்பல், வெண்சாட்டரணைவேர், மஞ்சள், குரோசானி ஓமம், கொத்தமல்லி. கடுகு ரோகணி, நெல்லிமுள்ளி, தான்றிக் காய், தாமரைவளையம், நொச்சிப்பட்டை, ஆயில்பட்டை, வட்டத்திருப்பி, வாய்விளங்கம், நேர்வாளம், செவிலிவேர், கல்லுப்பு, கையான் இவற்றைச் சமஎடை எடுத்துக்கொண்டு பொடி செய்து சலித்துத் தேனில் உட்கொள்ளவும். எட்டு வகைக் குன்மம், கிரந்தி, சூலை, கப நோய்கள், பித்தம் 40 ஊதல், இருமல், வெப்பம், பாரிசவாயு, சுரம், கப சுரம், அண்ட வாயு, மண்டைச் சுழிநோய், பீனசம் தீரும்

' சகலமாந்தையும் கருங்கிரந்தியில்
சேரே நீர்க்கல்லடைப்பு நீர்சேர்ப்பு
கேதறவே தாழை விழும் தண்ணீர் கண்டாய்
தீராத கிரந்திவகை முதலாய்த்தீரும்.

---

* முற்றுப் பெறவில்லை.

செகமுழுதும் குப்பை மேனிச் சாற்றால்
சேரய்யா வம்புபில்லி விடமும் தீரும்
சித்திக்கும் புகை தன்னைப் பிடித்திடாயே
பிடிக்கும் திரிக்கும் அம்மிதனில் சிலைதனை
துறட்பு இழுக்கும் வலிக்கும்
விரை வாதம் பித்தம்
தறித்தனோடேங்கும் சன்னி மதிமூன்றுக்கும்
செய்ய அனுபானம் இதுவே''

**பொருள்:**

குப்பைமேனிச்சாறு பில்லி, விடம் என்பன தீர்க்கும் வலிக்கும் விரைவாதம் பித்தம், சன்னி 13க்கும் அனுபானம் ஆகும்

''பாலினில் ஒழியும் பாண்டு
மகோதரம் பெருவயிறு மேலும்
நீராமை நிற்கும் கைமிளகுத்தூள்
வெள்ளை வெங்காயம்
சாலவே சன்னிக் கெல்லாம்
தேனிஞ்சிச் சாறதாகும்
மேலேறும் சன்னிக் கெல்லாம் வேப்ப
நெய் கண்ணில் போடு
இடுகண்ணில் கடுகுபாதி
வீங்கினால் கற்றாழைச்சோறு
வடி தயிர் சந்தனமும் வலதுண்ணி
கட்ட மாறும்
மாறுபடும் பிளவை பக்க
அரையாப்பு புண்கள்
வீடு பெறும் வியாதியாகில்
உமிழ்நீர் மிகவும் பூசே
பூசிய முலைக் குத்துக்கும் புண்ணுக்கும்
மிகவேயாகும்
பூசிடும் வாத சூலை வாத குட்ட
கள். நொச்சிச் சாற்றில்
பச மாவானவான் பலபல குணத்
துக்கெல்லாம்

நேசமாநொச்சி சுக்கு
நேமமாய் அறிந்துபாரே
பாரய்யா கபாலவலி பல்வலி முதலாய்
பறக்குதடாபிசாசு யொடு திருப்புகை"

**உரை :**

பாண்டு, பெருவயிறு, நீராமை இவை பாலில் உண்ணத் திரும். சன்னி திரும் இஞ்சிச்சாறு, தேனில் கொடிய சன்னிக்கு, வேப்ப நெய்யைக் கண்ணில் போடவும் கண்வீக்கம் போக, கற்றாழைச் சோறு வடிதயிர், சந்தனம் வைத்துக் கட்டவும் பிளவை, அரையாப்பு, புண்கள் தீர உமிழ்நீரைப்பூசவும். முலைக்குத்து, புண்வாத சூலை, வாதகுட்டம் தீரக் கள் நொச்சிச்சாற்றில் பூசவும். கபாலவலி, பல்வலி பிசாசு என்பன வும். தீரும் சுக்கு, நொச்சியால்.

**சந்நி தீர**

மந்தப் பெரியோர் பாதம் நனவுதனில் மறவாமல் சுருக்கப் பயவாது

"வசனித்தேன் அவுமுதம் வசனித்தேனே
வசமான சாதிலிங்கம் வராகனிரண்டு
வகையான சூதமது வராகனிரண்டு
நிசமான பூரமது வராகனிரண்டு
நிறமான ………… தூரம் விராகனிரண்டு
இயலான வீரமது விராகனிரண்டு
இசப்பாலை ஐஞ்சொன்றாய்க் கரண்டியில் போட்டு
வசமாக எரிப்பு நெருஞ்சி இரசமும்
நேரான முருங்கைப்பூ இரசமும் கூட்டே
கூட்டவே முலைப்பாலும் கூடச்சேர்த்து
குணமாக ஒரு சாமம் சுருக்குக்கொடுக்க
பாகமாய் மெழுகு போலாம் பாலாயிதான்
கல்வத்தில் போட்டு அப்பால்
ஆட்டுவாய் ஒரு சாமம் மயனம் போல
அப்பனே கணபதிக்குப் பூசை செய்யே
மாட்டுவாய் சன்னி பதிமூன்றும் திரும்
மயங்காதே இம்முறைமயங்கிப்பாரே"

உரை:

சாதிலிங்கம், இரசம், பூரம், வீரம், இரசசெந்தூரம் என்பன (2 வராகன்) 7.0 கி. நெருஞ்சி இரசம், முருங்கைப்பூ, இரசம் விட்டுக் கரண்டியில் போட்டு எரித்து, தாய்ப்பாலால் சுருக்கு 1 சாமம் தர மெழுகு பதமாகும். 1 சாமம் கல்வத்தில் ஆட்டி மெழுகு போலாகும்போது எடுக்கவும். 13 சன்னிக்கும் தர தீரும்.

பாடல் :

"நீடுமாதளை நெல்பொரி சர்க்கரை*
தேடு திப்பிலி தேனில் குழைத்திட
பீடைசெய் இடும்பிதீரும் — சக்தியே
காயங்காரம் அரிதாரம்
கார் புகழ் அரிசி இந்துப்பு
தேங்காயில் விட்டெடுத்து
தியாப்புடம் வைத்தெடுத்து"
வெல்லப் பாகு விட்டரைத்து
வெடிய ஐந்து நாழிகைக்கு
காசம் வயிற்று வலி தானே
கரைந்து விழுந்து விடும்.

**விரேச்சனத்திற்கு**

"கடுகு ரோகணி காக்கனாஞ் சாரணை
வெடிகொள் திப்பிலி, மிளகு, சிவதைவேர்
படி வெங்காரம் நேர்வாள முடிபாதி கொள்ளலிலே
பிரமிச் சாற்றலரைத்திடாயே"

அரைத்து மருந்துடரிப் பழம் போல்லான
உண்டையாய் உருட்டிக்
கரைத்துப் பழத்தில் தேன்தன்னில்
கரும்பு வெல்லத்தில் கொடுத்தக்கால்
விரைந்து கழியும் சீதம்போம் எழுந்த
காய்ச்சல் தானும் போம்
உரைக்கும் சீதபேதி என்றே
உகந்தே வரும் கொள்வதுண்மை இதே

---

* முற்றும் இல்லை

**பொருள் :**

கடுகு ரோகணி, சாரணை, திப்பிலி, மிளகு, சிவதைவேர், வெங்காரம் பிரமிச்சாற்றில் அரைத்து துடரிப் பழம்போல உண்டையாக உருட்டவும். பழச்சாறு, தேனில் கரும்பு, வெல்லத்தில் உண்ண சீதம்போகும். சீதத்தால் உண்டான சுரம் போம். சீதபேதி உண்டை என்றே உட்கொள்வதுண்டு.

**சீதபேதி விருத்தம்**
**(வேறு)**

எட்டுநேர் வாளமும் மாண்டு கந்தக முடன்
நேத்தமொரு சுக்குமூன்றும் இப்புவியில்
மிளகு வெங்கார இத்துடனே இனிதுவுமோ
ஒவ்வொன்றதாய் இட்ட இரு குமரிச்சாற்றா
லரைத்து
உண்டை குன்றிவாகத்தான்
வகையது கேள் வெல்லம் பழத்தினிலினிய
வெண்ணெய் தனிலும் தீரும்
ஒரு உண்டை கொண்டிடில் எட்டும் சூலை
தானும் எங்கொட்டமிட்டு கிடுமியும் திறந்திடும்
சீதமும் கொடுமை தானும் தீய்ந்திடும் அண்டிய
சீதபேதி என்று சொல்லியே சொண்டவர்
நல்லோர்களே.

**பொருள்:**

நேர்வாளம் 8, கந்தகம், சுக்கு, மிளகு, வெங்காரம் குமரிச் சாற்றால் அரைத்துக் குன்றி மணியளவு உண்டை செய்து கொள்ளவும்.

வெல்லம், பழம், வெண்ணெய், குன்மம் எட்டு, சூலை, கிருமி சீதம் என்பன தீரும்.

"அந்தமுடன் கரண்டி தனை
அனல் போல் மிகவும் தான் காய்ச்சிவைத்த
பரம்பும்போம்
இடிபோல் மருவு கரண்டி அதின் போட
இந்தசதம் மருந்து புகையாமல் இன்ன பற்பம்
எரியிடவே

5. எரித்த பதந்தான் இறக்கி வைத்த
இது வேதமா என்று கண்டு
தனித்த அனுபானத் திரிகடுகு
தக்க பொடிதான் போயும்
எரித்த பற்பம் பண்டையுமி
வே பாரு மல்லியங்கு
மென் சயித்த சயரோகந்தானே.

6 பிறநீர்க் கோவை தேனுடனே
பெருகும் பற்பம் பணவிடை கொள்
மறநேர் குட்டச் சோதியதற்கு சயந்தலவணம்
மதியில் பணவிடை தான் கொள்
உரமே நெஞ்சு நெரித்தாலும் உண்ணு
தீரும் வியாதி விளம்பக் கேளே.
வயிற்றில் வியாதி திமிர் பூச்சி
மருவுதி பல மூடனாக
நயந்த சத்து வாதமுடன்
நன்றாய் சயமும் பெருவயிறும்
சயத்த பாண்டு அறுவை பல சத்தித்த
நீர்க்கோவை கிராணியுடன்
பயந்தவாத சுரமொன்று பண
பண்ணுகர்ப்பரோகமுடன் அரையாப்பு
பிரமியமும் ஆனை மூத்திரக் கிரிச்சியுடன்[1]
உரத்த இரத்தப்பிரமியமும்
ஊறு வண்டு கடி குட்டம்
பருத்த சன்னிபதி மூன்றும்
படர்தாமரை முதலாக
திருத்தமாகத் தீருமென்று
தெய்வ முனிவர் செப்பியதே"

**பொருள் :**

காந்தம் 3 பங்கு, சாதிலிங்கம், வெள்ளீயம், 1 பங்கு சுத்தி செய்து சீலையில் கட்டி அத்திப்பட்டைக் கியாழத்தில் தோலா லந்திரமாக எரிக்கவும் பின் கசபுடமிட காந்தச் செந்தூரம் கிடைக்கும். திப்பிலி, நொச்சிக்கியாழம் அனுபானம். இதனால் தீரும்

பிணிகள் திமிர் பூச்சி, சயம், பெருவயிறு, பாண்டு நீர்க்கோவை கிராணி, கர்ப்பரோகம், அரையாப்பு, பிரமியம், இரத்த பிரமியம், வண்டுகடி, குட்டம், சன்னி தீரும்.

**பாடல்**[1]

சித்திரமூலக் கியாழந் தன்னில்
நேரான குட்டம் எட்டும் தீரும்
நிச்சயமாய் வச்சிரவல்லி கியாழந் தன்னில்
லேரப்பா மிளகு பொடி தன்னில் கொள்ள
வெகு சுருக்காய் மேக மெல்லாம் தீரும்
காரப்பா வெள்ளுள்ளித் தைலம் தன்னில்
பதறும் சன்னி தோடம் போமே

**உரை:**

சித்திர மூலக்கியாழத்தினால் குட்டம் தீரும் வச்சிரவல்லி கியாழத்தால் மேகம் தீரும். மிளகுப்பொடியையும் சேர்த்து அருந்த வேண்டும். பூண்டுத் தைலத்தால் சன்னி தோடம் நீங்கும்.

ஆறுமே கடி இருமல் சுவாச காசம்
அடங்காத மந்தார சிலேற்பன மூர்ச்சை
தீருமே வலிப்பஞ்சும் இசிவு முதல்
திறமான வாயுவிடும்.
காரணிய பத்தியந்தான் புளிப்புதள்ளும்
கனமான வாத்திய கோபம் தீரும்
சாருமே இந்த முறை யாரும் காணார்
சாற்றினார் வேதமுனி சாற்றினாரே.

**உரை :**

இருமல், சுவாசகாசம், மந்தாரகாசம், மயக்கம், வலிப்பு, இசிவு, வாயு, தீரும். பத்தியமாக புளிப்புக் கூடாது. பித்தம் தீரும். யாரும் இந்த வழியைக் கூறவில்லை இதை வேதமுனி கூறினாரே.

---

1. ஒரு சீர் குறைகிறது.

## கண்படலம் தீர

வெய்யப்பிரமி ஒன்றாகும்
வெள்ளைக் குன்றி இரண்டாகும்
துய்யவெங்காரம் மூன்றாகும்
துலங்கும் சார்வேளை நாலாகும்
மயிது அஞ்சாகும்
மான எலுமிச்ச ரசம் விட்டரைத்து
மைய்ய கண்ணிலிடு ஈறாய்
படலம் தொண்ணூறாத்தாறுடனேபோமே"

**உரை :**

கண்நோய் 96ம், படலமும் தீரும், இந்தமையால் பிரமி 1 பங்கு, வெள்ளைக்குன்றி 2 பங்கு, வெங்காரம் 3 பங்கு, சார்வேளை4 பங்கு, மயிது[1] 5 பங்கு. எலுமிச்சம்பழச்சாற்றிலரைத்து கண்ணில் பூசவும்.

## சுக்கு விரேச்சனம்

சுக்கு ஒரு கழஞ்சு இன்பந்
துலங்கிய கடுகு இரண்டு
மிக்கதோர் சிவதை மூன்று
வெந்நீரில் அருந்துவீராய்
ஒக்கவே சீதம் தண்ணில்
உரத்திலு ஆவி நிற்கும்
பக்கத்தில் வாயு நெஞ்சு
பரவு சேட்டமும் போமே

**உரை:**

சுக்கு கழஞ்சு, கடுகு இருகழஞ்சு, சிவதைவேர் மூன்று கழஞ்சு இடித்துச் சூரணம் செய்து வெந்நீரில் குடிக்க, வாயு, நெஞ்சுநோய் முதலியன தீரும்.

---

1. இன்னதென்று விளங்கவில்லை.

## நாடி நடை.

மந்தமாக இந்நாடி மயங்கிடில்
அந்திரைக்கு சுகமில்லைபேச்சில்லை அது
அந்திரத்தின் போன உயிர்களும் அது
வந்துவந்து வணங்கிடும் மாதரே.

சேத்துமநாடி சேர்ந்தறியில்
ஓடிடில் வெறுமை இல்லை
வியாதியும் மீறிடும் அதுக்கு
மாத்துமில்லை மருந்தும் பலித்திடாய்
அதுக்காதுமில்லை கழிவது காயமே.

அய்யநாடி அமர்ந்து நடந்திடில்
வைய்ய ஆளும வளர்க்கும் — உயிரது
எய்யும் அம்புபோல் தங்கித்திகழாட்டாஸ்
சீவனும் நாலு இரண்டாகுமே

உரை:

மந்தமாக இந்நாடி மயங்கினால் உடல் நன்நிலை இல்லையாம். பேச்சில்லை, உயிர் விட்டு விட்டு வரும் கப நாடி ஓடிடில் வெறுமையாய் இல்லை. பிணியும் மீறி மருந்தும் மாற்றும் இல்லையாம். நாடி அமர்ந்து நடந்தால் ஆளுமை வளரும். அம்பு என உடலில் தங்கி, இருந்து சீவனும் ஆறாகும்

## இலிங்கக் குழம்பு

சோதிலிங்கத்தின் பொதிகையே சாமி
அட்டானப் பணிந்து
சாதிலிங்கத்தின் குழம்பைச்
சாற்றக்கேள்
வாதிலிங்கம் எண்ணரையான்கூட
எடுக்கும் இரசம் கற்பூரம்
சொன்னது நாலில் தொகை பாதி
நன்னயமா வெங்காரமுன்னே.

---

2. சீர் சரிவர இல்லை.

விளங்கினதுக் கவ்வாறு

நங்காரம் சுத்தி செய்வர்

நாடியே பொங்காமல் கூட்டி

தொகை பாரு குறுவாமல் இவ்

விடைக்கு வாட்டமுடன் சுத்தி செய்த

வாளமரைத்திட்டி இறுப்பமுடனே

அரைக்கும் வேலைதனில்

ஆமணக்கு பருப்பெடுத்து

லிங்க நிறைபாய்ச்சி நுரைத்தவுடன்

கொம்பிலே அதை அடக்கிக்

கோதையரே பாமணியாள்

வெம்புகின்ற தன்னை மிகப்பார்த்து கும்பி

வயிற்று வலிக்கெல்லாம் சீரகக் கியாழந்தன்னில்

பணவிடைதான் நயனத்துடன் நீட்ட

நாடித்து செகத்துடனே

சூலமுடக்கு துடியடங்கவே.

சித்திரமூல கியாழம் தண்ணில்

பணவிடைதான்மூடி..........

........................................

சீலந்தா கடா சிங்கிகள்

குட்டிக்காய் வெள்ளுள்ளி

சுக்கு முருங்கைத் துளியுடனே

சர்க்கரையில் ஒன்றாயரைத்து

ஊட்டிப் பணவிடையில் பாதி

உண்ண அண்டவாத சூலை

அண்டாது கொண்டதொரு

நொச்சியிலைச் சாற்றில்

நொடியபணமூட்ட அச்சமுடன்

இதசுரம் அற்று விடும்

இச்சையுடன் வேலி... ‒ ......தனில்
மின்னயாள் தன்னருகே
சாலித்திமிர்வாதம்பிடி காணாது
வாலிபமா சங்கொள்ள
இல... ...சாடுமே மேக சொறிவாங்கும்
விசகரப்பான் வாங்குமே.

கேளாய் இந்த வகை எல்லாம்
கிழிய பேதி மிக வுண்டாம்
வாளாய் வெங்காயம் வசம்பு தட்டிப்
பாங்காய்கிசாயம் வைத்ததிலே
தூளான வெண்ணெய் பாக்களவு
சுருக்கா போட்டுக் குடுப்பீராம்
மீள பேதி உள்ள தெல்லாம் மின்னே
திரும் மெய்யிதுவே

## இலிங்கக் குழம்பு

**உரை:**

பொதிகை மலைவாழ் முனியான அகத்தியனைப் பணிந்து சாதிலிங்கக் குழப்பைக் கூறக்கேள் 4 பங்கு இலிங்கம், இரச கற்பூரம், 2 பங்கு வெங்காரம் சுத்தி செய்யவும். அடுப்பேற்றிச் காய்ச்சவும் பொங்காமல் எடுத்து, எடைக்கு பாதி நேர்வாளம், லிங்க எடைக்கு ஆமணக்குப் பருப்பு, அரைத்துக் கொள்ளவும்,

| | | | | |
|---|---|---|---|---|
| வயிற்று வலி தீர | — | சீரகக் கியாழம் | — | பணவிடை |
| சூல முடக்கு | — | சித்திரமூல ,, | — | பணவிடை |
| அண்டவாத சூலை | — | சுக்கு, முருங்கைத்துளி, சர்க்கரை ½ பணவிடை | | |
| சுரம் | — | நொச்சியிலைச்சாறு | | |

**குறிப்பு:**

இக்குழம்பை உட்கொள்ள பேதி உண்டாகும். வெங்காயம், வசம்பு சேர்த்துக் கியாழம் வைத்து அதில் பாக்களவு வெண்ணெய் சேர்த்துத்தரவும் பேதி நிற்கும்.

அந்தப் பெரியோர் பாதம்
நனவுதனில் மறவாமல்
அறுக்க பயவாதி என்றும்
பேரெடுத்து

**அரிதார பற்பம்**

1. ஈரவெங்காயச்சாறு அரைநாழி சுத்தி
பிரண்டைச்சாறு துவைத்து
பிரமிச்சாறு இருநாழிதான்
பிசறிச்சாறுதான் துவைத்து!
வார, முலையாள்தான் சாறு
மருவுகுருணி நாழி
திரி பதக்கு நாழி
திரி மூவகைச் சாறிதுவே.

2. அச்சாந்ததனால் நாலுபலம்
அரிதாரத்தைத்தான் அரைத்து
வற்றச்சாறு வற்ற மகிழ்ந்து
குழிக்கல் தான் அரைத்து
அச்சமில்லா புதுசட்டி
இனிலடையத்தான் வைத்து
அச்சியுடனே குழிக்கல்லை
இச்சாறு தன்னால் கழுவிடே

3. கழுவுஞ்சாறும் அவ்வடைமேல்
கலந்து சட்டிக் குழம்பாக்கி
வழுவார் தன்மேல்லோர்சட்டி
மகிழ்ந்தோரெழுமண்செய்து
அமுகத்தான் புரை எல்லாம்
அடங்கி சீலைமண்செய்து
நழுவிச்சாறு போகாமல்
நாற்பது நாழிகை எரியிடே

4. அந்தமுடன் கரண்டி தனை
அனல்போல மிகவுந்தான்காய்ச்சி
வைத்த பரம்பும் போம் இடி
போல் மருவு கரண்டி அதில்போட

இந்த சதமருந்துப் புகையாமல்
இன்னம் பற்பம் எரியிடவே
5. எரித்தபதந்தான் இறக்கி வைத்து
இது வேதம் எனறு கண்டு
தரித்த அனுபானம் திரிகடுகு
தக்க பொடிதான் போயும்
எரித்த பற்பம் பண்டையுமிதேபாரு
மல்லியங்கு மென் செயித்த
....................................
சயரோகம் காருந்தானே.

6. பிறநீர்க் கோவை தேனுடனே
பெருகு பற்பம் பணவிடைக்கொள்
மறறோர் குட்ட சோதியதற்கு சயந்தலவணம்
மதியில் பணவிடைதான் கொள்
உரமே நெஞ்சு நெரித்தாலும் பண்ணு
வெண்ணெயிலோர் பணவிடைதான் கொள்
நேரே தேசிப்பழச் சாற்றில்
ஆறுபட தாமரைக் கொள்ளே,

7. அரித்த குட்டமஞ் சீரகத்தில் ஆகும்
சன்னி பல வாதம்
உரைத்த அக்கினி மந்தமுடன் உண்ணும்
பழவெல்லத்திலத்து அது கொள்ள
வருந்துவருந்து முது காமாலைக்கு
மருகை கையான் தகரையிலே
திருந்த வெண் குட்டத்துக்கு
தின்னும் நிலப்பனை கிழங்குடனே.

## கருங்குட்டம்

8 தெர்ப்பை புலகத்தின் இத்த சாறு தான் கொண்டு
நெருங்கு அக்ரகாரமுடன் நிச்சயமாக அதில்கொள்ளே
ஒருங்கும் குமரகண்டனுக்கு உண்ணும் திப்பிலி தேனில் கொள்
நெருங்கும் செங்குட்டத்துக்கு நிச்சயமாகக் குமரிச் சாறதுவே.

9 உடம்பில் கொள்ளும் அரம் போலே உரித்து வந்து தானிருந்தால்
வடிம்பும் தேனும் காரமகிழ்ந்த பொடியில்பற்பம் கொள்ளிடமே
இல்லாட்டி இரவாத மலங்கு நிலப்பனைக் கொள்ளிடமே
எல்லாம் சுவாச பின்னும் திரியால் பொடியில் கொள்ளே.

10 இரத்தபித்தந்தான் தீரா இரும்புரோசப் பொடியில்கொள
தரித்தநீர்த்தோஷை வெள்ளாட்டு தங்கும் பாலில்தான் கொள
உரைத்து சூலைக் கடுப்புக்கு உண்ணும் திப்பிலி தேனுடனே
நிறுத்தகாய உட்புண்ணம்போம் நிச்சய பூசனிக்காய் சாறே

## அரிதார பற்பம்

**உரை :**

அரிதாரம் 4 பலம் எடுத்துக் கொள்ளவும். பின் வெங்காயச் சாற்றில் ½ நாழிகை ஊறவைத்து எடுத்துத் தூய்மை செய்து, பிரண்டைச் சாற்றில் துவைத்துக் கொள்ளவும். பிரமிச்சாற்றில் 2 நாழிகை ஊறவைத்து எடுக்கவும். குருணி தாய்ப்பாலில் நாழி அளவு ஊறவைக்கவும். மூன்று பதக்கு அளவு மூன்று வகை சாற்றில் வைக்கவும். பின் இச்சாற்றால் அரைத்து, அடையாக்கவும். புதுச் சட்டியில் அடையை வைத்து 7 சீலை மண் செய்து 40 நாழிகை சாறு போகாமல் எரிக்கவும் இறக்கிய பின் பற்பம் ஆகும். திரிகடுகுப் பொடியில் தரவும். சயரோகம் தீரும். நீர்க்கோவைத் தேனுடன் கொள்ளத் தீரும். பணவிடை அளவாம். குட்ட நோய் நீங்க இந்துப்புடன் உட் கொள்ள, நெஞ்சுவலி தீர பணவிடை அளவு வெண்ணெயில் உட்கொள்ளவும். சீரகப் பொடியில் உட்கொள்ள குட்ட நோயும், பழவெல்லத்தில் சன்னி, வாதம் சத்தீ குறைவு என்பனவும் தகரை, மருக்காரையில் கொள்ள காமாலையும் நிலப்பனங்கிழங்குடன் கொள்ள வெண்குட்டமும் தீரும்.

### செவ்வட்டைக்கடி தீர

காரிய முப்புச்சட்டியிலே
கணக்க வறுக்க சிறுகீரை
பார்நறுக்கிச்சமன் கொண்டு
பெருக வறுக்கச் செந்தூரம்
அதில் ஆவின் நெய்தனில்
திருந்தப் பணவிடை மண்டலம் கொள்
சிரங்குகடி குட்டம் படர்தாமரை
மாறிடுமே செவ்வட்டைக்கடியும் தீரும்

### காரிய செந்தூரம்

காரியம் பின்னுந்தான் கூட்டி
கனத்தவேரின் பொடி பதக்குத்
தீரச்சட்டியில்தான்போட்டு அதிகமாய்
முறுக்கம் கொண்டாறத்
தேரந்தான் வறுக்க அக்கொம்பு
தீமட்டாகப் பார் செந்தூரம்
முருக்கம்பூ பண்ணு நிறமாய் பகர்ந்ததுவே
பலநீரிழிவுக்கு
முனுபணவிடை தேனில் கொள்ளே

### செவ்வட்டைக் கடி தீர

**உரை :**

காரீயம் என்ற கருவங்கத்தை உப்புச்சட்டியில் சிறுகீரையை நறுக்கிச்சம எடை எடுத்துக்கொண்டு போடவும். பின் சிவக்க வறுக்கவும். செந்தூரமாக மாறும். பணவிடையளவு நெய்யில் 40 நாட்கள் உட்கொள்ள, சிரங்கு, படர்தாமரை, குட்டம், விடக்கடி செவ்வட்டைக்கடி தீரும்.

### காரிய செந்தூரம்

**உரை :**

சட்டியில் பதக்கு வேர்ப்பொடியைப் போடவும். காரீயத்தைப் போட்டு, அடுப்பிலேற்றி எரித்து, முருக்கம் கொம்பால் வறுக்கவும். உருகி, முருக்கம்பூ நிறமான செந்தூரம் கிட்டும்.

இதை நீரிழிவுக்கு 3 பண விடை வீதம் தேனில் உட்கொள்ளவும்.

### சூடம் வைக்க

சீனாக்காரம் சிறுகவெட்டிச்
செய்யசட்டியில் தானிட்டு
ஆனைக்கத்தூரி கஞ்சா,
எண்ணுமந்தச்சாறு சுவடிவித்து
ஏனே இருபத்தொரு நிலவுவிட்டு
இதில் சுவரிவித்தபின்பு
ஆனைக்குகையிலிட்டு மூடி
அதுக்கு சட்டிமனல் எடுத்து

ஒருவிரல் கனமாய் மணல்வைத்திரு
இரு மென்றே மணலை விட்டு இதுக்கு
ஒருவிரல் சண்விட்டு வறுமை அடுப்பில்வை
எரிக்கமந்று மந்தப்பிரகாரம் திறமெனவைத்தாறவிடு

### இரசகற்பூரம் வைப்பு

செங்கலிடி இரசத்தோட
சேர்பிசறித் தூளாக்கி
1 இங்கே உப்புதான் உழக்கு
இதுவும் கூடந்தானிடித்து
அங்குலிராசிதான் குவித்து
ஆனகண்ட.........
துங்குளையும் தானம் பண்ணி
சுழுவதிலே இரசம் விட்டு.

2 ஒரு சட்டியிலே செங்கல்பொடி
முப்பும் விரவினத்தைத்தான்போட்டு
அருமை இரசம் விட்ட புகுகை
வைத்து அதன்மேல் சட்டிதான்மூடி

---

1 பாடல் சரியான சீருடன் இல்லை.

மருவே சீலைமண்செய்து
மண் அடுப்பில் தான் வைத்து
2 ஒருநாள் கமலாக்கினி தானிட்டு
உகந்த கடாக்கி மூன்று நாளிடவே

3 தவிடு இளங்கன சாண முந்தானே
கூட அரைத்து மேல் உட்சட்டியில் மண்
கட்டி மருவக் குழித்து ஆதிரண்ணீர்
விட்டு சவடச் சத்து சுட்டவாரே
சுற்றிய சீலை வாங்கிப் போட்டவை[1]
நின்று தண்ணீர்தான்விடவுமாக

4 நாலு நாளையின் பின் எடுத்தால்
நன்றாய் மேல் சட்டியில் பற்று
மேலும் கற்பூரம் பரணி வைத்து
மேவி தேவி சினைப்போட்டு வைக்கு
மேலா நாசிப்புண் தொண்டைப்பான
மிகுற்றமண்டை சூலையுடன்
பாலிய நாசியில் சீவிதல்
பரவு கண்ணீர் விழுதல்

5 இதுகளுக்கெல்லாம் அரைக்கழஞ்சு
இவையும் தேனும் இருகழஞ்சு வருமே
முப்பது நாள் கொள்ளமது
முண்டான சூலைக்கும்
இதமாய் இப்படித்தான் கொடுக்கு
இயன்ற குன்மம் பலவுக்கும்
பதமாய் திரிகடுகு பணவிடையும்
பண்ணும் கற்பூரம் பணவிடையும்.

6 தேனில் கொடுக்க முன் சொன்னதியங்கும்
குன்மந்தான் தீருமான பக்க சூலைக்கு

---

1 பாடல் சரிவர அமைக்கப் பெறவில்லை

அதுக்குவெள்ளுள்ளி வெங்காயம்
பொன் சுக்கு தண்ணீரில் மருந்து
என்றுதான் கொடுக்க எண் கிராணி
சாதிக்காய் இதனில் கொடுக்க எனலாமே

மேலா வயிற்றில் வலிக்குத்து
மிகுத்த தயிரிஞ்சி சாறாகும்.
சாலகைக்கு வாயுவேதான்
சீரகம் தண்ணீராம் மென்
மென்கற் பூரம் இதுதானும்
மின்ன அனுபானம் தானிறந்து
ஆனவியாதி கடவறிந்து
அப்பா மருந்துதான் கொடுக்க

உரை :

செங்கல் தூள் போட்டு இரசத்துடன் கலந்து உப்பு உழக்குச் சேர்த்து இடித்துக் கலக்கவும். பின் சட்டியில் கலவைக்கொட்டி. மூடவும்சீலை மண் செய்து செங்கல் தூளுடன் இரசத்தைக் கலக்கவும் உழக்கு உப்புச் சேர்த்திடித்துக் கொள்ளவும். புதுச்சட்டியில் கொட்டவும். மூடி சீலைமண் செய்து மண் அடுப்பில் ஒரு நாள் கமலாக்கியாய் எரித்து தகடாக எடுத்து மூன்றுநாள் இடவும். தவிடு, சாணம் சேர்த்தரைத்து மேல் சட்டியின் மேல் மண்ணைக் குழித்து சுற்கத்தை வைக்கவும். தண்ணீர் விடவும் நான்கு நாளைக்குப்பின் எரித்து எடுக்க இரசகற்பூரம் கிடைக்கும்.

நாசிப்புண், தொண்டைப்புண், மண்டை சூலை, நாசியில் சீழ் வருதல், கண்ணில் ½ கழஞ்சு வீதம் இரு கழஞ்சு தேனில் தரவும். 30 நாட்கள் உண்ண சூலை தீரும். குன்மம் தீரும். பணவிடை அளவு திரிகடுகு சூரணத்தில உட்கொள்ளவும். பக்க சூலை தீர பூண்டு, வெங்காயம் சுக்குத்தண்ணீர் கிராணிக்கு — சாதிக்காய். வயிற்றுவலிக்கு இஞ்சிச்சாறு, தயிர் வாயு தீர, சீரகத்தண்ணீர் அனுபானம் அறிந்து மருந்து தருவாய்

**பொருள்:**

சட்டியில் (பதக்கு) வேர்ப்பொடியை போடவும், 10.7 கி. காரீயம் சேர்த்து தீ மட்டாக எரிக்கவும். செந்தூரம் முருக்கம் பூப்போலக்கிடைக்கும். நீரிழிவுக்கு தேனில் உண்ணவும்.

**உலோக மண்டூர பற்ப, செந்தூரம்**

1. "லோகந்தான் பதினாலு
உகந்த இலிங்கம் பலம் ஒன்று
ஏகச்சாறும் பல முக்கங்
என்று மூன்றுவகை கூட்டி
வேகமிட்டும் புடமிட்டும்
மிகுந்த வண்ணம் போலாகா
ஏகமான அனுபானம்
இஞ்சிச் சாற்றில் கொண்டிடவே"

2. மூலக்கிராணி பைத்தியமும்
முனிந்த பாண்டு காமாலை
சால அஞ்சு குணம் வகை தனித்த
சோகை திருட்டி மந்தம்
காய சுவாச காசமுடன் அக்கினி
மாந்தம் என்னும் மெல்லாந்த
என்றும் அதாக்கினி முதலாகவிட்டே
ஏகி விடும் விளம்பியதே.

மருந்து நாவல்பட்டையுடன்
மண்ணும் கையான் தகரைச்சாறு
சரிதமாகச் சமன்கூட்டி தானே லோகம்
பொடி உழக்கு
நிறுதமான அட்சரத்தில்
நிகண்டாயரைத்து வேக வைத்து
நீறுபோலாகும் அதுக்குப்பிறகு
செய்ய வகை கேளே

4 திரிபலை தானும் தெரிந்திட்டு செய்ய
தண்ணீர் காய வைத்து
அரைப்படி தண்ணீர் தானரைத்து
ஆகுமட்டும் புடமிட்டு

உரியதாக ஏழுபுடமிட்டு
உகந்தவன் போல் நெறிதாய்
திரிபலைப்பொடி இரண்டும்
தேகமும் செந்தூரம் மண் எடையும்

5 இந்த லோகச் செந்தூரம்
இதுக்குக் கருப்பட்டியில் கொள்ள
வந்த நீரிழிவு சூலை குன்மம்
மருவு பிரமியம் பாண்டு குன்மம்
இந்த ஊது காமாலை எல்லாம் தீரும்
என்று சொல்லி
அந்த பிறகு விசாலமுனி
அருளிச் செய்த லோகம் இதே.
அரைப்பொடி பன்னீர் கழஞ்சுடனே
ஆன இரத்த பலமொன்று ஊத்த

6 இட்டு அதன் மேலே வட்ட உருண்டைதான்
வைத்து மகிழ் அதன் மேலிடு மருந்து
விட்டுத் தாழைஞ்சோறு மேலே
இட்டுச்சட்டிகொண்டு
வட்டமாக வாய்மூடி
வறுத்து சீலைமண் செய்யே
கந்தகம் ஏழுகழஞ்சு உகந்த வெங்காரம்
நாலு கழஞ்சு தரித்து குமரிச்சாறு விட்டுத்தானே.

7 மூன்று நாளைக்கு எரித்து
முனிந்த நாலாம் நாள் தானெடுத்து
ஆனதேனும் அரைக் கழஞ்சு
அதனில் பண்வெடை செந்தூரம்
எனுங் கொள்ளும் விடபாகம்
என்று பயித்திய காமாலை
நாலும் சோகை மகோதரமும்
சுண்ணாய் பாண்டு தான் தீரும்''

---

1. ஒருசீர் குறைவாக உள்ளது.

**பொருள் :**

மண்டூரம் 14, இலிங்கம் (1 பலம்) 35 கி. சாற்றில் அரைத்து வேகவைத்து, புடமிடவும். இஞ்சிச்சாற்றில் உண்ணவும்.

மூலக்கிராணி, பைத்தியம், பாண்டு, காமாலை, சோகை, பார்வைக்குறைவு, சுவாசகாசம், அக்னி மந்தம், என்பன தீரும்.

நாவல்பட்டை, கையான்சாறு லோக மண்டூரம் 336, மி. (உழக்கு) வேகவைத்து எடுத்து புடமிட பற்பம். திரிபலையை கியாழமிட்டு அரைத்து, 7 புடமிடச் செந்தூரம். கருப்பட்டியில் உட்கொள்ள நீரிழிவு, சூலை, குன்மம், பிரமியம்,பாண்டு, குன்மம். ஊது காமாலை தீரும். முனிவர் சொல்லிய உலோக மண்டூரம் இதுவாகும். மண்டூரப்பொடி பன்னீர் 4.4 கி. (கழஞ்சு) இரசம் 35 கி. (பலம்) கந்தகம் 3,68 கி. (7 கழஞ்சு) வெங்காரம் 17.6 (4 கழஞ்சு) குமரிச்சாற்றில் அரைக்கவும். வில்லை தட்டி, தாழைச்சோறு மேலே போட்டு சட்டியில் வைத்து மூடி, வறுத்துப் பின்னர் சீலைமண் செய்து எரிக்கவும். 3 நாள் எரித்து 4ம் நாள் எடுத்துப் பார்க்க செந்தூரம். 488 கி. (பணவெடை) கொள்ள விடபாகம், பைத்தியம், காமாலை, கண்ணோய், பாண்டு தீரும்.

"தான் கழஞ்சு மிகுந்த செந்தூரம் பணவெடை
கொள் உள்ள கஸிசை அகுலையுடன் உகந்த
நீருமை நீரமுலை மெள்ள சக்தி குன்மமுடன்
மிகுந்த குன்மம் எரி குன்மமுடன் கொள்ள
வியாதிதான் தீரும் குருதியன்ன சொல்வோமே
ஈரவெங்காயம் வெள்ளரிக்காய்
பிசைந்த தண்ணீர் முக்கழஞ்சுபார்
பிசைந்த தண்ணீர் முக்கழஞ்சப்பா
செந்தூரம் பணவெடை நீரடைப்பான் ஆறத்தீரும்
கல்லடைப்பான் அதுக்கு இந்த அனுபானம்
தீரச் சொன்னோம்
லோகமொன்று திருந்த
செந்தூரம் இதுவாமே"

"ஒவ்வொரு சுத்தியாய்தான் பண்ணி
 உகந்த காந்தம் மூன்று பங்கு
அப்ப ஒழுகும் சாதிலிங்க
 மதித்த வெள்ளீயம் சீலையிலேதான் சுட்டிவை
நாகேந்திரம் சுட்டி எரித்தவுடன்
 வங்க சீலையின்தான் முடிந்து
மருவு தோலாந்திரமங்காயமும்
 அத்திப்பட்டையுடன் நன்றாய் கியாழந்தான் இடவே
சொல்லும் கசபுட மாயிட்டு
 தானாகும் செந்தூரம்
அனுபானம் நன்றாய் திப்பிலி
 அட்டசாம் வாளாநொச்சி கியாழத்தில்
வறுத்த ஒன்றில் செந்தூரம்
 இழையிடவேதான் தீரு
இறுத்த வியாதி விளம்பக் கேளே.
வயத்தில் வியாதி திமிர்பூச்சி
 மருவு தீபன முடனாக
நயந்தசத்துவாதமுடன்
 நன்றாய் செயமும் பெருவயிறும்
சயத்த பாண்டு அறுவை பல
 சத்தித்த நீர்க்கோவை கிராணியுடன்
பயந்த வாத சுரமென்று
 பண்ணுகர்ப்பரோகமுடன்
அரைப்புற்றுடனே பிரமியமும்
 ஆண்மூத்திர சிரிச்சியுடன்
உரத்த இரத்தப்பிரமியமும்
 ஊறுவண்டு கடி குட்டம்
பருத்த சன்னிப்திமூன்றும்
 படர்தாமரை முதலாக
திருத்தமாகத் தீருமென்று
 தெய்வமுனிவர் செப்பியதே.

**உரை:**

தெய்வத் தன்மை உள்ள முனிவர்கள் கூறினார்கள். மண்டூர செந்தூரம் பணவெடை உட்கொள்ள, கலிசை, அகுவை,

நீருமை, சத்திகுன்மம், எரிகுன்மம் தீரும். வெங்காயம், வெள்ளரிக்காய் பிசைந்து மூன்று கழஞ்சு நீரில் பணவெடை செந்தூரம் உட்கொள்ள கல்லடைப்பு, நீரடைப்புத் தீரும்.

காந்தம் 3 பங்கு, சாதிலிங்கம், வெள்வங்கத்தை சீலையில் கட்டி, தோலாயந்திரமாக எரித்து எடுக்கவும். பின் பெருங்காயம், அத்திப்பட்டை கியாழம் வைத்து அரைத்துக் கொள்ளவும். கசபுடம் வைக்கவும் செந்தூரமாகும். திப்பிலி, நொச்சிக் கியாழம் இவற்றில் உட்கொள்ளவும். வயிற்றுக்கோளாறுகள், பூச்சிகள், சயம், பெருவயிறு, பாண்டு, நீர்க்கோவை கிராணி, அரைப்புற்று, பிரமியம், சிறுநீர்த்தடை இரத்தப் (பிரமியம்) போக்கு, வண்டுகடி, குட்டம், சன்னி 13, படர்தாமரை என்பன தீரும்.

### பிரமானந்த பைரவ மாத்திரைக்குப் பாடல்

"சுரம் போம் சன்னி போம் பித்தந்தான்
விடபேதியோடும்
ஒடு பிரமானந்தபைரவன் என்றே
உலகினில் இதை உரை செய்தாரே"

**உரை :**

சுரம், சன்னி, பித்தம். விட பேதி என்ற பிணிகள் தீரும், ஒரு பிரமானந்த மாத்திரை உண்ண, இவை தீரும் என்று பெரிய முனிவர்கள் கூறினார்.
படர்தாமரை தீரும் என முனிவர் கூறினார்.

## மருந்துவம் அல்லாதவைகள்

## நூல் வரலாறு

இந்த "அட்டவணை லாகடம் வைகாசி 30 சோமவாரம் சதுர்த்தசி 200 பூச நட்சத்திரம் 29 நாழி தாத்தாச்சாரியார் சீடன் சார்பாடி வெண்ணமாலை அய்யர் வம்சமாகிய முத்து சாமி அய்யருக்கு குமாரன் சின்னய்யர் வாசிக்கின் வாகட புத்தகம் இது சாமணந்தோப்பு கேட்டில் எழுதி முடிந்தது. சாரதாம்பாள் துணை. சின்னய்யர் ஒப்பம்.

## மருத்துவம் அல்லாதவைகள்

1. வசியம்
2. மந்திரம்

### வசியம்

உலர்ந்த கோவைப் பழ விரையை 1 கழஞ்சு (4.4 கி.) எடுத்துக்கொண்டு சுழல் வண்டு 5, விந்து (4.4கி) 1 கழஞ்சு, எச்சில், மூக்குப்பிசின், கண் பீளை, காது குறும்பி, நெற்றி அழுக்கு, கண், கழுத்து, அக்கிள், நக, அழுக்குகள் — சேர்த்து பேயக் கரும்பு சாற்றிலரைத்துக் கொடுக்கவும்.

### (வேறு)

பெண்ணுடைய கலவி செய்யும்போது உடல் அழுக்கை எடுத்து, விந்துடன் தொட்டால் சிணுங்கி சாற்றிலரைத்து உட்கொள்ள தர பிரிய மாட்டாள்

### (வேறு)

கோவை வித்து, ஈப்புலி வித்து, (1 பலம்) 35 கி. தொட்டால் சிணுங்கி, பேய்க்கரும்புச்சாற்றில் தரவும்.

### (வேறு)

பொற்றலைக் கையான் விரை, ஐவிரலி வித்து, ஈப்புலி வித்து, அவுரிவேர், புல்லா மணக்கு கிழங்கு வேர், குழியான், சுழல்வண்டு, ஆலாம்பட்டை இவைகளை சிறுநீரிலரைத்து குளிகையாக உருட்டி மாதவிலக்கு நாளில் பொட்டணம் கட்டி யோனிக்குள் 3 நாட்கள் வைத்திருந்து பிறகு எடுத்து, நெய்யில் உட்கொள்ள தர கணவன் பிரியமாட்டான்.

**மாற்று**

சாம்பல் பூசணியை தேங்காய் பாலில் காய்ச்சி 3 நாட்கள் தரவும்.

**வசியம்**

கருங்குருவி பித்துடன் விந்து கலந்து அரைத்து வெற்றிலை பாக்கில் தரவும்.

# பொதுப்பிரிவு

''பங்குவ பாகத்தை உறு மருந்தும் பிறழ்
பக்குவ பாகத்துப்பரு மருந்து — மெய்க் குறுங்கா
லக்காலமும் பருணவாழி வருந்துன் சிந்துசேடன்
கக்காலமும் பொருந்தும் காண்''

**பொருள் :**

தக்கபடி செய்யப்பட்ட மருந்துகள் தேவர்களும் உண்ண விருப்பம் கொண்டது ஆகும். செய்பாகம் சரிவர இல்லா மருந்து வாசுகி கக்கிய விரஞ்சுக்குச் சமமாகும்.

**மறுபாக குணம்**

''மாகமொட்டிக் குளிர்ந்த பாணி சாயனரல்
வேக விவேக குடிநீர் மெய்ச்சுரச — மேகுமிரா
மீந்த வெஞ்சனாதிகளை மீளவொரு காவானடி
மாந்த நெஞ்சம் வேறிருக்குமா '

**பொருள் :**

ஆறின வெந்நீர், இரசாயனம். இளகம், குடிநீர் என்பனவும், சாறு, முன் இரவு மீந்த உணவு என்பனவற்றை அடுப்பில் வைத்து மீண்டும் பதத்தில் எரித்து உண்ண நஞ்சாகும்.

**கலத்தின் குணம் :**

''தெங்கின் குடுக்கை திகிரி தந்த பாத்திரத்தார்
நன்கிராப் பன்மருந்து நன் மருந்தாம் - வெண்கலந்தான்
மைஇரும்பால் கட்டைகளால் கொம்பால் பாத்திரங்கள்
செய்யினி ரண்டாம் பட்சம் செப்பு''

**பொருள்:**

தேங்காய் குடுவை, மூங்கில்பரணை, தந்தச்சிமிழ் இவற்றில் வைக்கும் அற்பமருந்துகளும் உயர்ந்த மருந்துகளாகும். வெங்

கலம், இரும்பு, மரம் மிருகங்களின் கொம்பு இலைகளால் ஆன கலங்களில் மருந்துகளை வைப்பது நடுத்தரமாகும்.

## மருந்துவ முறைகள்

"சூதகந்திதாது பற்பம் சொன்ன நாட்டார் சிகிச்சை
ஓதரிய மூலி இம்மண்ணோர் சிகிச்சை - வேதடரும்
சத்திராட்சச ராக்கினி நிசாசரங் சிகிச்சை ஒன்றே
முத்தரத்த தாகும் மொழி".

தாதுபற்பங்கள், தங்கம் என்பன (தேவ) உயர்மருத்துவம்; மூலிகை முறை மனிதர்கள் மருத்துவம். அறுவை மருத்துவ வழிகளான தீயால் சுடுதல், அறுத்தல், காரம் வைத்தல் என்பன அசுரர்களின் மருத்துவ முறைகளாகும்.

| | | |
|---|---|---|
| தாதுபற்பங்கள் | — தேவமுறை | — **பூசுரர்** |
| மூலிகைகள் | — மனிதமுறை | — **நரர்** |
| காரம், சுடுதல் அறுத்தம் | — அசுரர்கள்முறை | — **அசுரர்** |

## மருந்துகளின் தன்மை

| | |
|---|---|
| மை, கலிக்கம், நசியம் | — 1 ஆண்டு பயன் தரும் |
| நசியம், நீர், வர்த்தி, பொடி | — 3 மாதங்கள் |
| களிம்பு, சீலை | — 6 மாதங்கள் |
| சுரசம், சாறு, குடிநீர், களி, அடை | — 3 மணி நேரம் (1 சாமம்) |
| சூரணம், பிட்டு, வடகம், வெண்ணெய் | — 3 மாதங்கள் |
| மணப்பாகு, நெய், இரசாயனம், லேகியம் | — 6 மாதங்கள் |
| எண்ணெய், மாத்திரை, கடுகு, பக்குவம் | |
| தேனூறல், தீநீர், | — ஒரு ஆண்டு |
| மெழுகு, குழம்பு | — ஐந்து ஆண்டுகள் |
| இரசபதங்கம் | — பத்தாண்டுகள் |
| செந்தூரம் | — எழுபத்தைந்து ஆண்டுகள் |
| நீறு, கட்டு, உருக்கு, களங்கு | — 100 ஆண்டுகள் |
| சுண்ணம் | — 500 ஆண்டுகள் |
| கற்பம், சத்து, குருக்குளிகை | — பல்லாயிரம் |

## மருந்துகள் செய்யும் முறைகள்

1. சுருக்குதல்
2. அரைத்தல்
3. கசக்குதல்
4. வறுத்தல்
5. கழற்றுதல்
6. உருக்குதல்
7. இறுத்தல்
8. உலர்த்துதல்
9. உரைத்தல்
10. குழப்புதல்
11. உடைத்தல்
12. நறுக்குதல்
13. உருட்டுதல்
14. நகர்த்துதல்
15. நசுக்குதல்
16. பொசுக்குதல்
17. நனைத்தல்
18. எரித்தல்
19. வழித்தல்
20. இறுக்குதல்
21. இழைத்தல்
22. குழைத்தல்
23. எடுத்தல்
24. கலக்குதல்

## அக மருந்து 32 — புறமருந்து 32

| அக மருந்து 32 | புறமருந்து 32 |
|---|---|
| 1. சுரசம் | 1. கட்டுதல் |
| 2. சாறு | 2. பற்று |
| 3. குடிநீர் | 3. ஒற்றடம் |
| 4. கற்கம் | 4. பூச்சு |
| 5. உட்களி | 5. வேது |
| 6. அடை | 6. பொட்டணம் |

7. சூரணம்
8. பிட்டு
9. வடகம்
10. வெண்ணெய்
11. மணப்பாகு
12. நெய்
13. இரசாயனம்
14. இலேகியம்
15. எண்ணெய்
16. மாத்திரை
17. கடுகு
18. பக்குவம்
19. தேனூறல்
20. தீநீர்
21. மெழுகு
22. குழம்பு
23 பதங்கம்
24. செந்தூரம்
25. பற்பம்
26. கட்டு
27. உருக்கு
28. களங்கு
29. சுன்னம்
30. கற்பம்
31. சத்து
32. குருக்குளிகை

7. தொக்கணம்
8. புகை
9. மை
10. பொடி திமிர்தல்
11. கலிக்கம்
12. நசியம்
13. நாசிகாபரணம்
14. ஊதுதல்
15. களிம்பு
16. சீலை
17. நீர்
18. வர்த்தி
19. சுட்டிகை
20. சலாகை
21. பசை
22. களி
23. பொடி
24. முறிச்சல்
25. காரம்
26. அட்டைவிடல்
27. அறுவை
28. கீறல்
29. கொம்பு கட்டல்
30. உறிஞ்சல்
31. குருதிவாங்கல்
32. பீச்சு

## மருந்துகள் செய்ய உதவும் கருவிகள்

1) கல்வம்

**வகைகள்**

1) கருப்பு
2) சிவப்பு
3) வெள்ளை

4) மஞ்சள்

5) பச்சை

2) கரண்டி

3) அகல்

4) குப்பி

5) அடைப்பான்

6) சலாகை

7) சட்டி.

8) மூசை

**வகைகள்**

1) வச்சிரமூசை

2) மண்பூசை

9) சீலை

10) வரட்டி.

**வகைகள்**

1) இயற்கை

2) செயற்கை

11) மணல்

12) விறகு

13) சுண்ணாம்பு

14) கரி

15) குழி

16) புடம்

**வகைகள்**

1) உமி

2) தானியம்

3) சூரிய

4) சந்திர

5) அமாவாசை

6) பருவம்

7) பனி

8) பட்டை

17) அடுப்பு

18) துருத்தி

வகைகள்

1) ஒற்றை

2) இரட்டை

## பொறிகள்

1. ஆவி இயந்திரம்
2. துலா இயந்திரம்
3. தூப இயந்திரம்
4. மெழுகு தைல இயந்திரம்
5. சுடர் தைலக் கருவி
6 குப்பிப்புடக் கருவி
7. குழித் தைலக் கருவி
8. செந்தூரம் எரிக்கும் கருவி
9. வாலுகா இயந்திரம்.

## பிணியாளனுக்கு அறிவுரை

"பத்தியத்தை நோயை அனுபானத்தை லங்கனத்தை
பத்தியத்தை முன்மருகன் பண்ணலில்கொள் —
பத்தியத்தை
ஏகமா யார்த்தாலும் ஏறாச் செவிபோல
ஏகமா ஆர்த்தாலும் மெய்"

**பொருள்:**

உணவுக்கட்டுப்பாடு, உண்ணும் வழி, பட்டினி என்பன வற்றைக் கடைப்பிடித்தல் வேண்டும்.

## பற்ப செந்தூரம்

"மூவினையோர் வெண் செய்கரு மொய்ம்புவை நம்பியறி
மூவினையோர் நன்னூரன் மொழிவதிதே — மூவி
வலாரி அங்கி காலனிவர் வாகனமாச் செய்ய
வலாரி அங்கி அம்புலியாள்வார்"

**பொருள்:**

படைத்தல், காத்தல், அழித்தல் என்ற மூவினைகளான தொழில் வல்லார்கள் செய்யும் பற்ப, செந்தூரம், மாத்திரை என்பனவற்றை அறிந்து பிணியாளர்களுக்கு வெண்மை சிவப்பு, கறுப்பு என்ற நிறங்களில் உட்கொள்ளத்தரவும் இவ்வாறு தரும் மருத்துவர் தன்திறமையால் உலகை ஆள்பவ ராவர்.

## இலக்கணம்

மணிமந்திர அவிழ்த மார்க்கம் தெரிந்து
பிணிகள் எரிந்தொதுக்கிப்பின்னும் — தணிய
உடலை வளர்த்திடவா ஊத்தியினா நூலால்
பிடகர் வைத்தியர்க்குப் பேர்"

**பொருள் :**

மணி, மந்திர, மருத்துவவழிகள் அறிந்து பிணிகளை நீக்கி, ஒதுக்கித் தணித்தலால். உடலை பிணிகள் வராமல் தடுத்தலால் மருத்துவர்கள் பெயர் பெறுவார்கள்.

**பொருள் :**

"வெந்த பிசிதத்தை வேகாப்பிசிதத்தில்
நுந்துதல் போனானை நுகர்வாருக்கு - செந்துகள்மேல்
கண்ணோட்டமில்லா கதைப்போல் பொருளாசை
எண்ணும் பரிகாரிகளுக்கில்"

**பொருள் :**

ஊன் உண்பவன் பிற உயிர்களின் வருத்தம் அறியாதவன் போல், பொருளாசை கொண்ட மருத்துவன் பிணியாளர்களின் வேதனையை அறியமாட்டான்.

### பிணிகளின் காரணம் :

பிணிக்கேது கரம் என்ப, பேசுதல் வேறில்லை
தணிக்காத கோபத்தால் தாகம் தணிக்காமை
யால் உண்டி புணர்ச்சியால் ஈரத்தால் சுவையால்
மேலும் பிணிகள் உறுமே''

**பொருள் :**

சினம் கொள்ளாமல், மிக்க நீர்வேட்கையால் மிகு கலவி யால், ஈரத்தால், அதிக சுவையால் பிணிகள் ஏற்படும்.

### பத்தியம்

''பத்தியம் போனால் பலன்போ மருந்துகளும்
சுத்தினிநோய்கள் அணுகுமே — பத்தியங்கள்
உண்டானாலுண்டா உறுதி அவிழ்தங்கட்
கெண்டாலும் உண்மை இதே''

**பொருள் :**

உணவு விலக்கு முறிந்தால் பலன் கிடைக்காது. நோய்கள் உண்டாகும். உணவு விலக்கு நிறைவேற, மருந்துகள் பலன் தரும். உண்மை இதுவேயாகும்.

பத்தியத்தால் உண்டாகும் பண்புதற்குப் பேராண்மை
பத்தியத்தால் உண்டாகும் பாண்டிதங்கள் பத்தியத்தை
விட்டால் பிணி வகைகள் வித்தரிக்கும் விட்டிடலை
விட்டால் பறக்குமே வினை''

**பொருள் :**

உணவுக் கட்டுப்பாட்டால் மருத்துவர்களுக்கு புகழ் உண் டாகும். உணவு முறையை நீக்க, பிணிகள் அதிகமாகும். உணவு முறையை ஏற்றபடி கொள்ள வினைகள் நீங்கும்.

### பத்திய நீக்கும் பொருள்கள்

''பல் வணம் புளி கடுகு வெண்ணாலு முதலாக
ஒவ்வொரு தினமா ஒழிலராய் — நலிவிறைச்சி
கூழ்ப் பாண்ட மச்சம் பெண் கோத்திரம் கொள் பிரமபத்திரி
கீழ்ப்பாகு மெத்தலிது சீ''

**பொருள் :**

உப்பு, புளி, கடுகு, எள், இறைச்சி, பூசணி, மீன், கலசி, வரகு, கொள், புகையிலை என்பன மருந்துகளை முறிக்கும் பொருள்களாகும். எனவே மருந்துகள் உண்ணும் காலத்தில் இவைகளை உட்கொள்ளாமல் நீக்குதல் வேண்டும்.

**மருந்து**

"வேண்டா மருந்துஎன்று வீணுக் கருந்துவது
பூண்டாகு மெய்க்குப் பொருந்தியது — மீண்டும்
செரித்த அறிந்ததனைத் தின்னில் சிறுத்து
மரித்து விடாமல் வாழ்வார்"

**பொருள்:**

வேண்டாத மருந்துகளை வீணாக உட்கொள்ளக்கூடாது. உடலுக்கு ஏற்றது உடலில் செரித்து அறிந்து கொண்டவை களையே உண்ணவேண்டும், அவர்களின் வாழ்நாள் நீண்ட தாகும்.

**மருத்துவரிலக்கணம்**

குண நாடி நோயறிந்து கொண்டு பிணியாளர்
குணநாடி ஞாபகமுட் கொண்டு — நிணரா
யத்து தணிய மடைவவிழ்த மீயு
மதியர் வயித்தியராவர்"

**பொருள் :**

குணங்கள் அறிந்து, நோய் அறிந்து, நாடிகள் அறிந்து நினைவில் கொண்டு நோய் தணிக்கும் மருந்துகள் தந்து, நோய் தணிப்பவரே மருத்துவர்கள் ஆவர்.

"நோயறிந்து நோய் முதல் நோக்கறிந்து நோயுதவி
தாயறிந்து போக்கும் தரமறித்து — காயநிலை
நொந்தழியா வண்ண நுகர்விப்பார் நோயினர்க்கு
தந்தை எனு நற்பண்டிதர்"

**பொருள் :**

நோய்களை அறிந்து, அதன் நோக்கம் அறிந்து, போக்கும் முறைகள் அறிந்து; நோயாளியின் உடல் திறம் அறிந்து, வருத்தும் துன்பம்போக்கி, மகிழ்விப்பார்கள், மருத்துவர்கள்.

### மருத்துவர்கள் இயல்புகள்

1. நோய் அறிதல்
2. வரும் வழி அறிதல்
3. நீக்கும் வழி அறிதல்
4. நோய்களின் அளவுகள் அறிதல்
5. நோயாளியின் உடல் தன்மை அறிதல்
6. நோயாளியின் மனநிலை அறிதல்
7. காலம் அறிதல்
8. துன்பங்களின் நிலை அறிதல்
9. முடிவுகள் அறிதல்
10. முடியாத நிலைகள் அறிதல்
11. யாப்பிய முணர்தல்
12. மருந்துகள் செய்தல்
13. பழைய மருத்துவர்கள் வழியில் செல்லல்
14. குருதி நீக்கல்
15. அறுத்தல்
16. சுடுதல்

பதார்த்த குண சிந்தாமணி — காசிம் முகைதீன் இராவுத்தர் 1926

### தன்னுதல் (பத்தியம்)

"கிரிச்சரம் தனக்கு வெல்லம் கேள் பாண்டு நோய்க்கு
மரிப்பேதிகட்கு சுக்காம் — எரிப்பான்
மேகந்தனக்குத்தேன்மிக்கு பிணிகட்களையும்
ஊகங் கொடி வேலி ஊட்டு"

**பொருள் :**

திரிச்சரத்திற்கு வெல்லம், பாண்டு வாதாதிகளுக்கு சுக்கு, மேகநோய்க்குத்தேன், மந்தாக்கினியால் பிறந்த நோய்களுக்கு சித்திரமூலப்பட்டையும் தயிரில் ஊறவைத்த மோரைக் குடிக்க வேண்டும்.

''சுண்டை நெல்லி தேர் களா தூதுளை பாவட்டையா
தொண்டை நாரத்தங்க சறிஞ்சி — பண்டைநாட்
சென்ற வருணைக்காயும் சேருரு காயென்னிற்
தின்ற மருந்தினமு ராதே''

**பொருள்:**

சுண்டை, நெல்லி, தேற்றான், களா, தூதுளை பாவட்டை, ஆதொண்டை, எலுமிச்சை, நாரத்தைப் பிஞ்சு, இஞ்சி நாட்பட ஊற உப்பில் வைத்து உண்ண மருந்தின் குணங்கள் கெடாது.

''புலர்த்தியபின் அருந்து போசனந்தனில் புளிப்பு
சலந்துறு ததிபால் பாகல் சரகம் மீன் இறைச்சி மச்ச
நிலந்தெழுபிரமபத்திரி நித்திரை மடவாரின்னு
நலந்துறாவகை நீக்குப்பின்னாளும் அளும்ப
பத்தியத்து நில்லே''

**பொருள் :**

தைலம் குளித்தவுடன் உணவில் புளி, தயிர், பால், பாகல் இலைக்கரி மச்சம், மாமிசம், அகத்தி, புகையிலை பகல் உறக்கம் புணர்ச்சி என்பன நீக்கவும்.

''சிந்தக்கனி மிகுந்த சீலனந்தாம் பூலம் வெல்லம்
பந்தப்பயிற்றுப்பருப்பு மோர் — சிந்து
கடலை இவை அற்றுரைக்கரித்திடார்தங்க
உடலை இவை வைத்திருந்தார் உண்''

**பொருள் :**

புளி, அடைக்கனி, கண்ணல், வெல்லம், கடலை, பயிறு. மோர் என்பன நீக்கவேண்டும்.

"கொள்ளுக்காடி குமட்டிக்காய் கோழிப்பன்றிகொக்குடன்
முள்ளில் பெரிய பாகல்காய் முதிரு அவரை பயிற்றங்காய்
பள்ளத் தெழுந்தமடல் சேம்பு படரும் வள்ளி பாலை
இலை
எள்ளத்தனை தான்றின் பீறே எல்லா மருந்து இழந்தாரே"
மாங்காய் இளநீர் மாதுளங்காய் மாவின்பண்டம் புளி கடுகு
தேங்காய் நெய்பால் கிழங்கு பழந்தின்னலும் காயம்
வெங்காயம்
மீங்காதரிக்குஞ்சுராபான ரச்சங்கள் பனங்கள்
ஆங்கே இவற்று ஒன்றேனும் வருந்தாதிருந்தால்
மருந்தாமே"

**பொருள் :**

கொள், காடி, குமட்டிக்காய், சேவல், பன்றி, கொக்கு, பெரிய பாகல், முற்றிய அவரை, காராமணி சேப்பங்கிழங்கு, வள்ளிக்கிழங்கு, பாலைக்கீரை, மாங்காய், இளநீர், மாதுளை, மாப்பண்டம், புளி, கடுகு, தேங்காய், எருமை நெய், கிழங்கு கள், முப்பழங்கள், பெருங்காயம், வெங்காயம் கள் என்பன அபத்தியமாகும்.

### வாதத்தைத் தூண்டும் பொருட்கள்

செங்கழுநீர் கோட்டந்தேன் மிளகு நல்லெண்ணெய்
தங்கு பெருங்காயம் தழுதாழை - எங்கெங்கும்
கூட்டு சிறு முத்து நெய் கோதில் உழுந்து இவைகள்
வாட்டும் வாதத்தை மதி"

**பொருள் :**

செங்கழுநீர் கிழங்கு, கோட்டம், தேன், மிளகு, நல்லெண்ணெய், பெருங்காயம், தழுதாழை, ஆமணக்கு எண்ணெய் உளுந்து இவை வாதத்தைத் தூண்டும் பொருட்கள்.

### பித்தம் தூண்டும் பொருட்கள்

"கொம்மட்டு வாழைப்பன்னன் கொளுத்திய கரியினோடே
விம்மிய தண்ணீர்விட்டான் வேரேனும் கிழங்கு சாந்தம்
செம்மை சேர்நெல்லி முள்ளிசேரும் இம்மருந்தெல்லாமே
கம்மிய பித்தத்திற்கு காலனென்று ஓதுவாரே"

**பொருள்:**

வாழைக்கறி, தண்ணீர் விட்டான் கிழங்கு' நெல்லிமுள்ளி என்பன பித்தம் தூண்டும் பொருட்கள்

### கபத்தைத் தூண்டும் பொருட்கள்

"ஆவினது பால் அரத்தை முள்ளங்கி மயில்
தூவி நறுஞ்சாம்பல் தூதுளந்தேன் - மாவேரமந்
துய்ய சருக்கரை துழாய் விதை விளாம்பழமும்
மையதை ஓட்டு மறி"

**பொருள்:**

ஆவின்பால், அரத்தை, மயில்பீலி சாம்பல் தூதுவளை, தேன், ஓமம், வெள்ளை சர்க்கரை, துளசிவிதை, விளாம்பழம் கபத்தைத் தூண்டும் பொருட்கள்.

### அறுசுவைகள்

"புளிதுவர்விஞ்சும் கறியால் பூரிக்கும் வாதம்
தெளி உவர்கைப்பேரில் பித்தம் சீறும் - கிளிமொழியே
கார்பினிப்பு விஞ்சில் கபம் விஞ்சும் - அட்டிரதச்
சேர்ப்புணரில் நோய் அணுகாதே"

**பொருள்கள்:**

புளி, துவர்ப்பும் அதிகமாக வாதம் அதிகமாகும். கசப்பு, உப்பு அதிகமானால் பித்தம் அதிகமாகும். இனிப்பு, காரம் அதிகமாக உண்ண கபம் அதிகமாகும். சரியான முறையில் உண்ண நோய் ஏற்படாது.

### குழம்பு பூசுதலின் குணம்

"பூச மணத்தாலால் இன்பம் பூணும் அணுக்கிருமி
நாசமுறும் முட்டிக்கு நல்வலியாம். தேசமறு
நாதவிந்துவும் விரைத்தீ நண்ண மிகவிளையும்
சீதவிந்துவின் குளிர் போந்தேர்"

**பொருள்:**

மணப் பொட்களை பூச இன்பம் கிட்டும் கிருமிகள் அழியும் நாதம், விந்து ஊறும். சீதம் ஏற்படும்.

### தாம்பூலகுணம்

''வாயுமந்தம் பீனசம் சுவாச - காசம் மருசி
தயுதர தோடம் இவைபோகும் - தூயஉடற்கு
காந்திதரும் புத்திக்கும் நலம் செய்யும் மணம்
சார்ந்த தாம்பூல ரசம்''

**பொருள்:**

வாயு மந்தம், பீனசம், சுவாசகாசம், அரோசகம், வயிற்றுக் கோளாறுகள் என்பன போக்கி, ஒளி தரும்.

## ஐநில வகைகள்

''குறிஞ்சி வரு நிலத்தில் கொற்ற முண்டி ரத்தம்
உறுஞ்சி வரு சுரமும் உண்டாம் அறிஞருரைக்
கையமே தங்குதரத்தாமை வல்லையும் கதிக்கும்
ஐயமே தங்கும் அறி''

**பொருள் :**

இரத்தம் உறுஞ்சும் சுரம், கட்டியும் உண்டாகும். கபத்தின் தன்மையை உடையது குறிஞ்சி என்ற மலை வாழ் நிலம் ஆகும்.

''நெய்தனில்மே உலர்ப்பை நீங்காது உரினுமது
வெய்தநிலமே தங்குவீடாகும் - நொய்தன்
மருங்குடலை முக்காக்கு வல்லுறுப்பை வீக்கும்
கருங்கடலை கீழறக்கும் காண்''

**பொருள் :**

பித்தவாயு, தங்குமிடம் நெய்தல்நிலம் கபநீர் தடித்தலை உண்டாக்கும். குடலண்டம், யானைக்காலையும் ஏற்படுத்தும்.

''முல்லை நிலத்தமைய முரி நிரை மேவினும்
எல்லை நிலைத்த பித்தம் எங்குறும் காண் அல்லை எனில்
வாதமொழி யாததனுண் மண்ணுமவைவழ்நோய
பேதமொழியா அறையப் பின்பு''

**பொருள் :**

பித்தம் அதிகரிக்கும். வாதமும் பெருகி இருக்கும். இவற்றால் உண்டாகும் பிணிகள் சொல்ல இயலாத எண்ணிக்கைகளைக்கொண்டதாகும்.

"மருதநில நன்னீர் வளமொன்றைக் கொண்டே
பொருத நிலமாதிய நோய் போக்கும் - கருதநிலத்
தாறிரதஞ் சூழ வருந்துவர் என்றால் பிணிஎல்லா
ஏறி ரதம் சூழ்விக்கும் இல்"

**பொருள்:**

வாத, பித்த, கபத்தால் ஏற்படும் குற்றங்களை நீக்கும். அறுசுவையுடன் உள்ள உணவை உண்ண நோய்கள் நீங்கும்.

"பாலை நிலம்போல் படரைப்பிறப்பிக்க
மேலை நில ஈயாது விரித்ததற்கு - வேலைநில
முப்பிணிக்கு இல்லா முறையே அவற்றலா
எப்பிணிக்கு இல்லாமல் எண்"

**பொருள்:**

துன்பம் தரும் பாலையில் எல்லாபிணிகளும் ஏற்படும்.

**விடம்நீக்கும் உணவு வகைகள்**

"பேய்ச்சுரைபேய் குமட்டி பேய்ப்பீர்கொடு துமட்டி
பேய்ப்புடலை அழிஞ்சில் பேரறிவு - வாய்த்த மலை
வேம்பு சிவனார்வேம்பு வெள்ளெறுக்கு வெள்ளருகு
சோம்புவிடம் போக்கு மெனச் சொல்"

**பொருள்:**

பேய்ச்சுரை, பேய்க்குமட்டி, பேய் பீர்க்கு' பேய்துமட்டி, சிவன்வேம்பு, மலைவேம்பு, வெள்ளறுகு, வெள்ளெருக்கு சோம்பு என்பன நஞ்சுகளைப் போக்கும் பொருள்களாகும்.

## தாம்பூலம் போடத்தகாதவர்கள்

"மதமூர்ச்சை ரோசம் மகாசன்னி பாதம்
மதிருட்சை சுட்சுநோ யானால் - முதிர்விடங்கன்
பித்தசுயம் சிரநோய் பேசும்இவை ஆகாது
சுத்ததாம் பூலம்எனச் சொல்"

**பொருள்:**

மதம், மயக்கம், பெரிய சன்னிரோகம், தாபசுரம், இளைப்பு, முற்றிய விடம், பித்தம், சயம், தலைநோய்கள் இவைகளுக்குத் தாம்பூலம போடக்கூடாது.

## நெய்யுண்ணத்தகாதவர்கள்

"தருணசுரம் சந்தி, சலதோடம் தோட
அருண மகோதரம் நாசும் - வருணவதி
சாரங்க வீனவுரைதா வரிக்குன் மங்களுக்கா
தாரங்க வீனவுரைத் தன்"

**பொருள் :**

தருணசுரம் சந்தி, நீர்க்கோவை, பெருவயிறு, தாழ்ந்த ஒலி பேச்சு, குன்மம் என்ற நோய் கொண்டவர்கள் நெய்யுண்ணக் கூடாது.

## உணவு உட்கொள்ளும் விதி

"ஆதியில் இனிப்பு நடுவாம்பிற நீருப்பொடு சா
சாதி உறைப்பப்பா அந்தத்தில் கோதிருப்பா
பாந்தியும் உப்பூறிய காயாஇலகை சேர்உணவை
மாந்ததி சகத்தை உறுவாய்"

உணவு உட்கொள்ளும் முன் இனிப்பும். நடுவில் புளிப்பு, உப்பு, காரம் என்பனவும் இறுதியில் துவர்ப்புள்ள புளித்த தயிர், ஊறுகாய் என்பனவற்றை உண்ணவும்.

## உணவு அளவு

| | |
|---|---|
| சோறு, கறிகாய்கள் | — ½ பங்கு |
| பால், மோர், நீர் | — ¼ பங்கு |

**உணவின் பங்கு**

| | |
|---|---|
| கிருமிகள் | — 1 பங்கு |
| மலம் | — 1 பங்கு |
| தீ | — 1 பங்கு |
| உடலுக்கு | — 1 பங்கு |

**மருந்துகளின் சீரணகாலம்**

| | | |
|---|---|---|
| 1) | சூரணம், தைலம், லேகியம், நெய் | — 12 நாழிகை |
| 2) | பற்பம் | — 33/4 நாழிகை |
| 3) | உயர்ந்த உணவு | — 7 நாழிகை |
| 4) | கனிகள் | — 7½ நாழிகை |
| 5) | குடிநீர் (கியாழம்) | — 3 நாழிகை |
| 6) | தேன் | — 12 நாழிகை |

**தீயளவு வகைகள்**

1. **தீபாக்கினி:**

விளக்கின் சுடர்போல் எரிதல் 1 விறகு - 2 விரல் கனமுள்ள வராட்டியில் புடமிடுவது

2. **கமலாக்கினி:**

2 விறகில் புடமிடுவது தாமரைப்பூ போன்று தீயானது எரிதல்.

3. **கதலியாக்கினி:**

3 விறகில் புடமிடுதல் வாழைப்பூப் போல எரியும்.

4. **காடாக்கினி:**

4 விறகில் மிகுதியாக தீ எரியும்

**மருந்தின் எதிர் விளைவுகள்**

"வேர்த்திடும் சிலிர்த்திடும் மெய்சுடு கடுத்து
மார்த்திடு மந்திக்கு அசதி மேலிட்டு
உன்மத்த மாயிடு உரைதடு மாறிடு
மின் மத்தமாம் என ஓங்கிடச் செய்திடும்"

**பொருள்:**

வியர்வை, உடல் கடுப்பு, மந்தம், அசதி, மனம் தடுமாற்றம், எவையன ஏற்படும்

**புட வகைகள்**

| | | |
|---|---|---|
| காடைப்புடம் | — | 1 எரு |
| கவுதாரிப்புடம் | — | 3 எரு |
| குக்குடபுடம் | — | 10 எரு |
| வராகபுடம் | — | 50 எரு |
| மணல் மறைவுபுடம் | — | 90 எரு |

**சித்தமருந்துகள் விளக்கம்**

**மாத்திரைகள் :**

குளிகை, உருண்டை, வட்டம் எனவும் கூறுவர். சிலவகை மருந்துச்சரக்குகளை அப்படியே சுத்தி செய்தோ சேர்த்து சில வகை மூலிகைச் சாறுகளாலாவது குடிநீர்களாலாவது குறிப்பிட்ட காலம் வரை அரைத்து பக்குவம் வந்ததும் குறிப்பிட்ட அளவுள்ள எடையில் வடிவத்தில் உருட்டி நிழலில் உலர்த்தி எடுத்து வைத்துக்கொள்ளும் மருந்து வகைகளுக்கு "மாத்திரைகள்" என்று பெயர்.

**களங்கு:**

சுருக்குக்கொடுத்துப்புடமிட்டு, கட்டி கரியிலிட்டு ஊதி, மணியாக்கி, உருக்கி, தங்கமும் நாகமும் கூட்டி ஆறவைத்து எடுத்துக்கொள்வதாகும்.

**செந்தூரம் :**

அரைத்துப்புடமிட்டு, எரித்து அல்லது வறுத்து அல்லது நன்கரைத்து வெய்யிலில் வைத்துச் சிவக்கும்படியாகச் செய்து, கொள்வது செந்தூரம்.

**பற்பம் :**

அரைத்துப்புடமிட்டு எரித்து, ஊதி வெளுக்கும்படியாகச் செய்து எடுத்துக்கொள்ளுவதே பற்பமாகும்,

**சுண்ணம் :**

சுண்ணாம்பும், சுண்ணாம்புச்சத்துள்ள மூலப்பொருட்களும் முறைப்படி வெந்தநிலையில் ''சுண்ணம்'' என்றே அழைக்கப்படும்.

**பதங்கம் :**

திடப்பொருள் வாயுநிலையை அடைந்து பின் திட பொருளாவதே பதங்கம் ஆகும்.

**குழம்பு :**

நன்கு முடிந்த நிலையில் ''குழம்பு'' போன்று தோன்றுவது ''குழம்பு'' ஆகும்.

**மை :**

முடிந்த நிலையில் கண்ணிலிடும் மை போல் தோற்றமளிக்கும் மருந்துகள் ''மை'' எனப்படும்.

**மெழுகு :**

நன்கு முடிந்த நிலையில் ''மெழுகு'' போன்று தோற்றமளிக்கும் சிலவகை மருந்து வகைகளுக்கு ''மெழுகு'' என்று பெயர்.

**சூரணங்கள் :**

நன்கு உலர்ந்த மருந்து சரக்குகள் நன்கு பொடியாக்கப் பட்ட நிலையில் சூரணங்கள் எனப்படும். இவைகள் 1) குடிநீர் சூரணங்கள் 2) (உட்கொள்ளும்) சூரணங்கள் என்று இரு வகைப்படும்.

**லேகியம் :**

குடிநீர், கஷாயம் அல்லது சாறு வகைகளுடன் சர்க்கரையைக்காய்ச்சி, பதத்தில் பொடியாக்கிய சூரணங்களைச் சேர்த்துக்கிளறி, மிதமான சூட்டில் நெய்யையும் பின் தேனையும் விட்டுக்கிளறி எடுத்துக்கொள்ளுவதாகும்.

**இரசாயனம்:**

சூரணம் செய்து சர்க்கரை நெய் சேர்த்து பிசைந்தோ அல்லது இளகலாக்கிப் பிசைந்தோ எடுத்துக்கொள்ளுவதாகும்.

**வடகம் :**

அவித்தெடுத்து, இடித்து, உருட்டி, உலர்த்தி எடுத்துக் கொள்ளலாகும். மாத்திரையைவிடப் பெரியது.

**தைலம் :**

மருந்து சத்துகளைக் கொண்டு செறிஒட்டிய எண்ணெய்க் குத் ''தைலம்'' எனப்பெயர்.

**நெய் :**

சிலவகை மூலிகைச்சாறுகள், கியாழங்கள், பசும்பால் ஆகியவற்றை நெய்யுடன் சேர்த்துக்காய்ச்சி எடுக்கும் மருந்து வகைகளுக்கு **நெய்** என்று பெயர்.

**கற்பம் :**

மனித உடலை நீண்ட நாட்கள் பிணியின்றி வைத்திருக் கவும், மரணமில்லா தன்மையை அடையவும் அழியாமல் காக்கும் மருந்துகள்.

1) நாள்தோறும் உட்கொள்வது
2) செய்து வைத்திருந்து உண்பது.

**கற்கம் :**

மூலிகைகளை அரைத்த விழுது.

**தீநீர் :**

மருந்து சரக்குகளிலிருந்து வடித்தெடுத்துப் பிரித்த மருந்து சரக்குகளின் சாரம் ஆகும்.

**புகைநீர் :**

வாலையிலிட்டு உப்புகளைச் சிதைத்து வடித்து எடுக்கும் அமிலத்தன்மையுடைய நீர்ப்பொருட்கள்.

**மணப்பாகு :**

சுவை, மணம் கொண்ட குடிநீர் மணப்பாகு ஆகும்.

**வெண்ணெய் :**

வெண்ணெய் போன்ற தோற்றம், குழகுழப்பு கொண்ட மருந்து வகைகளுக்கு **வெண்ணெய்** என்று பெயர்.

**களிம்பு :**

அரை திரவ வடிவிலுள்ள மருந்து வகைகள்.

**பற்று :**

பற்றுப் போட பயன்படும் மருந்து வகைகள்

**நீர் :**

ரணங்களைக் கழுவப்பயன்படும் நீர் வகைகள்.

**பொடி :**

காயம், புண்மீது தூவப் பயன்படும் மருந்து வகைகள்.

**ஆங்கில முறை மருத்துவத்தில் கையாளப்படும் எண்ணெய்கள்**

| | | |
|---|---|---|
| ஒலியம் ஆலிவ் | — | ஆலிவ் எண்ணெய் |
| குரோட்டன் ஆயில் | — | நேர்வாள எண்ணெய் |
| காம்பர் ஆயில் | — | கற்பூர எண்ணெய் |
| ஒலியம் அனித்தி | — | சதகுப்பை எண்ணெய் |
| ஒலியம் அனிசி | — | சோம்பு எண்ணெய் |
| ஒலியம் சின்மைன் | — | கருவாப்பட்டை எண்ணெய் |
| ஒலியம் கரியோபில்லம் | — | கிராம்பு எண்ணெய் |
| ஒலியம் கொப்பையா | — | குங்கிலிய எண்ணெய் |
| கிரியா சோட் | — | சிரட்டை எண்ணெய் |
| யூக்கலிப்டஸ் | — | யூக்லிப்டஸ் எண்ணெய் |
| இத்தியால் | — | |
| ஆயில் ஜுனிப்பர் | — | |
| கெரோசின் | — | மண் எண்ணெய் |
| ஆயில் லவண்டர் | — | மல்லிகைப்பூ எண்ணெய் |

| | |
|---|---|
| ஆயில் மென்ன் | — எலுமிச்சைப்புல் எண்ணெய் |
| பெப்பர்மென்ட் ஆயில் — | |
| காட்லிவர் ஆயில் | — மீன் எண்ணெய் |
| காஸ்டர் ஆயில் | — விளக்கெண்ணெய் |
| ஓலியம் சாண்டல் | — சந்தன எண்ணெய் |

## பொருட்பண்பு

### அமுக்ரா

"கொஞ்சம் துவர்ப்பாம் கொடியகயம் சூலைஅரி
மிஞ்சுகரப்பான் பாண்டு வெப்பதப்பு — விஞ்சி
மூசிவுரு தோடமும்போம் மோக அனலுண்டாம்
அசுவகந்திக் கென்று அறி"

**பொருள் :**

துவர்ப்புச்சுவையை உடையது. கொடிய சயம், வாத சூலை, வாதகரப்பான், பாண்டு, சுரம், வீக்கம், சலதோடம் இவை நீங்கும்.

### அரிதாரம்

"காசமுடன் கயநோய் கபவாதம்
பேசரிய குன்மம் எட்டும் பெருங்காண்-மாசகன்று
கீற்று மதிநுதலே கேளாய் வேதமது
சாற்றும் அரிதாரத்தால்"

**பொருள் :**

காசம், கபவாதம், குன்மம் என்பன நீங்கும். அரிதாரத்தால் என்றறியவும்.

### அதிவிடையம்

அதிவிடையம் சருக்கரார் புதநோய் வெப்பு
கொதிமருவு பேதியொடு கோழை - எதிர்வாந்தி
என்றுரைக்கும் நோய்க்கூட்ட மில்லா அகற்றிவிடும்
குன்றை நிகர்முலையாய் கூறு"

**பொருள் :**

அதிவிடையம், அற்புதநோய், வெப்பு பேதி, கோழை, வாந்தி என்பன போக்கும்

**ஆடுதின்னாப்பாளை**

''ஆடுதொடாப்பாளைக்குக் கிருமி வன்சிலந்தி
நீடுகருங் குட்டம் நிறைகரப்பான் - ஆடிடச்செய்
எண்பது வாயுமிக்க குட்டமும் தீரும்
திண்பெறு நற்றாதுவுமாம் செப்பு''

**பொருள் :**

ஆடு தின்னாப்பாளைக்கு கிருமி, சிலந்தி, கருங்குட்டம், கரப்பான் என்பன தீரும், தாதுவைப்பெருக்கும்.

**ஆமணக்கு**

''மந்தகதி எழுந்த வாதம் மருமவலி
பந்தமலம் இவையாவும் பறக்கும் காண் - சந்ததமும்
பூமணக்கு நெய்த்த புரிசூழ்மாதே வெள்ளை
ஆமணக்குப் பத்திரியால் ஆய்.

**பொருள் :**

வெள்ளாமணக்கு இலையால் வாதம் மர்மவலி, மலச் சுட்டும் என்பன நீங்கும்.

**ஆடாதோடை இலை**

''ஆடாதோடை பன்மையறுக்கும் வாதமுதல்
கோடாகோடி சுரத்தின் கோதொழிக்கும் நாடின்
மிகுந்தெழுந்த சந்திபதி மூன்றும் விலக்கு
மகத்துநோய் போக்கும் அறி''

**பொருள் :**

கபம், சுரம், சந்தி 13 என்பனவற்றைப்போக்கும்.

**ஆவாரை**

''சொல்லுதற்குமட்டோ தொலையாத மேகநீ
ரெல்லாம் மொழிக்கு எரிவகற்று - மெல்லவச

மாலவரைப் பம்பரம் போலாட்டும் தொழிலணங்கே
ஆவாரை மூலிய தே''

**பொருள் :**

ஆவாரை பிரமேகம், சிறுநீர் கோளாறுகள், ஆண் குறி எரிச்சல் என்பன போக்கும்.

**இரசம்**

''விழிநோய் கிரந்தி குன்மம் மெய்சூலை புண்குட்
டழிகால் விந்துவினாலத்தை - வழியாப்
புரியும் விதியாதும் புரியுநோ யெல்லாம்
இரியும்விதியாது மில்லை.

**பொருள் :**

கண்விழிநோய், கிரந்தி, குன்மம் சூலை, புண் என்பன தீரும்.

**இலவங்கப்பத்திரி**

''மேகசுரம் சீதசுரம் வெட்டை சுவாசகாசம்
தாக பித்தம் வாந்தி சர்வசிய நோய் மேகத்திறன்
கட்டியொடு தாதுநட்டம் கைப்புருசி போக்கிவிடும்
இட்ட இலவங்கத்தினில்''

**பொருள் :**

மேகசுரம், சீதசுரம், வெட்டை, சுவாசகாசம், தாகம், பித்தம், வாந்தி, கசப்பு ருசி என்பன போக்கும்.

**இஞ்சி**

''இஞ்சியதனுக்கு இருமல் ஐயம் ஓக்காளம்
வஞ்சிக்கும் சன்னிசுரம் வன்பேதி விஞ்சுகின்ற
சூலையறும் வாதம்போம் தூண்டாத தீபனமாம்
வேலையுறும் கண்ணாய் விளம்பு

**பொருள் :**

இருமல், கபம், வாந்தி, சன்னிசுரம், பேதி, சூலை வாதம், நீக்கி, பசித்தியை உண்டாக்கும்.

## உள்ளி

''சன்னியொடு வாத்தலை நோவு தாளின்வலி
மன்னிய வரு நீர்க்கோவை வன்சீதம் - அன்னமே
உள்ளுள்ளிக் காண்பாய் உளைமுலைரோகமும்போம்
கொள்உள்ளி தன்னால் வெகுண்டு''

**பொருள் :**

சன்னி, தலைவலி, முழங்கால்வலி, பீனசம், சீதம், மூலை நோய் என்பன போகும்.

## உப்பு

''அளத்தில் உறை நல்லுப்பனல் வாத மாற்றும்
களத்துநோய் தன்னைக் களையும் - கிளத்தகப
வாசுடைய வல்லைநோய் அட்டகுன்ம மும்போக்கும்
காசினியுண் மாதே கழல்''

**பொருள் :**

அனல்வாதம், வாதம், அட்டகுன்மம் என்பன போக்கும்.

## எலுமிச்சை

''தீதில் எலுமிச்சங்காய் சேர்முத்தோடத்தையுமுள்
வாதகபஞ் சூலையையும் மாகொடிய சாதி எனும்
சர்த்தி குன்மத் தையும் முட்டங்க மருந்தீட்டைதையும்
பித்த வெப்பையும் தணிக்கும் பேசு''

**பொருள்:**

எலுமிச்சை முக்குற்றங்களையும் வாதகபம், சூலை, வாந்தி குன்மம், மருந்தீடு பித்தம் வெப்பு என்பனவற்றைத் தணிக்கும்.

## எள்

''எள் மருந்தைக் கொடுக்குமே அனலாம் திண்மை தரு
முள்ளிலையைச் சேர்க்கும் உதிரத்தைத் தள்ளும் இரு
கண்ணுக்கு ஒளி கொடுக்கும் காசமுண்டாம் பித்தமாம்
பண்ணுக் கிடம்புரியும் பார்''

**பொருள்:**

எள், அனல், வன்மை, கபம், காச நோய், பித்தம் என்பன உண்டாக்கும். குரல்வன்மையைக் கெடுக்கும். விழிகளுக்கு ஒளி தரும். வயிற்றில் குருதியை வெளிப்படுத்தும்.

**ஓமம்**

''சீதசுரம் காசம் செரியா மந்தம் பொருமல்
பேதி இரைச்சல் கடுப்பு பேராமோ – இருமல்
பல்லோடு பல் மூலம் பகமில் நோயென் செயுயோர்
சொல்லொடு போமெனச் சொல்''

**பொருள்:**

சீதசுரம், காசம், செரியாமந்தம், பொருமல், பேதி, இரைச்சல், கடுப்பு, இருமல், பல்நோய்கள் என்பன தீர்க்கும்.

**ஓரிதழ் தாமரை**

''தாதுவை உண்டாக்கும் தனிமேகத்தைத் தொலைக்கும்
மாதரவர் மேனிக் கழகுதரும் - சீதம்போம்
சீரிதழ் தாமரை வாழ் செய்ய மடவனமே
ஓரிதழ் தாமரையை உண்''

**பொருள் :**

தாதுவை உண்டாக்கும், மேகத்தைப் போக்கும், உடல் அழகுபெறச்செய்யும், சீதம் போக்கும்.

**ஓரிலைத்தாமரை**

''ஓரிலைத்தாமரையில் உற்ற குணத்தைக் கேளாய்
மார்பில் பாலில்லாத மங்கையர்க்கு-மோரில்
குடிக்கப்பால் உண்டாகும் கோரவன்மேகம்
பழக்குளிருக்குமோ பார்''

**பொருள்:**

தாய்ப்பாலில்லாதவர்களுக்கு பால் சுரக்க மோரில் தரவும். வன்மையுள்ள மேக நோய் தீர்க்கும்.

### கடுக்காய்

"தாடைக கழுத்தக்கி தாறி குறியிடவிட
பீடைசிலிப முதல் பேதிமுட ஆடையொட்டா
தூலமிடி புண்வாத சோணி காமாலை இரண்
டால் இடிப்போம் வரிக் காயால்"

**பொருள்:**

கன்னம், கனம், கண், நா, ஆண் குறி நோய்கள், யானைக் கால், அதிசாரம், பங்கு வாதம், அதிகப்பருமன், இடிப்புண்வாத சோணிவாதம், காமாலை; தாவர விரஞ்சுகள் என்பன போக்கும்.

### கண்டங்கத்திரி

"காசசுவாசம் சதித்த சயம் அந்த அனல்
வீசும் சுரம் சன்னி விளை தோட — மாகுறுங்கி
இத்தரையுனில் காவெரிகாரஞ்சேர்கண்டம்
கத்தரி உண்டால் ஆகில் காண்!

**பொருள் :**

காசம், அனல்வீசும் சுரம், குற்றம் என்பன போக்கும்.

### கருஞ்சீரகம்

'கருஞ்சீரகத்தால் கரப்பானோடு புண்ணும்
வருஞ்சிராய்ப் பீனசமும் மாறும் - மருந்தினால்
காய்ச்சல் தலைவலியும் கண்வலியும் போமுகலில்
வாய்ச்ச மருந்தெனவே வை"

**பொருள் :**

கரப்பான், புண், பீனசம், காய்ச்சல், தலைவலி, கண்வலி, என்பன நீங்கும்.

### கஞ்சா

"மூலக்கிராணி அறுமுன்புள்ள பேதிகட்கும்
சால மயக்கும் பசியும் சாருங்காண் - தூலஞ்செய்
வாதமொடு வைபவமும் போம் வன் கரப்பன் தொலையும்
கோதறு கஞ்சாச் சடைக்கு"

**பொருள் :**

மூலவாயு, கிராணி, பேதி, பசி, வாதம் என்பனவும் கரப்பானையும் நீக்கும்.

**கற்பூரம்**

"கிருமி சலதோடம் கிளைப்பு வலிப்பு சந்தி
பொருமு மந்தம் அங்கிப்பட்டபுண் எரி சுரங்கள்
வாந்தி பித்தம் சீதமுறு வாதம் செவிமுக நோய்
சாந்திக் கற்பூரம் என்றால் அறி"

**பொருள் :**

கிருமி, பீனசம், வலிப்பு, சந்தி, மந்தம், வாந்தி, வாதம் என்பன போகும்.

**கத்தூரி**

சொல்ல வரும் வசியம் காந்தி சுகமுதல் அணுகும் பின்
மெல்லியலார் தமக்குவாதம் விருத்தியாம் தலைநோய்ஏகும்
பல்லுரு கபமும் தீரும் பகரொணா பலமுமுண்டா
மல்லடர் சன்னிகூட்டை மாறும் கத்தூரிக்காமே"

**பொருள்:**

தலைநோய், கபம், மூலம், சன்னி, சுரம் என்பன நீங்கி ஒளி உண்டாகும்.

**கத்தூரி மஞ்சள்**

"புண்ணும் கரப்பானும் போகாக் கிருமிகளும்
நண்ணு மந்தாக்கினியும் — வண்மலர்த்த
கொத்தே அளகமின்னே சுக்கிலமும் புந்தியுமாம்
கத்தூரி மஞ்சளுக்குக் காண்"

**பொருள்:**

கத்தூரி மஞ்சள், புண், கரப்பான், கிருமி, மந்தாக்கினி, என்பன போக்கும்.

**கற்றாழை**

பொல்லாமேகம் கடம் புழுச்சூலை குட்டரசமல்லா, மத்தம் பகரந்தரம் குன்மம் எல்லாம்விட்டேகுமரிக்கு எரிச்சல் கிரிச்சரமு மா குமரிக்கு மருண்டு

**பொருள்:**

கற்றாழை, மேகம், கபம், புழு, தலைகுட்டம், உன்மத்தம், பகரவந்திரம், வயிற்றுநோய் பித்த கிரிச்சரம், போக்கும்.

### காட்டு ஏலம்

தீராத வாந்தி சிலேத்தும் அதிசாரம்
போரா அருசி பித்தம் பேருங்காண். சோராமல்
காட்டு ஏலம் வார்குழலே காராம்பரிமளம்சேர்
காட்டேலம் என்றுரைக்கும் காண்.

**பொருள்:**

வாந்தி, கபம், அதிசாரம், அலையின்மை பித்தம் என்பன நீங்கும்.

### குங்கிலியம்

''காததர நாசிநோய் கட்டிக்கடி மேகப்புண்
வாத வித்திரம் சூலை வன்குநக — மோதி வைத்
திக்கிலிருக்கத்து இடமுனலோவும் பயக்
குக்கில் இருக்க நமக்குள்''

**பொருள் :**

மூக்கு நோய்கள், கட்டி, மேகம், வாதம், சூலை என்பன நீங்கும்.

### குங்குமப்பூ

'விந்து நட்டம் தாகமண்டம் மேகசலம் சூலை கப
முந்து சுரம் பித்தங்கால் உச்சிவலி — முந்து கண்ணில்
குங்குமப்பூவோடு நோய் சர்த்தி இவை நீங்க என்றால்
குங்குமப்பூ வோரித்தழை கொள்'

**பொருள் :**

விந்துநட்டம், மேகம், சலம், சூலை, கபம், பித்தம். உச்சி வலி, என்பன நீங்கும்.

## குப்பைமேனி

"தந்த மூலம் பிணிதீ தந்திடும்புண் சர்வவிட
முந்து குன்மம் வாத உதிர மூலந்தினவு
சூலம் சுவாசம் தொடர் பீனசம் கபம்போம்
ஞாலம் கொண் மேனியதனால்"

**பொருள்:**

பல்வலி, புண், அனைத்துவிடம், குன்மம், மூலத்தினவு, சூலை, சுவாசம், பீனசம், கபம் போக்கும்.

## கையான்

"குரல்கம்மல் காமாலை குட்டமொடுசோபை
உரல் பாண்டு பன்நோய் ஒழியும் — நிரல்சொன்ன
மெய்யாந்தகரையொத்த மீளியண்ணு நற்புலத்து
கையாந்தகரை ஓத்தக்கால்"

**பொருள்:**

குரல் கம்மல், காமாலை, குட்டமொடு, பாண்டு, பலநோய் என்பன நீங்கும்.

## கோரோசனை

"நீரிழிவு மேக சுர நீங்கா அனல் வேகம்
சூரிய சூன்மாதம் குழந்தைகள் நோய் — பார்கபம்
வீறு மசூரியும் போம் வேதாம் தனிலிரண்டாய்
கூறும் கோரோசனை கட்கு"

**பொருள்:**

நீரிழிவு, மேகம், அனல்வேகம், உன் மாதம், பிள்ளைகள் பிணி, கபம் என்பன போகும்.

## சர்க்கரை

"அருந்து மருந்திற்கு அனுபானமாக
பொருந்துமடாய் வாந்தி பித்தம் போக்கும் - வந்தருசி
நீக்கும்மதி கபத்தை நின்று மகிழ்ச்சியை
உண்டாக்கு நறுஞ் சர்க்கரை"

**பொருள்:**

அனுபானம், வாந்தி, பித்தம், நீக்கும் இனிப்பு ருசி இன்பம் அளிக்கும்

### சிவனார்வேம்பு

"சாய்க்கு இடி புண் பழம்புண் சருமக்குட்டம் பிளவை
தீக் கழுகால் வன் பெருநோய் சிந்துமா - நோய்க்கு
விதையாதி வேம்பினால் மெய்க்கழகு காலை
உதையாதி வேம்பினால் உண்"

**பொருள்:**

புண், குழிப்புண், பழம்புண் குட்டம், பிளவை என்பன தீரும்.

### சேங்கொட்டை

"தாதுவும் புருணமுமாம் தத்துரு பரங்கிப்புண்
கோதுபுரி இருமைக் கட்டினங்கள் - சாதும்
கரிமுகி ஊறல் கரப்பான் திமிர்போம்
எரி முறி நெய்யால் என்று அறி"

**பொருள்:**

தடிப்பு, பரங்கிப்புண், சரும்படை, அனல், ஊறல், கரப்பான் திமிர்போகும்.

### சிற்றாமுட்டி

அத்திசுர முதலனந்த சுரம் பித்தமும் போ
மெத்தவிழிக் கொளியாம் வீறு தைலத்திற்காம்
நற்றாமரை தருவு நாடு எழில் திருவே
சிற்றா முட்டித் தூரை செப்பு"

**பொருள் :**

என்பு, சுரம், பித்தம், விழிக்குள்ள நோய் என்பன நீங்கும்

### தண்ணீர்விட்டான் கிழங்கு

"நீரிழிவைப் போக்கும் நெடுநாள் சுரத்தை எலா
மூரை விடுத்தோட உறுக்கும்காண் — நாரியரே
வெண்ணீர் பெய் சோமநோய் வெட்டை அனல் தணிக்கும்
தண்ணீர் விட்டான் கிழங்கு தான்"

**பொருள் :**

நீரிழிவு, நாள்பட்ட சுரம், சோம நோய், அனல் என்பன போக்கும்.

**தழுதாழை**

''கடிவிடமும் காணா கடிவிடமு மாத
இடுவிடமும் ஓடும் இதுவன்றி - நெடியவிழி
கன்னிகையே மேகம் கணக்காய்ச்சல் மாந்தமும்போம்
சின்னி இலைக்குத் தெரிந்து''

**பொருள் :**

கடிவிடம், காணாக்கடி, இடுவிடம், மேகம், கணம், காய்ச்சல், மாந்தம் போகும்.

**தாமிரம்**

தாம்பிரத்தால் சொறிபித்தம் சந்நிலமுவை கபம்
வீம்பார் பிலிகமந்தம் வெண்மேகம் — தேமலை
சூதகநோய் பிண்கிரந்தி தோட சுவாசம் கிருமி
தாது நட்டம் கண்ணோய் போம் சாற்று''

**பொருள்:**

இரத்தபித்தம், சற்றிபாதம், வழுவை, பெருவயிறு கபாதிக்கம், பிலிகம், செரியாமை, வெண்குட்டம் பித்தகபம், இரத்தகுன்மம், கிரணம், திரிதோட காசம், கிருமி, தாது வட்டம், விழி நோய் என்பன தீரும்.

**தாளிசபத்திரி**

''நாசிகளுக்குப் பிணிகள் நாட்பட்ட காசம்
சுவாச அருசி வமணங்கால் — வீசி வரு
மேகமந்தம் அத்தி சுரம் விட்டேகும் தாளிசத்தா
லாகும் சுகப் பிரசவம்''

**பொருள்:**

பீனசம், சுவாசம், சுவையின்மை, மேகம், மந்தம், அத்தி சுரம் விட்டுப் போகும் நன்முறையில் மகப்பேறு உண்டாகும்.

## திரிகடுகு

''திரிகடுகால் சீதபித்தம் சிகுலை நோய்க்கீட
எரிக்கடுதே ஈளை இருமல் முடுக்கு தெரிசந்நி
யாமழிசி அபஸ்மாரம் அற்புதப்புண்
வீசு சர்க்கரா நோய் போம் விள்''

**பொருள்:**

திரிகடுகு, சீதம், பித்தம், ஈளை, இருமல், சந்நி, உன்மாதம், புற்று, புண் என்பன தீரும்.

## திப்பிலி

''இருமல் குன்மம் இரைப்பு சயப்பிணி
ஈளை பாண்டு சந்தியாசம் அரோசகம்
பொருமல் ஊதை சிரப்பிணி மூர்ச்சை நோய்
பூரிக்கும் சலதோடம் பீலிகமும்
வருமலப் பெருக்கோடு மகோதரம்
வாதமாதி முத்தோடம் சுரக்குளிர்
பெருமலைப்புரி மேகப்பிடகமும்
பேருந்திப்பிலிப் பேரங் குறைக்கவே''

**பொருள்:**

இருமல், குன்மம், இரைப்பு, சயம், ஈளை, பாண்டு, சந்நி, யாசம், சுவையின்மை, பொருமல், ஊதல், சிரப்பிணி, மயக்கம் நோய், சலதோடம், ஈரல் வீக்கம் வாதம், முத்தோடம், சுரம், குளிர், மேகம், என்பன தீரும்.

## துளசி

''ஐயம் வயிறுளைச்சல் அத்திசுரம் தாகம்போம்
பையசுரம் மாந்தம் பறக்கும்காண் — மெய்யா
வாயின் அரோசகமும் போம் வன்காரஞ் சூடுள்ள
தூய துளசிதனைச் சொல்''

**பொருள்:**

ஐயம், வயிறு உளைச்சல், அத்தி சுரம், நீர்வேட்கை, மாந்தம் நீங்கும்.

### தூதுவளை

"காதுமந்தம்கா தெழுச்சி காசம் இனவுமத
ஓதுமந்த முத்தோட உட்சூலை தாதுநட்டம்
மீதுளைப்பத்திரியை மேவச் செய் லாராய்தோர்
தூதுளைப் பத்திரியைத் துய்த்து"

**பொருள்:**

காதுமந்தம், எழுச்சி, காசம், இனவுமதம், முத்தோடம், உட்சூலை, தாதுநட்டம் என்பன தீரும்.

### தேற்றான்

"பிரமிவெள்ளை வெப்புருசி பேராக் கடுப்போ
எரிகிரிச்சரம் புண்ணு மின்றாம் அருமந்த
தேற்றான்கொட்டை அஃதோர் திட்டமருந்தாகும்
கூற்றாங்காண் மாதேநீ கொள்"

**பொருள்:**

பிரமியம், வெள்ளை, வெப்புச்சுவை கடுப்பு, எரியும் அடைப்பு, புண் இவற்றைப் போக்கும்.

### நாவல்பழம்

"மாந்தம் விளையும் வலி கரப்பான் உண்டாகும்
சேர்ந்த தொரு நீரிழிவும் சேருமே - நாந்தலொடு
வாய் அங்கடுப்பும் வரும் கொதிப்பும் தாகமும்போம்
தூய நாவல் பழத்தால் சொல்"

வெப்பம், மந்தம், உடல்நோவு, கடுவன், சீததாகம என்பன உண்டாகும்.

### நிலாவாரை

"நிலாவாரையின் குணந்தான் நீ கேள் மயிலே
பல மூலவாயு வெப்பு பாவை — சில கிரந்தி
பொல்லாத குன்மம் பொருமு மலக்கட்டுமுத
எல்லாம் அகற்றும் காண்"

பொருள் :

நிலாவாரை பல வகை மூலங்கள், வாயு, அனல், கிரந்தி, குன்மம், மலக்கட்டு என்பன அகற்றும்.

**நிலவேம்பு**

"வாதசுர நீரேற்றம் மாற்றும் சுரதோடம்
காதம் என ஓடும் — மாதரசே
பித்தமயக்கம் அறுக்கும் பின்பு தெளிவுகொடுக்கும்
சுத்த நில வேம்பின் தொழில்"

பொருள் :

வாதசுரம், பீசம், சுரதோடம், பித்தமயக்கம் என்பன நீக்கும்.

**நெல்லிக்காய்**

"பித்த அனல் ஐயம் பீனசம் வாய் நீர்வாந்தி
மத்த மலக்கட்டு மயக்க இல் — ஒத்தஉரு
வில்லிக்காயம் மருங்கா எனாட் காலம் சேர்ந்தே
நெல்லிக்காயம் மருந்தூண்"

பொருள்:

பித்த அனல், ஐயம், பீனசம், நிர்வாந்தி, மலக்கட்டு என்பன தீரும்.

**நெல்லிக்காய் கந்தகம்**

"நெல்லிக்காய் கந்திக்கு நீள் பதினெண் குட்ட மந்தம்
வல்லைக் கவிசை குன்மவாயு கண் நோய் பொல்லா
விடக் கடிவன் வன்மேகநோய் வீறு சுரம் பேதி
திடக்கிரகணி கபம் போந்தோர்"

பொருள்:

பதினெட்டுக்குட்டம், மந்தம், வல்லை, கவிசை, குன்மம் வாயு, விடக்கடி, மேகநோய், வீறுசுரம், பேதி, கிரகணி, கபம் என்பன நீங்கும்.

**நேர்வாளம்**

"ஓதில் வாதத்துறு மலம் பன்நோய் விலகும்
பேதி மருந்தில் பெரிதாகும் - வாதமறும்

சூர்வாளை ஒத்த விழிக் கொம்பனையே பண்டிதர் சொல்
நேர்வாளக் கொட்டைதனை நீ''

**பொருள்:**

பேதியாகும், மலக்கட்டு நீங்கும்.

**பஞ்ச லவணம்**

''நீராமை உப்பு தனை நெஞ்சுவலி மா குன்மம்
பேராக் கிராணி பிலிகமந்தம், தீராக்கல்
லிஞ்சு உப்பைக் குத்து நெய் மெய்ச் சூலையும் பறக்கும்
பஞ்ச உப்பைத்தின் எனில் பார்''

**பொருள்:**

நெஞ்சுவலி, குன்மம், கிராணி, பிலிகம் மந்தம் என்பன நீங்கும்.

**பவழம்**

'சுரதோடம் ஐயம் முத்தோட சுரம் காசம்
மருசி கீடத்தாலா மாலம் — பெரும்விந்து
நட்ட மதிதாக நாவரட்சி போம் ஒளியும்
கிட்டும் பவழத்தால் கேள்''

**பொருள்:**

சுரதோடம், ஐயம், சுரம், காசம், விந்து நட்டம், நாவரட்சி என்பன தீரும்,

**பரங்கிப்பட்டை**

''தாகம் பலவாதம் தாதுநட்டம் புண் பிளவை
மேகம் கடிகிரந்தி வீழ் மூலம் — தேகமுடனா
குட்டைப் பகந்தர மேற்கோள் மனம்போம் பரங்கிப்
பட்டையினை உச்சரித்துப் பார்''

**பொருள்:**

நீர்வேட்கை, வாதம், தாதுநட்டம், புண் பிளவை மேகம், கடி கிரந்தி, மூலம் பவுத்திரம் என்பன தீரும்.

**பன்னீர்**

"பன்னீர் மிகக் குளிர்ச்சி பாராய் சுகசந்தி
இந்நீர் உண்நேர் இளைப்பு அறும் — சந்நிகளும்
வாதபித்த ஐயமொடு மானே வியாகுலமும்
பூதலம் விட்டேகும் புகல்"

**பொருள்:**

குளிர்ச்சியாய் மனத்துயரைத் துடைக்கும். சந்நிநோய் விலகும்.

**புங்கநெய்**

"அங்கம் அழகிடும் வெற்பாம் புங்கின் நெய்தமக்கு
தங்கம் போல் காந்தியது தானுண்டாம் - திங்கள்முக
மானே கரப்பான் போம் வன்சொரியும் சிரங்கும்
தானே விலகும்எனச் சாற்று"

**பொருள்:**

உடல் அழகு உண்டாகும். கரப்பான் போக்கும், சொரி, சிரங்கை விலக்கும்.

**பெருங்காயம்**

"தந்தமேவ தந்த மூலத்தெழுபிணி சர்வஒக்காளத்திருட்சி கீடமா
அந்தவாத உதாவர்த்த அல்குல் நோய் மார்பணைம்கட்ட குன்மம் உதர
முந்து கர்ப்பத்தின் வித்திரஞ் சூலை உதிரப்பூச்சிசிலேத்து-மத்துறுவலி
வந்த மெய்க்கடுப்போடு இவை முற்றுமே மாயுநாறு காயங்கிடைக்கினே"

**பொருள்:**

பல்லின் சேடுகள், மூலம், வாந்தி விடம், வாதம், பிறப்பு உறுப்பு நோய்கள், குன்மம், உதரம், சூலை என்பன நீங்கும்.

**பெருஞ்சீரகம்**

"யோனிநோய் குன்மமுருட்டை மந்தம் பொருமல்
பேன மருகாசம் பீலிக இரைபீன வுரை

சேர்க்கின்ற வாதமும்போம் சீர்பெரிய சிரகந்தான்
மூக்கு நோயில்லை மொழி''

**பொருள் :**

யோனிநோய், குன்மம், மந்தம், பொருமல், காசம், பிலிகம், வாதம் என்பன தீரும்.

**பேரீச்சை**

''பேரீந்தெனும் கனிக்கு பித்தமூர்ச்சை சுர
நீரார்ந்த வைய நெடுந்தாகம் — பேசா
இரத்த பித்த நீரிழிவு இளைப்பு அரோசி
உரத்த மலக்கட்டு மறுமோர்''

**பொருள்:**

பித்தம், மயக்கம், நிர்வேட்கை, இரத்த பித்தம், சுரம், கபம், நீரிழிவு என்பன போகும்

**பொன்னாங்காணி**

''காசம் புகைச்சல் கருவிழிநோய் வாத அனல்
கூசும் பீலிகம் குதாங்கரநோய் பேசிவையா
என்னாங் காணிப் ப்டிவமே ஆம் செப்பல் என்னை
பொன்னாங் காணிக் கொடியைப் போற்று''

**பொருள்:**

காசம், இருமல், கருவிழி நோய் வாதம், இலப்பம் பிலிகம் என்பன தீரும்.

**மண்டூரம்**

''இட்டம் ஒன்றால் சோபை கிளைவிக்கம் அத்திசுரம்
துட்டவிடபாகம் சுவாச கபம் — கெட்ட தொடும்
பாண்டிரும நீராமை பாழும் பிரமியமும்
தாண்டிவிடு முண்டி இரத்த தாது''

**பொருள் :**

மண்டூரத்தால் வாதசோபை, விக்கம், அத்திசுரம், விடபாகம், இரைப்பை கயரோகம், நீராமை என்பன நீங்கும்.

**மனோசிலை**

''மடலரிதாரத்தில் வருங்கரடிரண்டு
உடல்விடங்களை களையும் உண்மை — கொடிய குட்டம்
காய்ச்சல் நடுக்கல் அஜகல்லி இரைப்பு சிலந்தி
பேச்சறு மனோ சிலைக்குப்பேசு''

அரிதாரம்; உடல்விடம், குட்டம், காய்ச்சல், சுவாசம், சிலந்தி என்பன போக்கும்,

**மிளகு**

' சீதசுரம் பாண்டு சிலேத்தும் கிராணி குன்மம்
வாதம் அருசி பித்தமா மூலம் — ஓதுசந்நி
சாயம் அபஸ்மார அடன்மேகம் காச இவை
நாசம் கறி மிளகினால்''

**பொருள்:**

சீதசுரம், பாண்டு, கபம், கிராணி, குன்மம், வாதம், சுவை யின்மை, பித்தம், மூலம், சந்நி மன நோய்கள், மேகம்: காசம் என்பன தீரும்.

**முடக்கற்றான்**

''சூலைபிடிப்பு சொறி சிரங்கு வன் கரப்பான்
காலைத்தொடுவளியும் கனமலமும் — சால
கடக்கத்தான் நாடிவிடும் காசினியை விட்டு
முடக்கத்தான் தன்னை மொழி''

**பொருள்:**

சூலைபிடிப்பு, சொறி சிரங்கு, கரப்பான் அபான வாயு மலமும் தீரும்.

**வசம்பு**

''புறம்பாகி நஞ்சு, அற்புதபுண்வலி விடபாகம் குன்மம்
சூம்பார் இரத்த பித்தம் முகநாற்றம் வன் சூலை சந்தி
வீம்பாம் பைசாசம் பீலிகம் சிலிபாதம் வீறிரு
நாம் பாக் கிருமி இவைஏகும் மாசி வசம்பினுக்கே''

**பொருள்:**

புற்று, வலி, நஞ்சு, குன்மம், பைசாசம், இரத்தபித்தம் தீரும்.

**வல்லாரை**

"அக்கரநோய் மாறும் அசுலும் வயிற்றிழிவு
தக்க இரத்தக் கடுப்பு தான் ஏகும் — பக்கத்தி
எல்லாரையும் மருந்தென்றே உரைத்து நன்மனையுள்
வல்லாரையை வளர்த்து வை"

**பொருள்:**

இரத்தக்கடுப்பு, வாய்ப்புண், நீங்கும். கழிச்சல் போகும்.

**வெங்காரம்**

"சொறி, புடை என் குன்மதன்மை செரியா ரசம்
பறி கிராணி கல்லூமை பன்நோய் நெறியை
தடங்கணம் பங்க, கிருமி சர்ப்புவிடம்சற்று
இடங்கணம் கலச்சி சம்போம் எண்"

**பொருள்:**

சொறி, என் குன்மம், கபம், கணம், கிருமி பாம்புக்கடி, சந்தி, என்பன தீரும்.

**வெண்சங்கு**

"கசிவாம் இரத்த பித்தம் கண்நோய்கள் ஏகும்.
பசியாகும் வாதம் பறக்கும் — இசிவுடனே
தங்கு நானாவிரணந்தான் அகலுமே வெள்ளை
சங்கமது உண்டேயிற் றான்"

**பொருள்:**

இரத்தபித்தம், கண்நோய்கள், வாதம் விரணம் என்பன தீரும்.

**வெள்ளைப்பாடாணம்**

"வெள்ளைப்பாடாணம் விடக்கடி தீரும் பூசக்
கொள்ளை சுரம்தோடம் கோரோசந்தி — தொள்ளை உறு
நாசிப்புண் வாய்ப்புண் அளை கிரந்திபோம் உண்ண
வாசிக்கும் கும்ப முலையாய்"

பொருள்;

வெளித்தட விடக்கடி தீரும்! கொள்ளை சுரம், தோடம், சந்நி, நாசிப்புண், வாய்ப்புண் அழுகிய கிரந்தி என்பன உண்ணத்தீரும்.

**வேப்பிலை**

கிருமி குட்டமந்தம், கெடுவிடம் சுரங்கள்
பெருமிய லகூரிகையின் புண் களொருமிக்க
நிம்பத்து இலை இருக்க நீடுலகில் நீங்காமல்
கம்பத்திலை இருக்கக் காண்.

பொருள்:

கிருமி, குட்டம், மந்தம், சுரம், அம்மை, புணர் என்பன தீரும்.

**வில்வம்**

"வில்வத்தின் வேருக்கு வீறு குன்மவாயு கபம்
சொல்ல ஒண்ணா பித்தம் தொடர் சோபை, வல்லகப
தாக சுர நீர்ஏற்றம் சன்னியொடு மெய்வலியும்
வேகமொடு நீங்குமே விள்"

பொருள்:

வில்வவேர், குன்மம், வாயு, கபம், பித்தம் சோபை, கபம், தாகம், சுரம், நீர்க்கோவை, சன்னி, உடல்வலி என்பன போக்கும்.

**வேலிப்பருத்தி**

"ஆலித்தெழுந்த நோயத்தனையும் தீருமே
வேலிப்பருத்தியதன் மெல்லிலையால் - வேல்ஒத்து
கண்டிக்கும் வாதம் சன்னிதோடம் போம்
முண்டிக்தும் வாசனையா ஓது"

பொருள்:

நோய்கள் எல்லாம் தீரும், வேலிப் பருத்தியின் இலையால் வாதம், சன்னிகள், முக்குற்றங்கள் என்பனவும் தீரும்.

# அகத்தியரின் பெயரில் அச்சான நூல்கள்

| | | |
|---|---|---|
| 1 | அடுக்கு நிலை போதம் | |
| 2 | அதிசய சூத்திரம் | 27 |
| 3. | அமுதக்கலை ஞானம் | 1200 |
| 4. | அனுபோகவைத்தியக் களஞ்சியம் | |
| 5. | சதாசிவ தியானம் | |
| 6. | ஆயுர் வேத சுருக்கம் | |
| 7. | ஆயுள் வேதம் | 1200 |
| 8. | இடைபாகம் | 400 |
| 9. | இரண நூல் | |
| 10. | இரண வைத்தியம் | |
| 11. | இரண்டாயிரம் | |
| 12. | இராஜாங்க நாடி | 25 |
| 13. | இலக்க சௌமிய சாகரம் | |
| 14. | இலட்சண காவியம் | 1000 |
| 15. | உயர் ஞானம் 1 தனி ஞானம் | |
| 16. | நயன விதி | 500 |
| 17. | நாலு காண்ட வைத்திய காவியம் | |
| 18. | பரிபாஷை திரட்டு | |
| 19. | பரிபாஷை | 300 |
| 20. | பரிபூரணம் | 400 |
| 21. | பரிபூரணம் | 1200 |
| 22. | பள்ளு | 200 |
| 23. | பன்னிரு காண்டம் | 200 |
| 24. | பன்னீராயிர காவியம் | |
| 25. | அகத்தியர் முன் 80 பின் 80 | |
| 26. | பூரண காவியம் | 1000 |
| 27. | பூரண சூத்திரம் | 216 |
| 28. | மகா திராவகம் | 800 |

| | | |
|---|---|---|
| 29. | மலை அகராதி | |
| 30. | மாந்திரீக காவியம் | 1000 |
| 31. | லோக மாரணம் | 110 |
| 32. | லகார சூத்திரம் | 16 |
| 33. | லகார சூத்திரம் | 200 |
| 34. | லகார மதி வெண்பா | 100 |
| 35. | வாத காவியம் | 1000 |
| 36. | வாத சுருக்கம் | 12 |
| 37. | வாத சூத்திரம் | 300 |
| 38. | வாத சௌமியம் | 1200 |
| 39. | வைத்திய இரத்தின சுருக்கம் | 360 |
| 40. | வைத்தியக் களஞ்சியம் | |
| 41. | வைத்திய காண்டம் | |
| 42. | பாண்டு வைப்பு | 600 |
| 43. | வைத்திய காவியம் | 1000 |
| 44. | வைத்திய காவியம் | |
| 45. | வைத்திய காவியம் | 1500 |
| 46. | வைத்தியக்கும்மி | |
| 47. | வைத்திய சதகம் | |
| 48. | வைத்திய சில்லரைக் கோவை | |
| 49. | பால வாகடம் | 300 |
| 50. | வைத்திய பூரணம் | 205 |
| 51. | வைத்தியம் | |
| 52. | வைத்திய வல்லாது | 600 |

**டாக்டர். எஸ். பிரேமா. எம். டி. (சித்தா)**
**(சித்த மருத்துவ நூலோதி — தமிழ்ப் பல்கலைக்கழகம்)**

# துணை செய்த நூல்கள்

1. டாக்டர். எஸ். பிரேமா, எம். டி. (சித்தா) — சித்த மருந்துவ நூலோதி — தமிழ்ப்பல்கலைக் கழகம் — தஞ்சாவூர்.

2. டாக்டர். ந. வி. செயராமன் — பள்ளு இலக்கியம். மணிவாசகர் நூலகம் — சிதம்பரம் சனவரி 1980.

3. ஆறு. இராமனாதன் — நாட்டுப்புறப் பாடல்கள் காட்டும் தமிழர் வாழ்வியல் — மணிவாசகர் நூலகம் 1982.

4. ஆனந்தகந்தம் — சரசுவதி மகால் நூலகம் — தஞ்சாவூர்.

5. அகத்தியர் — ந. சி. கந்தையா பிள்ளை — 1948.

6. அகத்தியர் வரலாறு — சை. சி. கழகம் 1950.

7. நற்றிணை — புலியூர்கேசிகன் — அருணா பதிப்பகம் சென்னை.

8 ஐங்குறுநூறு — புலியூர்கேசிகன்—அருணா பதிப்பகம் சென்னை. 1962

9. புறநானூறு — புலியூர்கேசிகன்—அருணா {பதிப்பகம் சென்னை.

10. கலித்தொகை — புலியூர்கேசிகன் — அருணா பதிப்பகம், சென்னை.

# வழக்குச்சொற்பட்டியல்

| | | |
|---|---|---|
| அண்டை | — | இடுப்பு |
| அடிபற்றாமல் | — | அடிபிடிக்காமல் |
| அரக்கப்பொடித்தல் | — | நன்றாகப்பொடிசெய்தல் |
| அரிசி உடைத்தல் | — | அரிசியை திருகையிலிட்டு ஆட்டுதல் |
| அரிந்து | — | சீவிக்கொண்டு |
| அருவிக்கொண்டு | — | உராய்ந்து, தடைசெய்து, |
| அவுத்துவாய்க்கட்டு | — | அகட்டுவாய் |
| அற்றுவிழும் | — | நீங்கிவிழும் |

ஆ

| | | |
|---|---|---|
| ஆலத்திக்கற்பூரம் | — | சூடம் |

ஈ

| | | |
|---|---|---|
| ஈருள்ளி | — | வெங்காயம் |

உ

| | | |
|---|---|---|
| உரைத்து | — | இழைத்து, தேய்த்து, |
| உமுண்டி | — | உள்ளங்கையில் வைத்து விரலால் தேய்த்து |

ஒ

| | | |
|---|---|---|
| ஒருக்காலம் | — | ஒருவேளை, ஒருமுறை |
| ஒரு கடி | — | விரலளவு |
| ஒரு நிறை | — | ஒரே அளவு |
| ஒரு விசை | — | ஒரு முறை |

ஓ

| | | |
|---|---|---|
| ஓக்காளம் | — | வாந்தி |

க

| | | |
|---|---|---|
| கக்கல் | — | வாந்தி |
| கழன்று விடும் | — | பிரிந்துவிடும் |

| | | |
|---|---|---|
| கண்டிப்பு மேலே | — | விக்கத்தின் மேலே |
| கண்டமாய் நறுக்கி | — | துண்டுகளாக நறுக்கி |
| கண் வாங்கும் | — | குறையும் |
| கவிச்சு | — | புலால் |
| கறடு | — | முழங்கால் முட்டி |

**கா**

| | | |
|---|---|---|
| காற்றுவாக்கில் | — | காற்றுவீசும் பகுதியில் |
| காலமே | — | காலையில் |
| காங்கை | — | உடற்சூடு, வெப்பம். |

**கி**

| | | |
|---|---|---|
| கிண்டி | — | கிளறி |

**கு**

| | | |
|---|---|---|
| குறுக்கி | — | வற்றும்படி |
| குடுக்கை | — | சுரைஓடு |
| குறிதெரிந்த புண்ணியவான்கள் | } | கணித்து மருத்துவம்செய்யும் மருத்துவர்கள் |

**கொ**

| | | |
|---|---|---|
| கொத்துக்கட்ட | — | தாயத்து, குளிசம் கட்ட |
| கொதிக்கவைத்து | — | காய்ச்சி |
| கொட்டுவாய் | — | கடிவாய் |

**ச**

| | | |
|---|---|---|
| சருகு | — | உலர்ந்த இலை |
| சமித்தல் | — | சீரணித்தல் |

**சீ**

| | | |
|---|---|---|
| சீலை | — | துணி |

**சு**

| | | |
|---|---|---|
| சுண்ட | — | வற்ற |
| சுடர்கற்பூரம் | — | சூடம் |
| சுராபானம் | — | கள், சாராயம் |

**த**

| | | |
|---|---|---|
| தண்ணீர்தெளிவு | — | கலங்காத மேல் தண்ணீர் |
| தலை முழுகல் | — | உடல் முழுவதும் குளித்தல் |

தள்ளுபடி — விலக்குதல், நீக்குதல்
தறித்து — நறுக்கிக் கொண்டு

**தி**

திருகை — அரிசி, தானியங்களை அரைக்கும் அரவை இயந்திரம்.

**து**

துவைத்து — நனைத்து, தோய்த்து

**தூ**

தூமை — மாதவிலக்கு
தூரக்கையில் — வெகு தொலைவில், சேய்மையில்

**தே**

தேங்காய் நெய் — தேங்காய் எண்ணெய்

**தொ**

தொண்டைத்தார் — தொண்டைப் புண்

**ந**

நஞ்சு முளை — நுனியில் உள்ள பருப்பு

**நா**

நாகப்பாம்பு — மண்புழு
நாசியில் — மூக்கில்

**நி**

நிசிநீர் — முன்னிரவு ஊற்றிய நீர்

**நீ**

நீச்சுத்தண்ணீர் — பழைய சோற்று நீர்
நீர் சுண்டின பிறகு — சாறு வற்றிய பின்பு

**நெ**

நெருப்புக்கும்பி — கும்மட்டி அடுப்பு.

**நே**

நேரம் — வேளை

**நொ**

நொந்து — வலியினால் வருந்தி

நோ

நோக்காடு — வலி

ப

பற்பமாக்கி — சாம்பலாக்கி
பழுப்பு — உலர்ந்த,மஞ்சள் நிறமான இலை
பனை வெட்டு — பனை வெல்லம்
பதனம்பண்ணி — பக்குவமாகக் காத்து
பழஞ்சோறு — பழையது

பி

பிசறி — கலந்து
பிட்டு அவியல் — புட்டு அவியல்
பிடுங்கி — வேரோடு பெயர்த்து
பிட்டுவைத்து — பிரித்து

பு

புறணி — மேற்தோல்

ம

மறுகால் — மறு முறை
மத்தித்து — குழப்பி, கலந்து
மயல் — மயக்கம்

மா

மாற்று — மறு வழியில்
மாங்கொட்டை மெழுகு — மாங்கொட்டைப்பிசின் கோந்து

மெ

மென்று விழுங்குதல் — வாயில் அடக்கி கரைந்தவுடன் உண்ணுதல்
மென்று இறக்கி — வாயில் அடக்கி கரைந்தவுடன் தொண்டைக்குச் செலுத்துதல்.

மே

மேற்புரணி — மேல்தோல்.

**வ**

| | |
|---|---|
| வற்றின | — காய்ந்து போன |
| வட்டி | — கிண்ணம் |
| வற்றக்காய்ச்சல் | — முழுவதும் காய்ந்து போதல். |
| வத்திரகாயம் | — துணிகொண்டு சலித்தல். |

**வா**

| | |
|---|---|
| வார்த்து | — ஊற்றி |

**வி**

| | |
|---|---|
| விழுக்காடு | — பங்கு |

**வெ**

| | |
|---|---|
| வெள்ளாட்டு வற்றல் | — உப்புக்கண்டம் |
| வெள்ளைப்பூண்டு | — உள்ளிப்பூண்டு |
| வெள்ளை வெங்காயம் | — உள்ளிப்பூண்டு |

**வே**

| | |
|---|---|
| வேடுகட்டி | — துணியால் மேற்புறம் மூடி. |

முற்றும்

# வேண்டுகோள்

கருணையுள்ளங்கொண்ட நம் முன்னோர்கள் அரிய பெரிய இலக்கியங்களையும், பிறவற்றையும் பனை ஓலைகளில் எழுதிச் சுவடிகளாக நமக்குத் தந்தனர். அவை பல்வேறு இடங்களில் முடங்கி உள்ளன. சுவடிகள் பழுதடைவதற்குமுன் சரசுவதி மகாலுக்கு அன்பளிப்பாகக் கொடுத்துதவினால், அவை மக்களுக்குப் பயன்படும்.

மகாலுக்குக் கொடுப்பதன் மூலம், சுவடி தந்தவர்களும், சுவடி எழுதியோரும் அழியாப்புகழை, பெருமைசால் சரசுவதி மகால் உள்ளளவும் பெறுவர். அவை பதிப்பாகி வருமாயின் சுவடி தந்தார் பெயர் இடம்பெறுவதோடு, அப்பதிப்பில் ஐந்து பிரதிகளும் பெறுவர்.

எனவே, நாம் பெற்ற பேறு பெறுக இவ்வையகம் என்ற எண்ணமுடைய நற்பண்பாளர்கள் தம்மிடமுள்ள சுவடிகளைச் சரசுவதி மகாலுக்குத் தந்துதவ வேண்டுகிறேன்.

**மாவட்ட ஆட்சித்தலைவர்**
**மற்றும் இயக்குநர்**
*சரசுவதி மகால் நூலகம்.*

தஞ்சாவூர்